தாய் வீடு
THAIVEEDU உள்ளும் புறமும் ஜனவரி 2008



## கத்தி இன்றி இரத்தம் இன்றி வங்கிகள் கொள்ளை:

# அதிகரிக்கும் ‘அடையாள’த் திருட்டு

நாம் வளர்ந்த காலங்களில் கத்திமுனையில் வழிப்பறி, துப்பாக்கி காட்டி வங்கிகளை வங்குறோத்தாக்கிய பல கதைகளைக் கேட்டிருப்போம். ஆனால் இப்பொழுதெல்லாம் வங்கிகளதும், தனிப்பட்டவர்களதும் பணமும் உடமைகளும் அவர்களை அறியாமலேயே முக அறிமுகம்கூட இல்லாதவர்களினால் கொள்ளை அடிக்கப்பட்டு வருவதை நாளாந்தம் கேள்விப்பட்டுக் கொண்டிருக்கின்றோம். கனேடியர்களைப் பொறுத்தவரை 2006ஆம் ஆண்டில் பதினைந்தில் ஒரு கனேடியப் பிரஜை Identity theft (தனியாள் அடையாளக் களவு – எனக்குத் தெரிந்த தமிழ் மெழிபெயர்ப்பில்!) மூலமாகத் தமது செல்வங்களை இழந்திருக்கிறார்கள் எனக் கணக்கீடுகள் கூறுகின்றன. கனேடிய நாட்டின் ஆர்.சி.எம்.பி. பிரிவில் 2006ஆம் ஆண்டு வரை இப்படிப்பட்ட களவுகளைப் பற்றி துப்புத்துலக்க எந்தப் பிரிவும் இல்லை. இப்போது உருவாக்கப்பட்டிருக்கும் இத்தப் பிரிவின் வளர்ச்சி எதிர் பார்த்ததை விடவும் மிக அபரிமிதமாகத் தேவைப்படுவதாகக் கூறப்படுகிறது.

சரி, Identity theft என்றால் என்ன? இந்தப் புதியமுறை மூலமாக கயவர்கள் எப்படி மற்றவர்களினதும் வங்கிகளினதும் பணத்தைக் கொள்ளை அடிக்கிறார்கள் என்று பார்ப்போம்.

இந்தக் கட்டுரையை வாசிக்கும் உங்களை ஒரு உதாரணமாக எடுத்துக்கொள்வோம். நீங்கள் ஒரு வங்கியில் ஒரு கணக்கை ஆரம்பிக்கிறீர்கள். அல்லது ஒரு கடன் அட்டையை விண்ணப்பிப்பதற்கோ அல்லது ஒரு தொலைபேசி இணைப்பை ஏற்படுத்தவோ பின்வரும் 7 முக்கியமான தகவல்களை ஒரு விண்ணப்பத்தில் அல்லது முகமே தெரியாத ஒருவருக்கு தொலைபேசி வாயிலாக கொடுப்பீர்கள். இந்த 7 விடைகளுமே உங்களை நீங்கள் யார் என்று அந்த நிறுவனத்திற்கு அடையாளப் படுத்தும் காரணிகளாக இருக்கும். இதன் அடிப்படையில் நீங்கள் கேட்டுக்கொண்ட சேவைகளை உங்களுக்காக ஆரம்பித்து வைப்பார்கள். அந்த 7 காரணிகளும் பின்வருவனவாகும்.

29ம் பக்கம் பார்க்க...

### திருமதி. சந்திரவதனி புனிதவேல் அவர்கள் காலமானார்



அன்னார் தாய்வீடு பத்திரிகையின் கட்டுரையாளர்களான
திரு. குமார் புனிதவேல் அவர்களின் அன்பு மனைவியும்,
செந்தூரன் புனிதவேல் அவர்களின் அன்புத் தாயாருமாவார்.
அன்னாரின் பிரிவுத்துயரில் தாய் வீடு பங்குகொள்கிறது.



ஒன்ராறியோ மாகாண ரீதியில் நடத்தப்பட்ட 13 வயதுக்கு உட்பட்ட காராத்தே தனிச் சண்டைப் போட்டியில் மிசிசாகாவைச் சேர்ந்த ஜானுசா யோகராஜ் (வயது 10) தங்கப்பதக்கத்தைப் பெற்றுக்கொன்டார். இவர் யங்மென் கராத்தே பயிற்சிக் கல்லூரியில் இக்கலையைப் பயின்றுவருகிறார்.

தாய் வீடு
THAIVEEDU உள்ளும் புறமும்

# 2008

ஏகப்பட்ட எதிர்பார்ப்புகளை இந்தப் புதிய ஆண்டின் மீது சுமத்தி விட்டு கடந்து போயிருக்கின்றது 2007. இலங்கையில் இருந்து வரும் துயரச் செய்திகளை மீறி மகிழ்ச்சி கொள்ள முடியவில்லை. புதுவருடத்தின் முதல் நாளிலேயே இழப்புக்கள் பற்றிய செய்திகளையே ஊடகங்கள் தருகின்றன. உயிர் இழப்புக்கள் ஈடுசெய்யக்கூடிய ஒன்றல்ல. நாம் இழப்புகளை மீறி எழுகின்ற பலத்தை எம் இதயங்கள் கொண்டிருக்க வேண்டும் என்பதே கடந்த கால அனுபவம்.

நான்காம் ஈழப்போர் வெடிப்பதற்கான சுவடுகளுடன் 2008 ஆம் ஆண்டை நாம் வரஏற்றிருக்கின்றோம். 2007ல் எம்மக்கள் அனுபவித்த இன்னல்களும் இழப்புக்களும் இன்னும் எத்தனைமடங்காகும் என்ற ஏக்கம் அதிகரிக்கின்றது.

தமிழரைப் பொறுத்தவரை ''மிக மகிழ்ச்சியாக'' என்று சொல்ல முடியாத அளவில், பிறந்திருக்கின்றது ஆங்கிலப் புத்தாண்டு.

பேரின ஆட்சியாளர்களால் கடும் பாதிப்புகளுக்கு உள்ளாகியிருக்கும் ஈழத்தமிழ்ச் சமூகம் ஸ்ரீலங்கா அரசின் ஒருதலைப்பட்சமான போர் நிறுத்த முறிப்பால் மேலும் கடும் இன்னல்களைச் சந்திக்கும் அபாயத்தை எதிர்நோக்கத் தொடங்கியுள்ளது.

குறிப்பாக சகல வன்முறைகளையும் பதிவு செய்து சர்வதேசத்திற்கு தெரியப்படுத்திக் கொண்டிருந்த கண்காணிப்புக் குழுவினர், இன்னலுற்ற பல பிரதேசங்களில் சேவைபுரிந்த தொண்டர் நிறுவனங்கள் என்பன வெளியேற்றப்படுகின்ற நிலையில், தொடரப்போகின்ற கொடூர வன்முறைகள் அனைத்துத் தரப்பாலும் மட்டுப்படுத்தப்பட்டு சொல்கின்ற செய்திகளாக அமையப்போகின்றன.

விடுதலைப்புலிகள் மீதான தடை, ஊடகத் தணிக்கை என்பன இலங்கை அரசால் நடைமுறைப்படுத்தக் கூடிய வாய்ப்புகள் மிக அதிகமாக உள்ள நிலையில், தொடரப்போகின்ற கொடூரங்கள் மூடிமறைக்கப்படக் கூடிய சூழ்நிலைகளே அதிகமாகத் தென்படுகின்றன.

இந்நிலையில் தொடர்கின்ற அவலங்களை வெளிப்படுத்தவல்ல ஆற்றல்களை புலம் பெயர்ந்து வாழ்கின்ற தமிழர்கள் மேம்படுத்திக் கொள்ள வேண்டும். ஈழத்தமிழர்களின் நியாயமான போரட்டத்தை அனைத்துலகத்தின் முன் காட்டவேண்டிய காலகட்டம் இதுவாகும்.

இந்த மண்ணில் தமிழர் என்ற அடையாளத்துடன் வாழும் நாம், கூட்டுச் செயற்பாடுகளினூடாக எம்மை வளர்ததுக்கொள்வது பல வகைகளிலும் எமக்குப் பலம் சேர்க்கும்.

உணர்வோம். விலகிக் கிடக்கும் கரங்களை ஒன்றாய் இணைப்போம்.

■ ■ ■



## சுயாதீன கலைத் திரைப்பட மையம் உலகில் உள்ள தமிழ்ப் படைப்பாளிகள் அனைவருக்குமான தமிழ்த் திரைக்கதை போட்டியை நடாத்துகின்றது.

முதலாவது பரிசு: 250 கனடிய டொலர்கள்
இரண்டாவது பரிசு: 150 கனடிய டொலர்கள்
மூன்றாவது பரிசு: 100 கனடிய டொலர்கள்

### போட்டி விதிகள்

- திரைக் கதைகள் தமிழ் மொழியில் இருத்தல் வேண்டும்.
- திரைக் கதை 5 நிமிடங்களுக்கு மேற்பட்டதாகவும் 15 நிமிடங்களுக்குட்பட்டதான துமான திரைப்படத்துக்குரியதாக இருத்தல் வேண்டும்.
- 12 புள்ளிகள் எழுத்துருவில், ஒளி அச்சில் அல்லது தட்டச்சில் 30 பக்கங்களுக் குட்பட்டதாக இருத்தல் வேண்டும்.
- 8x11 தாளில் ஒரு பக்கத்தில் மட்டும் தட்டச்சில் பிரதியாக்கப்பட்டிருக்க வேண்டும்.
- போட்டிக்கு அனுப்பப்படும் திரைக்கதை, ஏற்கனவே திரைப்படமாகவோ, நூல் வடிவிலோ வெளிவந்திருக்கக்கூடாது.
- இந்தத் திரைக்தை உரிமையாளராக, திரைக்கதையாசிரியர் இருத்தல் வேண்டும்.
- வேறு ஒருவரின் திரைக்கதையோ, இல்லையேல் நூலோ திரைக்கதையாக்கப் பட்டிருப்பின் மூல எழுத்தாளரின் கையொப்பமிட்ட கடிதம் இணைக்கப்பட வேண்டும்.
- திரைக் கதைக்குரிய வடிவில் முழுமையாக இருத்தல் வேண்டும்.
- ஒருவர் எத்தனை பிரதிகளும் சமர்ப்பிக்கலாம்.
- கூட்டாகவோ இல்லேயேல் இணைந்து திரைக்கதை சமர்ப்பிக்கலாம்
- படைப்பாளிகளின் பெயர், வதிவிட விபரம் இணைக்கப்படல் வேண்டும்.
- பிரதிகளின் முகப்புப் பக்கத்தில் மட்டுமே பிரதியாசிரியரது பெயர் இருத்தல் வேண்டும். பிரதிகளினுள்ளே இருத்தல் கூடாது.
- பிரதிகள் திருப்பி அனுப்பப்படமாட்டா.
- தேர்வாகும் ஐந்து பிரதிகள் நூல் வடிவில் வெளிவரும்.
- பிரதிகள் இ-மெயிலில் அனுப்பப்படின் பி.டி.எப்(PDF) வடிவத்தில் இருத்தல் வேண்டும்.
- முடிவு திகதியின் பின்னர் கிடைக்கும் பிரதிகள் ஏற்றுக்கொள்ளப்படாது.
- நடுவர்களின் முடிவே இறுதியானதும், தீர்மானதுமாகும்

போட்டி முடிவுத் திகதி மாசி 15, 2008 (Februray 15,2008)
பிரதிகள் அனுப்ப வேண்டிய முகவரி

M.Raguanthan
Program Director
Independent Art Film Society
4 Castlemore Avenue
Markham, ON L6C 2B3, Canada

E-mail entries
IAFS@ROGERS.COM
CC: Rathan@rogers.com
www.iafstamil.com

**Publisher & Editor** : **P.J. Dilipkumar**
பதிப்பாளர், ஆசிரியர் : பி.ஜே. டிலிப்குமார்

ஆலோசகர் குழு : ஞானம் லம்பேட், மாமூலன், கருணா, பொன்னையா விவேகானந்தன், ரதன், சுந்தர் சின்னத்தம்பி.

தட்டச்சு : கௌரி, கௌசலா, ஜீவா.

ஒப்புநோக்கல் : சாவையம்பதி சுப்ரமணியம், கௌரி.

வரைகலை ஆலோசனை : கருணா (டிஜி வரைகலை அமையம்)

தொடர்புகள்:
For More Info : Editor
P.O.Box #63581
Woodside Squarew
1571 Sandhurast Circ.
Toronto, ON. M1V 1V0

Montréal விநியோகம் : சுகுமாரன் சின்னையா
1-514-299-3186

Ottawa விநியோகம் : அலெக்ஸ் சிவசம்பு
1-613 -276-7253

Tel: 416-646-3422, 416.400.6406
Fax: 416.849.0594
Web: www.veedunews.com
E-mail: thaiveedu@gmail.com

# வீட்டினுள் சத்தம் வராது பாதுகாப்பது எப்படி?

அலன் சிவசம்பு

- வீடு விற்பனைப் பிரதிநிதி -



நாம் வீட்டினுள் இருக்கும்போது மழை, குளிர், வெக்கை, என்பன வராது இருப்பது மட்டுமல்லாமல் சத்தம் வராமல் பாதுகாப்பதும் ஒரு முக்கியமான ஒன்றாகும். சத்தம் வீட்டினுள் பலவிதமாக வரலாம். அதாவது வீட்டின் மேலே பறக்கும் விமானங்கள், வீதியால் செல்லும் வாகனங்கள் அல்லது வெளியில் சிறுவர்கள் விளையாடும்போதும் சத்தங்கள் உள்ளேயோ அல்லது உள்ளிருந்து வெளியிலோ செல்வதால் நாம் அமைதியாக இருப்பதற்கு முடியாமல் போய்விடும். ஆகவே, சத்தம் முக்கியமாக வீட்டினுள் வராது இருப்பதற்கு எந்தவிதமான முன்னேற்பாடுகள் முக்கியம் எனப் பார்ப்போம். Sound proof செய்வதனால் வீட்டினுள் சத்தம் வராது பாதுகாப்பது மட்டுமல்லாமல், அது வீட்டின் பெறுமதியையும் அதிகரிக்கும்.

ஆகவே, நாம் ஒரு வீட்டை Sound proof உள்ள வீடாக மாற்ற வேண்டுமானால் எந்தப் பகுதியால் சத்தம் உள்ளே வருகின்றது என்பதை அறிந்துகொள்ளுதல் அவசியமாகின்றது. பொதுவாக யன்னல்கள், பேஸ்மென்ற் அத்துடன் வீட்டின் கூரைக்குக் கீழ் சரியான (Affic) Insulation இல்லாவிட்டாலும் சத்தம் வீட்டினுள் வருவதற்கு வாய்ப்புக்கள் உண்டு. ஆகவே, முக்கியமாக சத்தம் உள்ளே வரும் ஒவ்வொரு பகுதியையும் தனித்தனியாக கீழே ஆராய்வோம்.

### யன்னல்கள்

யன்னல்கள் வழியாக சத்தம் போவது ஒரு முக்கியமான விடயம். ஒற்றைக் கண்ணாடி யன்னல்கள், மர யன்னல்கள் இலகுவாகச் சத்தங்களை உள்ளேயோ வெளியேயோ விடுவதற்குக் கூடிய சந்தர்ப்பம் உண்டு. இரண்டு கண்ணாடிகள் கொண்ட யன்னல்கள் சத்தத்தை 20 வீதத்தால் குறைப்பதற்கு உதவியாக இருக்கும். ஆனால், அதே நேரத்தில் vinyl frames சத்தத்தை ஐம்பது சதவீதத்தால் குறைப்பதற்கு உதவியாக இருக்கும். இருந்தால் வீட்டிலுள்ள யன்னல்களை இரட்டைக் கண்ணாடிகளாகவோ அல்லது வினைல் சட்டங்களாக மாற்றுவதற்கு அதிக பணம் செலவாகும். ஆகவே, யன்னல்களைச் சுற்றி Home building materials விற்கும் இடங்களில் கிடைக்கக்கூடிய சில materials ஐப் பெற்று அவற்றைக் கொண்டு இச்சத்தம் வரும் இடங்களை அடைப்பதன் மூலம் செலவு குறைவாகச் செய்து முடிக்கலாம். அதாவது (Using a removable plug to block the sound coming through the window). இந்த பிளக்கை உபயோகிப்பதன்மூலம் வெளிச்சம் உள்ளே வருவதைத் தடைசெய்தாலும் சத்தம் வந்து எம்மைத் தொந்தரவு செய்யாமல் இருக்கச் செய்யலாம். அதே நேரத்தில் இந்த extra insulation குளிர்காலத்தில் வீட்டைச் சூடாகவும் வெக்கைக் காலத்தில் வீட்டைக் குளிராகவும் வைத்திருக்க உதவும். ஆகவே, Home building கடைகளில் உங்களது யன்னல்களின் அளவுக்கு ஏற்றவாறு அதனது சட்டங்களின் நீளத்திற்கும் அதனது ஆழத்திற்கும் ஏற்றவாறு அதைத் தயார் செய்து கொள்ளலாம். கூடுதலாக இரண்டு அங்குலம் தடிப்பான materialsஐச் யன்னல் ஓட்டைகளை அடைப்பதற்கு உபயோகிப்பார்கள். சத்தத்தைத் தடைசெய்யும் materials இலகுவாக வளையக்கூடியதாக இல்லாதபடியால், பாவிக்கும் Materials சரியாகப் பொருந்தக் கூடியதாக இருத்தல் வேண்டும். இல்லாவிடில் அவை யன்னல் இடை வெளியை பெரிதாக்குவதற்கு வாய்ப்புகள் உண்டு.

### வீட்டிலுள்ள attic என்னும் பகுதி,

அடுத்ததாக, வீட்டிலுள்ள attic என்னும் பகுதி, வீட்டின் கூரையில் கீழ்ப் பகுதியிலுள்ள இடைவெளியாகும். இந்தப் பகுதிக்குச் சரியான இன்சுலேசனைச் செய்வதால் எமக்கு வரும் வெப்பமேற்றிக்கான கட்டணத்தைக் குறைப்பது மட்டுமல்லாமல் எமது வீட்டினுள் வரும் சத்தத்தைக் குறைப்பதற்குப் பெரிய உதவியாகவும் இருக்கும். அதற்கு மேலதிகமான asphalt என்னும் Materials ஐப் பாவித்து, Insulation செய்தால் அது கூடிய பயனைக் கொடுக்கலாம்.

அதே நேரத்தில் வீட்டின் இரண்டாவது floor இல் உள்ள அறைகளில் சத்தம் வராமல்செய்வதற்கு, கடைகளில் விற்கப்படும் சில pads ஐ வாங்கி, அவற்றைக் கார்ப்பெற்றின் கீழேயோ அல்லது Hardwood இன்கீழேயோ போடுவதன் மூலம் சத்தத்தைக் குறைத்துக் கொள்ளலாம். மேலும், Dry walls இற்கு இரண்டு dry wallsஐப் போட்டுச் செய்வதன் மூலமும் உள்ளே வரும் சத்தத்தைக் குறைத்துக் கொள்ளலாம். பேஸ்மென்றைப் பொறுத்தவரையில் சிமேந்தினால் சத்தம் வருவது தடைப்படும். ஆனால், சீலிங்கிற்கு இன்சுலேசன் போடுவது மேலால் வரும் சத்தத்தைக் குறைக்கும்.

■ ■ ■

# மாரிகாலத்திலும் (Winter) வீட்டினை விற்க வேண்டுமா? இதோ சில குறிப்புகள்...



**மகேன் சிங்கராஜா**
- வீடு விற்பனைப் பிரதிநிதி -

நத்தார் விடுமுறையோடு 2007 ஆம் ஆண்டுக்கு விடைகொடுத்து புதிதாக ஆரம்பித்திருக்கும் இந்த 2008 ஆம் ஆண்டில் நாம் கால் பதித்திருக்கிறோம். நத்தார் கொண்டாட்டமானாலும் சரி புதுவருட கொண்டாட்டமானாலும் சரி, நம் கனேடிய நீரோட்டத்தில் இதுவே நீண்ட விடுமுறையாகும். இப்புதிய 2008 ஆம் ஆண்டு வீடு வாசகர்களுக்கு சிறந்த ஆண்டாக மலர எனது வாழ்த்துக்கள்.

வீடு வாங்குவதை விட வீட்டை விற்பதே மிகவும் கஷ்டமாக இருக்கின்றது. காரணம், பொதுவாக வீடும் வீட்டின் சுற்றுப்புறமும் கோடை காலத்திலே செழிப்பாகவும் அழகாகவும் தென்படுகின்றது. ஆனால் இந்த மாரிகாலத்தில் வெளிச் சூழலை விட உட்சூழலை அழகாகவும், தூய்மையாகவும் மற்றவர்களைக் கவரக் கூடிய விதத்திலும் வைத்திருந்தாலே உங்கள் வீட்டினை இலகுவாக விற்க முடியும். இந்த Winter இல் எப்படி விரைவாகவும் மற்றவர்கள் உங்கள் வீட்டை வாங்கக் கூடிய விதத்திலும் விற்கலாமென்பதைக் கீழே பார்ப்போம்.

மாரிகாலம் அதற்கேயுரிய சவால்களைக் கொண்டிருக்கிறது. குளிர், மழை, பனி அதிகமாக ஏற்படக்கூடிய இடத்தில் நீங்கள் வாழும்போது மாரிகாலம் உங்கள் வீட்டை சந்தையில் இடுவதற்கு ஏற்ற காலம் அல்ல. உங்கள் வீட்டு புற்தரை அழகற்று கபிலநிறமாக காணப்படும். வானிலை மோசமாக இருக்கும். கோடையின் நீண்ட நாட்களைப் போன்று வீட்டை சுற்றிக் காட்டுவதற்கு ஏற்றவிதமாக மாரிகாலத்தில் பகற்பொழுது நீண்டதாக இராது. பாரம்பரியமாக வீடு காட்டுவதற்கு ஏற்ற காலமான கோடை அல்லது வசந்த காலம் வரை பொறுத்திருக்கும் சாணக்கியம் வீட்டை விற்க விரும்பும் எல்லோருக்கும் கிடையாது.

அநேகமான பகுதிகளில் மாரிகாலத்தின் போது வீட்டை வாங்குபவர்கள் ஒரு சிலராகவே இருப்பார்கள். எனினும் வீட்டை விற்பவர்களுடன் ஒப்பிடும்போது குறைந்த போட்டியே உங்களுக்கு இருக்கும். நீங்கள் வீட்டை விற்க வேண்டிய கட்டாயத்திலிருந்தால், உங்கள் வீட்டை அழகானதாகவும் பிரகாசமானதாகவும் காட்டுவதற்கு சில படிமுறைகள் உள்ளன. அவற்றை கீழே நோக்குவோம்

## உங்கள் வீட்டுக்குச் செல்லும் பாதையை துப்பரவு செய்யுங்கள்

- வீட்டை வாங்குபவர்கள் வீட்டினை இலகுவாக அடையமுடியாதவாறு பனிக்கட்டிகள் பாதையை தடைப்படுத்தியவாறு குவிந்தி-ருக்குமாயின் வீட்டை இலகுவாக விற்க முடியமாது. புற்தரையை கோடைகாலத்தில் அடிக்கடி வெட்டுவதைப் போல் வீடு குளிர் காலத்திலும் தொடாந்து பராமரிக்கப்படு கின்றது என்பதைக் காட்டுவது அவசியம்.
- பனி தொடர்ச்சியாக விழுந்துகொண்டிருக்குமாயின் அடிக்கடி உங்கள் பாதையில் இருந்து பனியை அகற்றுங்கள்.
- நீங்கள் தொடாந்து அந்த வீட்டில் இராது அடிக்கடி வெளியே செல்பவராக இருந்தால் பனி அகற்றுவதற்கு நிபுணத்துவம் பெற்றவர்களை வாடகைக்கு அமர்த்துவது சிறந்தது.
- வெப்பநிலை குறைவாக இருந்தால், புதிதாக விழுந்த பனியானது (Snow) பனிக்கட்டியாக மாறும் சந்தர்ப்பம் உண்டு. எனவே நடைபாதையில் இருந்து உறை பனியை முற்றிலுமாக அகற்றிவிடுங்கள்.
- நடைபாதையில் மணலை தூவுவதன் மூலம் உங்கள்வீட்டை வாங்க வருபவர்கள் சறுக்கி விழுந்து விடாதிருப்பதில் கவனம் செலுத்துங்கள்.

## வீட்டினுள் வெளிச்சத்தை வரவிடுங்கள்

- இருட்டுத் திரைச்சேலைகளை (Blinds) அகற்றி ஒவ்வொரு யன்னலையும் மறைக்கும் திரைகளை அகற்றுங்கள்.
- அலுமாரிகளின் (Closets) விளக்குகள் உட்பட வீட்டின் எல்லா மின்விளக்குகளையும் போட்டு வையுங்கள்.

## வீட்டின் வெளிப்பகுதியில் மின் விளக்குகளை ஒளிரவிடுங்கள்

- வாங்குபவர்கள் உங்கள் வீட்டைக் கடந்து செல்லும்போது, உங்கள் வீடு வரவேற்பு மிக்கதாக தோற்றமளிக்க வேண்டுமென விரும்புவீர்களெனின், வீட்டின் வெளிப்பகுதியிலும் மின்விளக்குகளை ஒளிரவிடுங்கள்.
- போதிய மின்விளக்குகள் பொருத்தப்படாவிடின் புதிய இணைப்புக்களை ஏற்படுத்தி மின்விளக்குகளைப் பொருத்துங்கள்.

## மிதமான வெப்பமுடையதாக வீட்டின் வெப்பமேற்றியை (Ther mostat) இயங்கச் செய்யுங்கள்.

- சாதாரணநிலையை விட ஒன்று அல்லது இரண்டு பாகை வெப்பத்தை அதிகமாக வைத்திருத்தல் நல்லது. இது உங்கள் வீட்டை வாங்க வருபவர்கள் வரும்போது Furnace இயக்குவதை தவிர்க்கச் செய்யும். வீட்டை வாங்க வருபவர்கள் வரும்போது Furnace இரைச்சல் சிலசமயம் கலந்துரையாடுவதை இடையூறு செய்வதாக அமையலாம்.
- குளிரான நாட்களில் வீட்டின் உட்புறம் வெப்பமாக இருக்கும்போது வீட்டைப் பார்க்க வருபவர்களையும் சௌகரியமாக தமது வீட்டில் இருப்பது போன்ற உணர்வை ஏற்படுத்தச் செய்யும்.
- ஒரு குளிரான நாளில் உங்கள் வீட்டை வாங்க வருபவர்கள் வீட்டினுள் அதிக நேரம் இருந்து தீர்மானமெடுப்பதற்கு இது வழிவகுக்கும்.

6ம் பக்கம் பார்க்க...

# மாரிகாலத்திலும்...

5ம் பக்கத் தொடர்ச்சி...

- நெருப்பு வெளிச்சம் (Fire place) இருக்கு மிடத்தை வெளிச்சமேற்றி அதன்முன்னே ஒரு தடுப்பை வையுங்கள். வீட்டில் நெருப்பு பற்றாமல் கவனமாகப் பார்த்துக் கொள்ளுங்கள்.

### வீட்டை வாங்க விரும்புபவர்க ளின் மனநிலையை கவரக் கூடிய சூழ்நிலையை வீட்டின் உட்புறத்தில் உருவாக்குங்கள்

- கோப்பி மேசையில் சாம்பெயின் (Champaign) போத்தலின் அருகே இரு கிளாஸ்களை வையுங்கள்.
- குளியலறையில் துவாய்களை அழகாக மடித்து வையுங்கள்.
- சவர்க்காரம், ஷாம்பு, லோஷன் ஆகிய வற்றை ஒழுங்காக கலையுணர்வுடன் அடுக்கி வையுங்கள்

### மெல்லிசையை ஒலிக்க விடுங்கள்

வர்த்தக ஒலிபரப்பை அல்லது வாத்தியக் கருவிகளின் இசையை மெலிதாக ஒலிக்க விடுங்கள். இதன்மூலம் வீட்டை வாங்க விரும்புவர்கள் கூடிய நேரம் வீட்டில் தங்கி யிருந்து வீட்டைப் பார்க்க விரும்புவார்கள்.

### நறுமணம் வீட்டினுள் பரவச் செய்யுங்கள்

- எல்லா வகையான நறுமணங்களும் (Scents and deodorizers) அனைவருக் கும் ஒத்துப்போகுமென்று கூறமுடியாது. சிலருக்கு இது ஒவ்வாமையைக் கொடுக் கும். எனவே இவற்றினை வீட்டினுள் விசிறுதல் குறித்து கவனமாக இருங்கள். அதேபோல் குளியலறையினுள்ளும் இதே காரணத்தினால் நறுமணத்தை விசிறவோ, மெழுகுவர்த்திகளை எரிக்கவோ வேண்டாம்.
- அளவுக்கு அதிகமாக வாசனை மிகுந்த மெழுகுவர்த்திகளை வைப்பதன்மூலம் நீங்கள் எதையோ மறைக்க முனைகிறீர் கள் என வாங்குபவர்களை எண்ண வைக்க வேண்டாம்.
- விரும்பத்தகாத வாசனைகளைக் குறித் தும் கவனமாக இருங்கள். வளர்ப்புப் பிராணிகளின் மணம், புகை, பூஞ்சண மணம் என்பன திரைச்சேலைகளிலும் கம்பளங்களிலும் ஒட்டிக் கொள்ளும். நீங்கள் வீட்டிலேயே இருப்பவராயின் வீட்டின் உள்ளிருக்கும் இம்மணங்கள் உங்களுக்கு தெரிய வாய்ப்பில்லை. உங்கள் வீடு விற்பனைப் பிரதிநிதி அல்லது உங்கள் வீட்டுக்கு வரும் நண்பரிடம் இத்தகைய உவப்பற்ற மணம் வீட்டினுள் வீசுகின்றதா என கேட்டுத் தெரிந்து கொள்ளுங்கள்.
- கெட்ட மணங்கள் இருக்குமாயின் வீட்டைச் சுத்தம் செய்து உள்ளிருக்கும் வளியை அகற்றி, திரைச்சேலை, கால் துடைப்பான்கள்(Rugs), கம்பளம் போன்ற வற்றை மாற்றி அமையுங்கள்.
- சமையலறை அடுப்பில் நீரில் ஏலக் காய்கள் சிலவற்றைக் கொதிக்க வைத் தல் நல்லது. அல்லது கனலடுப்பில் (oven) குக்கீஸ்களை(cookies) தயாரித் தல், பாண் தயாரிக்கும்போது எழும் வாசனை என்பன விருந்தினரை வரவேற்க உகந்தது. எனினும் வீட்டைப் பார்க்க வருபவர்கள் ஏமாறாமால் இருப் பதற்காக அவர்களுக்கென சில குக்கீஸ்க ளைத் தயாராக வைத்திருப்பது நல்லது.

### சுற்றுப்புறத்தை அழகாக தோற்றமளிக்கச் செய்யுங்கள்

- கோடைகாலத்தில் உங்கள் பசுமையான பூந்தோட்டத்தை புகைப்படம் எடுத்த காட்சிகளை வரவேற்பறை சுவர்களில் தொங்க விடுங்கள்.
- உங்கள் வீட்டிற்கு வெளியே உடைந்த வேலி அல்லது அழகற்ற காட்சிகள் இருந்தால் இருட்டுத் திரைச்சேலையை (Blinds) அப்பகுதியில் பயன்படுத்தி மறைத்து வையுங்கள்.

### வீட்டின் உட்புறத்தை சுத்தம் செய்யுங்கள்.

- யன்னல்களைக் கழுவித் தூய்மையாக் குங்கள்
- சிலந்தி வலைகள், தூசுகள் இருந்தால் கவனித்துத் துப்பரவு செய்யுங்கள்.
- குழாய்கள், குளியலறைகள், கைகழுவும் தொட்டியில் (sink) வெடிப்புகள் இருந்தால் அவற்றை சீர்செய்யுங்கள்.
- முகம்பார்க்கும் கண்ணாடிகளை துடைத்து, மினுக்கி துப்பரவு செய்யுங்கள்
- குளிர்சாதனப் பெட்டியை சுத்தம் செய்து, தேவையற்ற உணவுப் பண்டங்களை அகற்றுங்கள்.
- ஒவ்வொருநாளும் வீட்டின் உட்புற தளத்தினை Vacuum செய்வதன் மூலம் தூசகற்றுங்கள்.
- நிலத்தை கழுவி மெருகிடுங்கள் (Wax).
- தளபாடங்கள், மின்விசிறியின் அலகுகள், மற்றும் மின்னுபகரணங்களை தூசு தட்டி சுத்தமாக வையுங்கள்.
- அழுக்கடைந்த சுவர்களை துப்பரவு செய்து தேவையெனின் புதிய வர்ண- மிடுங்கள்.
- குப்பைகளையும், மீள்சுற்றோட்ட கலன் களையும் (Recycling Cans) துப்பரவு செய்யுங்கள்.
- சுத்தமான காற்று உள்ளே வரக்கூடிய வாறு, ஒரு நாளைக்கு ஒருதடவை யாவது ஐந்து நிமிடங்களுக்கு உங்கள் யன்னல்களைத் திறந்து விடுங்கள். எல்லா யன்னல்களையும் ஒரே நேரத்தில் திறக்கத் தேவையில்லை. ஒரு அறையி னுடைய யன்னலைத் திறந்து விட்ட பின், அந்த அறையினுடைய கதவை மற்றைய அறைகளுக்கு குளிர் வராத வாறு, பூட்டி விடுங்கள். அப்படி ஒவ் வொன்றாக திறந்து பூட்டுவதன் மூலம் உங்கள் வீட்டில் சுத்தமான காற்றை சுவாசிக்கக் கூடியதாக இருப்பது மட்டு மல்லாது, கெட்ட நாற்றங்களையும் வெளியேற்றி விடும்.

### உங்கள் சொத்தினை பாதுகாருங்கள்

சில வீடு விற்பனையாளர்கள் (அல்லது அவர்களின் பிரதிநிதிகள்) வீட்டின் உட்பகுதி யைச் சுற்றிப் பார்க்க முன்பாக அவர்களது காலணிகளைக் கழற்றுமாறு கூறுவார்கள். அநேகமான வீடு வாங்குபவர்கள் இக் குறிப்பினை விரும்புபவர்களாக இருப்பார் கள். இது வீட்டின் பாதுகாப்பில் கவனமுட- னிருப்பதைக் குறிக்கின்றது.

### குளிர்காலத்திற்கேற்ற உணவு பரிமாறுங்கள்.

சூடான தேநீர், கொக்கோ கலந்த பானம் அல்லது உருளைக்கிழங்கு சூப் பரிமாறலாம். காரத்துடன் கூடிய மரக்கறிசூப் வகைகளும் குளிர்காலத்திற்கு ஏற்றது.

### விருந்துக்கு அழைக்கா விடினும் விருந்தினரை அழைத்திருப்பதைப் போன்று வீட்டை அலங்கரியுங்கள்.

உணவு மேசையை விருந்திற்கு ஆயத்த மாக்குவது போன்று அலங்கரியுங்கள்

### குறிப்பான தகவல்களைப் பதிவு செய்து வழங்குங்கள்.

வீட்டைப் பார்க்க வருபவர்கள் மேலதிக தகவல்களை அறிந்து கொள்வதற்கு, வீட்டைப் பற்றிய குறிப்பான தகவல்கள் உள்ளடங்கிய அட்டையை வழங்குங்கள். உங்கள் வீட்டிற்கு அருகில் பஸ் போக்கு- வரத்து, பாடசாலை, வைத்தியசாலை, கடைகள், பூங்கா போன்ற அத்தியாவசிய சேவைகள் இருந்தால் அதனை வெளிப்- படுத்துங்கள். இதன் மூலம் மோசமான வானிலையின்போதும் இப்பகுதி பனி அகற்- றப்படும் என்பதை இது உறுதிப்படுத்தும்.

மேற்கூறிய வழிமுறைகளை பின்பற்றினால் மட்டும் போதாது. உங்கள் வீட்டின் சரியான சந்தை விலையை (Market value) அறிந்து அதற்கேற்ப வீட்டினை சந்தைப்படுத்தினால் இந்த மாரிகாலம் (Winter) கூட உங்கள் வீட்டினை விற்பதற்கு மிகவும் இலகுவான காலமாகும்.

■ ■ ■

## இம் மாதத்திற்குரிய முக்கிய குறிப்புக்கள்

ஜனவரி குறிப்புகள்

- புதியவருடத்தில் வீட்டில் சகலவற்றையும் ஒழுங்கமைப்பதன் மூலம் வாழ்க்கையில் புத்துணர்ச்சியை ஊட்டுங்கள்.
- உங்கள் வீட்டிலுள்ள அலுவலக அறையை ஒழுங்கமையுங்கள்.
- உங்கள் சமையலறை அலுமாரிகளை ஒழுங்கமையுங்கள்.
- அலுமாரிகளின் தட்டுகளில் இடப்பட்டிருக்கும் கடதாசிகளை மாற்றுங்கள்
- கழிவகற்றும் கொள்கலனை வினிகர் கொண்ட பனிக்கட்டிகளால் (Vinegar ice cubes) அல்லது தோடம்பழ, எலுமிச்சை தோல்களை இட்டு ஊறவைத்து கழுவுங்கள்.
- விடுமுறைகாலத்தில் பயன்படுத்துவதற்காக எடுத்து வைத்த கண்ணாடி உணவுப் பாத்திரங்களை பத்திரப்படுத்துங்கள். இப்பாத்திரங்களை ஒன்றன்மேலொன்றாக அடுக்குவதனால் உடையக் கூடிய ஆபத்து ஏற்படுவதைத் தவிர்க்க கடதாசியினாலான உணவுத்தட்டுக்களை இடையிடையே அடுக்குங்கள்.
- புகையைக் கண்டறியும் (Smoke detectors) கருவிகளைப் பரிசோதியுங்கள்
- வெப்பமூட்டும் மற்றும் வாயு சீராக்கும் அமைப்பில் (Heating and air conditioning system) வடிகட்டிகளை உற்பத்தியாளரால் கூறப்பட்டபடி மீளமையுங்கள்.
- நீர் வெப்பமேற்றும் குழாய்களில் (Water heater vent) அடைப்புகள் இருக்கிறதா என அவதானியுங்கள்.
- கனலடுப்பு (Oven) மற்றும் குளிர்சாதனப்பெட்டியை உற்பத்தியாளரால் கூறப்பட்டபடி சுத்திகரியுங்கள்.
- இருட்டுத்திரைச்சேலைகள் (Blinds) மற்றும் ஏனைய திரைச்சேலை களை கழுவுங்கள்.
- குளியலறைக் குழாய்களில் பூஞ்சணம் காணப்படுகின்றதா என பரிசோதியுங்கள்.
- சுவர்கள், வீட்டின் உட்புற நிலப்பகுதி, சுவரையும் தளத்தையும் இணைக் கும் பலகைகள், தளபாடங்கள் என்பவற்றை Vacuum செய்யுங்கள்.
- வீட்டின் உட்பகுதியில் இருக்கும் தாவரங்களை சேகரித்து குளிய லறையில் அல்லது சமையலறையின் கைகழுவும் தொட்டியில் வைத்து கழுவி அவற்றின் மீது படிந்துள்ள தூசினை அகற்றுங்கள்.
- சுவரின் வெளிப்பகுதியில் நீரினால் பாதிப்புகள் ஏற்பட்டுள்ளதா? பூஞ்சணம், காளான்கள் வளர்ந்துள்ளதா என அவதானித்து அகற்றுங்கள்.
- வீட்டினைச் சுற்றி அளவுக்கதிகமாக பனி உறைந்துள்ளதா என அவதானித்து அகற்றுங்கள்.
- இயற்கை வாயு (Naatural gas) மீற்றரிற்கு அருகில் பனி படியாது பாதுகாருங்கள்.

தொகுப்பு: மகேன் சிங்கராசா

# வீடு வாங்க முன்னர் தெரிந்து கொள்ள வேண்டியது



ராகவன் ராமநாதன்
- அடமானக் கடன் முகவர் -

"கனடாவுக்கு வந்து பதினைஞ்சு வருசமாயிட்டுது. எங்களுக்கென்று சொந்தமாய் ஒரு வீட்டை ஏன் வாங்கக் கூடாது?" என்ற கேள்வி பல குடும்பங்களில் அடிக்கடி எழுகின்றது.

இது ஒரு நியாயமான கேள்விதான். ஆனால் இது கேள்வியோடு மட்டும் நின்று விடுவதில்லை.

"வந்து நாலு வருசத்திலேயே அவையள் வீடு வாங்கிக் கொண்டு ஒரு மார்க்கமாய் மார்க்கத்தில செட்டில் ஆகீட்டினமாம். என்னெண்டப்பா அவை வீடு வாங்கினவை?... ம்….. நீரும் இருக்கிறீரே…. குத்துக்கல் லாட்டம்..?" என்று சண்டையும் நடக்கின்றது.

"சரியப்பா ஒரு வீட்டை வாங்கிடுவம்" என்று வீரமாக வெளிக்கிடுவதற்கு முன் சில விடயங்களை தெரிந்து கொள்ளுங்கள்.

வீடு வாங்குவது பெரிய விடயம் தான். ஆனால் அது ஒன்றும் கஸ்டமான விடயமில்லை. அதே நேரம் இந்த வீடு வாங்குவது தொடர்பான Mortgage விடயங்கள் உங்களுக்கு தெரிந்திருந்தால் அது உங்களுக்கு மிக உதவியாக இருக்கும். நிறையப் பணத்தை சேமிக்க உதவி செய்யும்.

## Amortization Period

ஒரு வீட்டை வாங்குகின்ற போது அந்த வீட்டை அடமானமாக வைத்து வங்கியில் அடமானக் கடன் (Mortgage) எடுக்கின்றோம். இந்த அடமானக் கடனுக்காக மாதம் மாதம் அல்லது வாராவாரம் வங்கிக்கு நாம் பணம் செலுத்த வேண்டும். Amortization Period என்பது நாங்கள் வாங்கிய வீட்டை அடமானத்தில் இருந்து மீற்க எத்தனை வருடங்கள் வங்கிக்குப் பணம் செலுத்த வேண்டும் என்ற கால எல்லையாகும்.

பொதுவாக ஒரு வீட்டை வாங்குபவர்களின் Amortization Period இருபத்தி ஐந்து வருடங்களாக இருக்கும். அதனுடைய கருத்து இருபத்தி ஐந்து வருடங்கள் தொடர்ச்சியாக நீங்கள் வங்கிக்கு பணம் செலுத்தி முடித்தால் அந்த வீடு உங்களுக்கு சொந்தமாகும்.

இந்த Amortization Periodஐ 20 வருடங்களுக்கு என்று நீங்கள் எடுத்தால் நீங்கள் மாதாந்தம் செலுத்துகின்ற பணம் ஏறத்தாள ஒரு நூறு, அல்லது இரு நூறு டொலர் மட்டுமே அதிகமாய் இருக்கும். ஆனால் இருபது வருட முடிவில் நீங்கள் சேமிக்கின்ற பணம் பல பத்தாயிரம் டொலர்களாக இருக்கும். அது ஐம்பதினாயிரம் டொலர்களாகக் கூட இருக்கலாம்.

## Open and closed Mortgages

உங்களுக்கு திடீரென ஒரு ஐம்பதினாயிரம் டொலர் கிடைத்துள்ளது. அதை வீட்டு அடமானக் கடனுக்காக செலுத்த விரும்புகின்றீர்கள். அதை எல்லா சமயங்களிலும் வங்கி ஏற்றுக் கொள்ளாது. குறிப்பாக நீங்கள் closed mortgages வைத்திருந்தால் இந்தப் பணத்தை நீங்கள் செலுத்த முயல்வதை வங்கி ஏற்றுக் கொள்ளாது.



ஒரு சில நேரங்களில் இந்தப் பணத்தை சில வங்கிகள் ஏற்றுக் கொள்ளும். ஆனால் அதற்காக உங்களிடம் இருந்து பல ஆயிரம் டொலர்களை தண்டப் பணமாக வசூலித்து விடும் (Penalty).

அதே சமயம் உங்களுடைய mortgage, open mortgageஆக இருந்தால் எவ்வளவு பணத்தையும் எந்த வித தண்டச் செலவுகள் இல்லாமலே செலுத்தமுடியும்.

## Fixed rate and variable mortgages

Fixed rate என்றால் உங்களுடைய வட்டி ஒரு குறிப்பிட்ட வருடங்களுக்கு இதுதான் என்று திட்டவட்டமாக தீர்மானிக்கப்பட்டிருக்கும். நீங்கள் வீட்டு அடமானம் எடுக்கின்றபோது வங்கியால் இது தீர்மானிக்கப் படுகின்றது. இந்த காலஎல்லை அதிக பட்சமாக ஐந்து வருடங்களாக இருக்கலாம். ஒரு வருடம், இரண்டு வருடத்திற்கு என்று கூட இதை தீர்மானிக்கலாம்.

## Variable mortgages rate

Variable mortgages rate என்றால் அது ஒரே வட்டி வீதமாக இருக்காது. சமயத்தில் இது Fixed rateஐ விட குறைவாக இருக்கும். திடீரென்று இந்த வட்டி வீதம் அதிகரிக்கும். திடீரெனக் குறையும். Variable mortgages rate எப்போது மாறும்? அது குறையுமா? கூடுமா என்பதெல்லாம் எங்கள் கையிலோ வங்கிகளின் கையிலோ தங்கியிருப்பதில்லை. கனேடிய மத்திய வங்கியின் வட்டி வீதத்தை பொறுத்து இது மாறுபடும். நாட்டின் பொருளாதர நிலைமைக்கு ஏற்ப கனேடிய மத்திய வங்கி வட்டி வீதத்தை அதிகரிப்பதா? குறைப்பதா? என்ற முடிவுக்கு வருகின்றது.

இன்றைய நிலையில் Variable mortgages rateல் அடமானக் கடன் எடுத்தவர்களே, Fixed rateல் அடமானக் கடன் எடுத்தவர்களை விட மிக அதிக இலாபம் சம்பாதித்துள்ளனர்.

இப்படி நடக்கும் என்று யாருக்கும் தெரியாது. எல்லாம் ஒரு ஊகம். அதே போல இனி வரப்போகும் ஐந்து வருடங்களில் Fixed rate ல் உள்ளவர்களா? அல்லது Variable mortgages rateல் உள்ளவர்களா அதிக பணத்தை சேமிப்பார்கள் என்பதை இப்போது சொல்ல முடியாது. அது ஐந்து வருடம் முடிந்த பின்னர்தான் தெரியும்.

ஆனால் சிலர் தமது அடமானக் கடனை Variable mortgages rateஇலும், இன்னும் சிலர் தமது அடமானக் கடனை Fixed rateயிலும் வைத்துள்ளனர். இதில் யார் வெற்றி பெறப்போகின்றனர் என்பதை தீர்மானிப்பது கனேடிய மத்திய வங்கியேயாகும்.

இதை மத்திய வங்கி கனேடிய பொருளாதார நிலைமைக்கு ஏற்பவே தீர்மானிக்கின்றது. Fixed rateல் அடமானக் கடன் எடுப்பதா அல்லது variable rateல் அடமானக் கடன் எடுப்பதா என்பது குறிப்பிட்ட காலத்தில் கனடாவின் பொருளாதார நிலைமையை கருத்திற்கொண்டு எடுக்க வேண்டிய முடிவாகும்.

## 4.Conventional Mortgage

வீடு வாங்குவதற்கு நீங்கள் முதலில் ஒரு தொகை பணத்தை (Down payment) செலுத்த வேண்டும். அவரவருடைய வசதியைப் பொறுத்து இந்த Down payment தொகை மாறுபடும். வீட்டுப் பெறுமதியின் ஐந்து வீதத்தை செலுத்தியும் வீட்டை வாங்க முடியும். அதே சமயம் வீட்டுப் பெறுமதியின் 25வீதத்தை அல்லது அதற்கு அதிகமான தொகையைச் செலுத்தினால் பெரும் இலாபம் உள்ளது. இவ்வாறு வீட்டுப் பெறுமதியின் 25 வீதத்தை Down payment ஆக செலுத்துபவர்கள் Canada Mortgage and Housing Corporation (CMHC) இன்சூரன்சை வாங்க வேண்டியதில்லை. அதனால் நீங்கள் பல ஆயிரம் டொலர்களை சேமிக்கக் கூடியதாக உள்ளது.

## 5. High ratio mortgage

ஒரு வீட்டின் பெறுமதியில் 25 வீதத்தை விட குறைவான பணத்தை Down payment ஆக செலுத்தி வீடு வாங்குபவர்கள் Canada Mortgage and Housing Corporation (CMHC) இன்சூரன்சை வாங்க வேண்டும். இவ்வாறான நிலைமையில் உள்ளவர்கள் தாம் மாதாந்தம் செலுத்துகின்ற அடமானக் கடனுக்கான பணத்தோடு, இந்த இன்சூரன்ஸ் தொகைக்கானப் பணத்தையும் மேலதிகமாகச் செலுத்த வேண்டும்.

வீடு வாங்க முன்னர் இது தொடர்பாக உங்களுக்குள்ள எல்லா சந்தேகங்களையும் தீர்த்துக் கொள்ளுங்கள். அதற்கு உங்களுக்கு ஒரு நம்பிக்கையான ஆலோசனையாளர் தேவை. அவர் உங்களுடைய எல்லாக் கேள்வி களுக்கும் பதில் சொல்லக் கூடியவராக இருப்பார்.

■ ■ ■

புதிய வீடுகளைக் கொள்வனவு செய்தலும் தரம் உயர்த்துதலும் (Upgrading)

# 9 அடி உயரமான தளங்களும் உயர்ந்த தளங்களும்

# (9’ Ceiling and High Ceiling)



வேலா சுப்ரமணியம்
- Certified Home Inspector -



அண்மைக் காலங்களில் புதிய வீடுகளைப் பொறுத்தவரை மிகப் பரவலாகப் பேசப்படும் பதங்களில் மிக முக்கியமானவையாக பின்வருவனவற்றைக் குறிப்பிடலாம்.

- 9’ Ceiling
- High Ceiling
- Coffered Ceiling
- Vaulted Ceiling
- Open View



வசிப்பதற்கு வீடு வாங்குவது ஒரு ரகம். வாழ்வதற்கு வீடு வாங்குவது இன்னொரு ரகம். அதாவது வாடகைவீட்டில் குடியிருப்பதை விட ஒரு வீட்டை வாங்கி முடிந்தளவு எத்தனை பேரை அதற்குள் அடக்க முடியுமோ அந்த அளவிற்கு கூட்டுச் சேர்த்து உச்ச அளவு பயன்பாட்டை அடையும் நோக்குடன் வீட்டை வாங்கி செலவைச் சுருக்கி பணத்தை மிச்சம் பிடிப்பவர்கள் ஒரு ரகம். வீடு என்றால் இப்படி இப்படி இருக்க வேண்டும் என்று திட்டமிட்டு அதனை அழகுபடுத்தி, அனுபவித்து, வாழும் காலத்தில் மிகச் சந்தோஷமாக அனுபவித்து வாழ்வது மறுரகம். வசிப்பவர்களுக்கு தரம் உயர்த்தல் என்பது தேவையற்ற ஒன்றாகவே தென்படும். ஆனால் வாழ்பவர்களுக்கு தரம் உயர்த்துதல் மிக அவசியமாகத் தென்படும். எனவே பொருத்தமானவர்கள் பொருத்தமானவற்றை எடுத்துக் கொள்ள வேண்டும் என்பதே எனது கருத்து.

சாதாரணமாக வீட்டின் ஒவ்வொரு தளமும் அடிப்பகுதியில் இருந்து மேற்பகுதிவரை (Floor to ceiling) 8அடி உயரம் கொண்டதாக அமைக்கப்படுவதே இயல்பு. சில வேளைகளில் சில வீடுகளுக்குப் போகும் போது (உயரமானவர்கள்) தலை முகட்டில் முட்டிவிடுமோ என்பது போல உணர்ந்து இருப்பார்கள். அதிலும் குறிப்பாக அழகான மின் விளக்குகள் பொருத்தப்பட்டிருந்தால் அவை வளர்ந்தவர்களுக்கு தலையில் முட்டி விடவும் வாய்ப்பு இருக்கிறது. இதன் காரணமாகவே புதிய வீடுகள் கட்டப்படும் போது நாங்கள் விரும்பினால் இதன் உயரத்தை 9 அடிக்கு தரம் உயர்த்திக் கட்டுவிக்கக் கூடிய வாய்ப்பு இருக்கிறது. சில கட்டிட அமைப்பாளர்கள் நடுத்தர அல்லது ஆடம்பர வீடுகளை அமைக்கும் போது இலவசமாகவே 9 அடி உயரத்திற்கு வீடுகளை அமைத்து விடுகிறார்கள். ஆனால் சிறிய அளவிலான வீடுகளுக்கு மேலதிகப் பணம் செலுத்தினால் மட்டுமே 9 அடிக்கு உயர்த்துவார்கள். வீட்டை அழகுபடுத்தவும் அழகான மின்சார விளக்குளைப் பொருத்தவும் Crown Molding போடுதல் போன்றவற்றிற்கும் இட்டுமுட்டு இல்லாத உணர்வோடு வாழவும் 9அடி உயரம் கொண்ட தளங்கள் உதவும். குறிப்பாக பிரதான தளம் ஆவது 9அடியில் இருப்பது நல்லது. 2ஆம் மாடியில் பெரும்பாலும் படுக்கை அறைகளே இருப்பதால் 8அடியில் இருப்பது அதிகம் தோற்றாது.

குறிப்பாக நிலக்கீழ்தளத்தை 9 அடிக்கு உயர்த்துவதால் அதிகபலாபலன்கள் ஏற்படும். அதனைத் தவறவிட்ட பலரும் (நான் உட்பட) பின்னர் உணர்ந்து கவலைப்படுவார்கள் என்பது மறக்க முடியாத உண்மை.

வீடு உயர உயர அதனைப் பராமரிக்கும், வெப்பமாக்கும் செலவும், குளிரூட்டும் செலவும் சிறிது அதிகரிக்கும் என்பதையும் இந்த இடத்தில் நான் கோடிட்டுக் காட்ட வேண்டியது கடமை.

இது தவிர தற்போது சற்று ஆடம்பரமாகக் கட்டப்படும் வீடுகளில் உள்ள சில பகுதிகளுக்கு மட்டும் Living room க்கு அல்லது



Family roomக்கு மேல் சில கட்டிட அமைப்பாளர்கள் மிக உயர்ந்த ceilingஐ அறிமுகப் படுத்துகிறார்கள். அதாவது குறிப்பிடும் இந்த அறைகளுக்கு மேல் 14’-16’ உயரம் இருக்கும். சில அமைப்புகளில் படுக்கை அறை போட வேண்டிய இடத்தில் போடாது தவிர்த்து இருப்பார்கள். இதனால் இந்த குறிப்பிட்ட அறைகளின் உயரம் இரண்டு மடங்காக இருக்கும். இத்தகைய அமைப்புகளில் மிக அழகாக Chandeliers களைப் பொருத்தி (அடுக்கு விளக்குகள்) மேல் மாடியிலிருந்து கீழ்நோக்கி பார்க்கக் கூடியதாக இருக்கும். சிலருக்கு இத்ததைகய விளக்கங்கள் (Dream House) கனவு இல்லங்களை நினைவுபடுத்துவதாக அமையும். வாழ்க்கை என்பது இன்பமுடன் வாழ்வதற்கே என்று பார்ப்பவர்கள் இத்தகைய தரம் உயர்த்துதலைத் தவறவிடக் கூடாது.

சதுர அடிக்கு எவ்வளவு முடியும் என்று கணக்குப் பார்ப்பவர்கள் திறந்த பகுதிகளை அடைத்து படுக்கை அறையாக்கி வசிக்கலாம். அது அவர்களுக்கு தரம் உயர்த்தலாக அமையும்.

## Coffered Ceiling



வீட்டிற்கு Coffered Ceiling ஒரு தன அழகைக் கொடுக்கும். அதற்கு Crown, molding, Hidden lighting, Puff lights, Chandeliers என்பவற்றைச் சேர்த்துக் கொள்ளும்போது மேலும் மேலும் மெருகு படும். இவற்றை வீடு கட்டிய பின் செய்வது மிகச் சிரமம். அத்துடன் 9 அடி Ceiling இல்லாதவிடத்து இவற்றைச் செய்வதும் கடினம் என்பதை நினைவில் வைத்திருக்கவும். எனவே தரம் உயர்த்தும்போதே தவறவிடாது செய்ய வேண்டியதில் இதுவும் ஒன்று.

## Open View

நாற்சார் வீடுகளில் கண்ட அல்லது அனுபவித்ததின் இன்னுமோர் வடிவம் தானோ இங்கு நாம் காணும் Open View என்று கூடத் தோன்றுகின்றது. மேலிருந்து கீழ் நடப்பவற்றைப் பார்ப்பது அல்லது பார்க்கக் கூடியதாக இருப்பது ஒரு தனி அழகு. இங்கு மறைந்து இருந்து பார்ப்பதை நான் குறிப்பிடவில்லை. முடிந்தால் இவற்றை தரம் உயர்த்தலில் சேர்ப்பது அழகுக்கு அழகு சேர்ப்பதாக அமையும்.

■ ■ ■

# Smoke detectors, 'Co' detectors வேலை செய்யாவிடில்

# 5,000 டொலர்கள் வரை அபராதம் செலுத்த வேண்டி வரலாம்.



கருணா கோபாலபிள்ளை
- வீடு விற்பனைப் பிரதிநிதி -

புத்தாண்டு பிறந்துவிட்டாலே ஏதோவொரு எதிர்பார்ப்புடன் கூடிய குதூகலிப்பு ஆரம்பமாகும். கோயில்கள், களியாட்டங்கள், உறவினர் வருகை என்று எமது துன்பங்களையெல்லாம் ஓரம் கட்டி வைத்துவிட்டு 2008இனை இன்முகத்தோடு ஏற்றுக் கொண்டிருக்கும் எமது வாசகர்களுக்கு எனது உளம் கனிந்த இனிய புத்தாண்டு வாழ்த்துகள்.

எம்மவரில் பலர் இன்று வீடுகளுக்கு சொந்தக்காரர் ஆகிவிட்டோம். ஆனால் அதுபற்றி ஓர் பூரண விளக்கம் தேவையாகவுள்ளது. அந்த வகையில் வீடு பத்திரிகை மூலம் கேள்வி பதில் பகுதியினை தெரிந்தெடுத்ததில் பலரின் அர்த்தமுள்ள கேள்விகளுக்கு பதிலளிக்கக் கூடியதாகவுள்ளது. வாசகர்களின் தொடர்ச்சியான பங்களிப்பும் இதற்கு ஓர் முக்கிய காரணியாகும். மேற்கொண்டு இம்மாதம் கிடைக்கப்பெற்ற கேள்விகளையும் பதில்களையும் கவனிப்போம்.

### வீட்டின் விலை இந்த வருட ஆரம்பத்தில் அதிகரிக்கும் எனக் கூறுகிறார்கள். இது உண்மையா? இதன் காரணம் என்ன?

ஜெயந்தன், Brampton

வீட்டின் விலைவாசிகள் எப்போதும் நாட்டுப் பொருளாதாரத்தைச் சார்ந்தே காணப்படும். வட்டி விகிதம் கூடுவதாலோ குறைவதாலோ மட்டும் வீட்டு விலையில் மாற்றங்கள் ஏற்படும் என்று சொல்வதற்கில்லை. இருப்பினும் இந்த வருட பகுதியில் வட்டி விகிதம் மீண்டும் குறையவுள்ளதால் வீட்டிற்கான கேள்வி அதிகரிப்பதற்கு வாய்ப்புக்கள் உள்ளது. இக் கேள்வி அதிகரிப்பினால் விலைகளில் சிறிதளவு மாற்றங்கள் ஏற்படலாம். வீட்டின் விலை வளர்ச்சியானது ரொறன்ரோ பெரும்பாகம் மற்றும் சுற்றுப்புறங்களில் அண்மைக்காலங்களில் ஓர் சீரான வளர்ச்சியையே கொண்டுள்ளது. இதற்கு முக்கிய காரணியாக கனடிய பொருளாதாரம் மற்றும் அதனால் இயங்கும் வட்டி விகிதம் போன்றவற்றைக் குறிப்பிடலாம்.

### எனது மோட்கேஜ் இந்த வருட மத்தியில் முடிவுக்கு (5வருடம்) வருகின்றது. மீண்டும் அதே வங்கியில் வைத்திருப்பது பற்றி உங்கள் விளக்கம் என்ன?

கோமதி, ஸ்காபரோ

நீங்கள் எந்த வங்கியில் மோட்கேஜ் வைத்திருக்கின்றீர்கள் என்பதனை விட எவ்வளவு வட்டி விகிதம் குறைக்கின்றீர்கள் என்பதிலேயே கவனம் செலுத்த வேண்டும். ஒவ்வொரு கடன் வழங்கும் நிறுவனங்களும் வேறுபட்ட வட்டி விகிதங்களை தினசரி மாற்றிய வண்ணம் இருக்கின்றன. சில வங்கிகள் சற்று இறுக்கமான விதிமுறைகளை கடைப்பிடிப்பனவாயும் மற்றையவை தளர்ந்த விதிமுறைகளை கையாளுவனவாயும் காணப்படும். நீங்கள் இனி தெரிந்தெடுக்கும் வங்கியின் வேறுபட்ட கடன் வழங்குமுறைகளையும், ஒப்பந்தங்களை மீறும் பட்சத்தில் அறவிடப்படும் 'Penalty' வகைகளையும் நன்கு அறிந்து, அதிகுறைந்த வட்டிவிகிதத்தினை தெரிந்தெடுங்கள். இப்போதுள்ள பொருளாதார முறைப்படி 'Variable rate mortgage' இன் மூலம் நீங்கள் சிறிதளவு வட்டி விரயத்தினை மீதப்படுத்தலாம்.

### Link வீடுகளுக்கும் Detached வீடுகளுக்கும் உள்ள வேறுபாடுகள் என்ன? சில Link வீடுகள் Detached போன்று தோற்றமளிக்கின்றனவே?

ரவி, மார்க்கம்

Link வீடுகள் எனும்போது இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட வீடுகள் ஏதோவொரு வகையில் ஒன்றுடன் ஒன்று தொடர்புபட்டு காணப்படும். இத் தொடர்புகள் இரண்டு Garage உடனோ அல்லது வீட்டின் பின் பகுதியாகவோ, சில வேளைகளில் வீட்டின் அத்திவாரமாகவோ காணப்படும். உதாரணமாக, 'மார்க்கம் & Elson பகுதிகளில் காணப்படும் சில வீடுகள் (Link), பார்ப்பதற்கு தனிவீடு போல காட்சியளித்தாலும் அவை அத்திவாரத்துடன் தொடர்புபட்டு இருப்பதனால் அவையும் Link வகையினையே சாரும். இதை எளிதில் இனம் காண்பதற்கு வீடு விற்பனை முகவர்களின் உதவியினை நாடினால் அவர்களின் தரவுகளில் இவை தெளிவாக காணப்படும். வீடுகளில் Detached வீடுகள் விலையில் சற்று அதிகமாகவும் Link வீடுகள் விலை குறைவாகவும் காணப்படும்.

### வீடு வாங்கும் போது Home Inspection இன் அவசியம் பற்றி பல பேர் சொல்ல அறிந்திருக்கின்றேன். இது Condo கொள்வனவு செய்பவர்களுக்கும் பொருந்துமா?

வான்மதி, ஸ்காபரோ

உங்கள் கேள்விக்கு ஒரே சொல்லில் பதிலளிப்பதாயின் 'ஆம்' என்றே கூறவேண்டும். வீடு கொண்டோ எதுவாயினும் நன்கு பரிசோதித்து கொள்வனவு செய்தால் பின்னாளில் ஏற்படும் சிரமங்களை குறைக்கலாம். Condo, பலபேர்கள் சேர்ந்த ஓர் கூட்டுப் பராமரிப்பு இருப்பிடம். இதன் சுற்றுப்புறங்கள் மற்றும் தண்ணீர் குழாய்கள், Heater & A/C போன்றவற்றை பராமரிப்பதற்கு தனித்தனி கம்பனிகள் பணியில் அமர்த்தப்படுகின்றனர். அவ்வாறு பராமரிக்கப்படுகின்ற சந்தர்ப்பங்களில் ஏற்படும் திருத்த வேலைகளும் அவர்களாலேயே மேற்கொள்ளப்படுகின்றது. ஆனால் உங்கள் வீட்டுக்குள் (Condo) இருக்கும் தரை, சமையலறை, குளியலறை மற்றும், வீட்டு Fridge, Oven போன்றவை உங்களது பொறுப்பே. அவற்றிற்கு ஏற்படும் சேதங்களுக்கோ, திருத்த வேலைகளுக்கோ Condo நிறுவனம் பொறுப்பேற்காது. இவ்வாறான சந்தர்ப்பங்களை நன்கு பயிற்றப்பட்டவர்களை அணுகி தெரிந்து கொள்ளலாம். பொதுவாக Condo வாங்குமுன் குறிப்பிட்ட Condo நிறுவனத்தின் 'Status certificate' இனைப் பெற்று அதன் நிலுவைகளை தெரிந்து கொள்ளுங்கள்.

### (Corner House) தெரு தொடக்கங்கள் மற்றும் சந்திக்கு அருகிலுள்ள வீடுகள் வாங்குவது பற்றி உங்கள் கருத்து என்ன?

அப்துல், ஸ்காபரோ

இதனை அதிகம் விரும்பி வாங்குபவர்களும் உண்டு. அதே சமயம் தவிர்த்து ஒதுக்குபவர்களும் உண்டு. இதற்கான பல காரணங்கள் உண்டு. பொதுவாக சிலர் traffic குறைவான பகுதியை விரும்புபவர்களாக இருந்தால் அவற்றை தெரிந்தெடுக்க மாட்டார்கள். அதுமட்டுமன்றி வெளிப்பகுதி வேலைகளை (Gardening/ Snow Cleaning) அதிகம் விரும்பாதவர்களும் அவ்வண்ணமே. அனேக Corner House களில் Side walk சற்று நீளமாக காணப்படும். Winter காலங்களில் அவற்றினை சுத்தமாக வைத்திருக்க வேண்டியது கடமை மட்டுமல்ல காப்புறுதிக் கம்பனிகளின் விருப்பமும் கூட. இவ்வாறாக பல எதிர்மறை காரணிகள் இருப்பினும், ஒரு குறிப்பிட்ட பகுதியில் உள்ள அனைத்து வீடுகளைக் காட்டிலும் Corner வீடுகள் தனித்துவமாக காணப்படுவது ஓர் அழகுதான். கட்டிட அமைப்புகளிலும் சரி, வீட்டின் உள்அமைப்புகள் மற்றும Front yard/ Side yard என்று பார்ப்பதற்கு மிக அழகாககாணப்டும் Corner வீடுகளை விரும்பி வாங்குபவர்களே அதிகம்.

### Smoke detectors & 'Co' Detectors வீட்டின் எந்த பகுதிகளில் பொருத்துவது நல்லது.

அகிலன், Vaughan

## வீடு - வினாவும் விடையும்

இது ஓர் நல்ல கேள்வி என்பதை விட மிக மிக அவசியமான கேள்வி கூட. தற்போது ஒவ்வொரு குடியிருப்பு தலங்களிலும் கண்டிப்பாக இவ் இரண்டு கருவிகளும் இருக்க வேண்டும். அது மட்டுமல்லாது இவை இயங்க வேண்டியதும் அவசியம். சிலரக இல்லங்களில் இவை இல்லாமல் இருந்தாலோ அல்லது இருந்தும் இயங்காமல் செயலிழந்து இருந்தாலோ நீங்கள் ஐயாயிரம் டொலர்கள் வரை அபராதம் செலுத்த வேண்டி வரலாம். சரி இனி கேள்விக்கு வருவோம். வீட்டிலுள்ள ஒவ்வொரு தளங்களிலும் இவை கண்டிப்பாக பொருத்தப்பட வேண்டும். Smoke detectors சமையலறையை அண்மித்த பகுதிகளிலும், படுக்கை அறைகளின் அருகாமையிலும் மற்றும் நிலக்கீழ் அறையிலும் மற்றும் 'Co' detectors கண்டிப்பாக படுக்கை அறைகளிலும் மற்றும் ஏனைய தளங்களிலும் இருத்தல் அவசியம். தற்போது நடைமுறையிலுள்ள "Voice activated smoke alarm" குழந்தைகளை தூக்கத்திலிருந்து விரைவில் எழுப்புவதற்கு துணைபுரிவதாக ஆராய்ச்சிகள் கூறுகின்றது. இவ்வாறான கருவிகளை குழந்தைகள்/ சிறுவர்கள் படுக்கை அறைகளை அண்மித்து பொருத்துவதும் தகும்.

### குளிர்காலங்களில் யன்னல்களைத் திறந்து விடுதல் ஏன் அவசியம்?

அன்ரன், மார்க்கம்

உங்கள் கேள்விக்கு அண்மையில் எனது வைத்தியர் தகுந்த விளக்கம் தந்திருந்தார். நாம் குளிர்காலங்களில் அதிகம் வீட்டுக்குள் முடங்கிக் கிடக்கின்றோம். அதனால் சுத்தமான காற்றினை சுவாசிக்கும் பலனை இழந்துவிடுகின்றோம். வளியிலுள்ள ஈரப்பதன் அளவுகள் செயற்கையாக வெப்பமேற்றப்படும் வீட்டுக்குள் மாறுபட்டே காணப்படுகின்றது. இதனால் எமது சுவாசக் குழாய்கள் வரட்சியாகி நாங்கள் நோயாளி ஆகின்றோம். அது மட்டுமல்லாது எமது உடலுக்கு புத்துணர்ச்சி தரவல்ல இயற்கை காற்றின் சுகத்தினையும் இழக்கின்றோம். எமது பல குழந்தைகள், முதியவர்கள் ஆகியோர் அதிகமான நேரத்தை வீட்டுக்குள் கழிப்பதால் அவர்களுக்குத் தேவையான சுத்தமான காற்றினை யன்னல்களை திறந்து வைப்பதன் மூலம் பெற்றுக் கொள்ளலாம். சிலர் சூடு விரயம் குறித்து யன்னல்/ கதவுகளை பூட்டியே வைத்திருப்பர். மாறாக தினசரி சில மணித்தியாலங்களாவது வீட்டுக்குள் காற்றினை வரவழைத்து சுகாதாரமாக வாழ்வோமாக.

15ம் பக்கம் பார்க்க...

## அறியவில்லையானால் அறிந்துகொள்ளுங்கள் - கனடாவில் சில தகவல்கள்

# காப்புறுதி மோசடி மூலம் திடீர் செல்வந்தனாக விரும்பினால்... தீர்வு!?



சிவ பஞ்சலிங்கம்
- ஆயுட்காப்புறுதி பிரதிநிதி -

முன்னைய காலங்களில் ஈழ மண்ணின் கிராமங்களில் உள்ள முதியோர் ஒரு தத்துவக் கதை சொல்வார்கள்.

“பூனை ஒன்று வீடு ஒன்றில் உள்ள குசினிக்குள் சென்று, அங்கு சட்டியில் உள்ள பாலைத் திருட்டுத்தனமாகக் குடிக்கும் போது, தமது கண்களை மூடிக்கொண்டு எதுவிதமான பயமும் இல்லாமல் துணிந்து குடிக்குமாம். கண்களை மூடிக்கொண்டு பாலைக் குடிக்கும்போது பூனைக்கு உலகமே இருட்டாகத் தெரியும். தம்மைப்போல தன்னைச் சுற்றியுள்ள சகல ஜீவராசிகளுக்கும் உலகமே இருட்டாகவே இருக்கும் என அந்தப் பூனை நினைக்குமாம். தாம் மிகப் பெரிய புத்திசாலி என நினைத்து பாலைத் திருடிக் குடிக்கும் பூனைக்கு திடீர் என சாட்டையடி விழும்போதே உண்மை புரியுமாம்!”

இது மனித வாழ்வுக்குத் தேவையான ஒரு “தத்துவக் கதை”.
இந்தப் பூனையின் நினைப்புப் போலவே கனடாவில் காப்பறுதியில் மோசடி செய்து திடீர் என செல்வந்தனாக முயலும் மனிதர்களுக்கு ‘சட்டம்’ என்ற சாட்டையினால் ‘நீதி தேவதை’ என்ற தெய்வத்திடம் இருந்து அடிவிழும்போதே ஞானோதயம் ஏற்படுவதுண்டு.
இங்கு உதாரணத்திற்கு ஒரு சம்பவம்: கடந்த யூன் 11, 2007 அன்று ரொறன்ரோவில் 361, யூனிவெர்சிட்டி அவெனியூவில் உள்ள நீதிமன்றத்தில் காப்புறுதியில் மோசடிசெய்து, திடீர் என செல்வந்தனாக விரும்பி, ஒரு விபத்தினை உருவாக்கப் போய், அது ஒரு உயிரினைப் பறிக்கும் நிலையினை உருவாக்கிய, ரொறன்ரோவில் பிரபல்யமான வர்த்தகர் ஒருவருக்கு எதிராகத் தீர்ப்பு வழங்கும் நாள். மனைவி, உறவினர்கள், நண்பர்கள் என ஏராளமானோர் நீதிமன்றத்தினுள் புடைசூழ்ந்திருந்த நிலையில் குற்றவாளியான வர்த்தகர் கை விலங்குடன் காவல் துறையின் அரவணைப்புடன் தலைகுனிந்து வந்திருந்தார்.

சரி! இனி அவர் என்ன செய்தார் என்ற சம்பவத்திற்கு வருவோம்.
2001ஆம் ஆண்டு நத்தார் தினம். ரொறன்ரோ நகரில் நடந்த மிகப் பெரிய தீ விபத்து! ‘டன்வோர்த் - வூட்பைன் சந்திப்புக்கு அருகில், கட்டிடங்களை நிர்மாணிப்பதற்குரிய பொருட்களை களஞ்சியப்படுத்தி வைத்திருக்கும் மிகப் பெரிய கட்டிடம் (Woodbine building supply building) ஒன்று தீப்பற்றி எரிந்தது. மிகப் பெரிய சுவாலையுடன் எரிந்த இக் கட்டிடத்தினுள் தீயினை அணைப்பதற்கு மொத்தம் 170 தீயணைப்புப் படையினர் ஈடுபட்டதுடன், இக்கட்டிடத்தைச் சுற்றி ஐம்பது மீற்றர் சுற்றளவில் உள்ள சுமார் ஐம்பதுக்கு மேற்பட்ட வீடுகளில் குடியிருந்தோரை பாதுகாப்புக் கருதி, அந்தக் குளிர்கால அதிகாலை நேரம் இடம் பெயரவைக்க வேண்டிய நிலைமை காவல் துறைக்கும் தீயணைப்புப் படைக்கும் ஏற்பட்டது.

இக்கட்டிடத்தின் அழிவில், காப்புறுதிக் கம்பனியிடம் இருந்து எதிர்பார்க்கும் 3 மில்லியன் டொலர் பணம், பின்னர் இதனை வைத்து இதே இடத்தில் பெரிய கொண்ட-மேனியம், மற்றும் இரவு விடுதி ஒன்று நிர்மாணிக்கும் திட்டத்தில் உருவான ஒரு சதிவலைப் பின்னலே இதுவாகும்.

இச்சதித் திட்டத்தின் உரிமையாளர் திரு.ஜோன் மக்றே என்பவர். இத்திட்டத்தில் இயக்குனர் 37 வயதான திரு.அட்ரியன் றொக்ஸ் என்பவர். மிக பெரிய அழகு சாதன நிலையத்தின் உரிமையாளர் பலருக்கும் தெரிந்த பெரிய வர்த்தகர்! சதித்திட்டத்தின் தொழிலாளிகள் இருவர். ஒருவர் அந்தோனி ஜார்சிவிக் என்பவர். கட்டடத்தின் பாதாள நில அறையில் தீ அழிவினை உருவாக்கப் போன ஒரு சின்ன தொழில்நுட்பவியலாளர். அந்த சதி நேரத்தில் எரிபொருள் சாதனம் வெடித்து அதனுள்ளேயே பலியாகிவிட்டார்.

**தகவல் தொடர் - 13**

இன்னொரு உதவியாளராகப் போன தொழிலாளி, முகம் தெரியாத அளவுக்கு எரி காயங்களோடு தப்பி, குற்றத்தினை ஏற்றுக்கொண்டார். இதுவே சம்பவம்!

காப்புறுதிப் பணத்திற்காகக் கட்டிடத்தினை எரித்தது அதில் ஒரு இரண்டாம் தரமான கொலை மக்களுக்குத் தொல்லை கொடுத்தது, இப்படிப் பல குற்றச்சாட்டுகள்.

தண்டனை என்பது இங்கு குறைந்த தண்டனை அல்ல. வாழ்க்கையில் இனிமேல் நிமிர முடியாத நிலைமை. இவர்களைச் சுற்றவுள்ள நண்பர்களால், வர்த்தக பிரமுகர்களால் நம்பவே முடியவில்லை.

இங்கு காப்புறுதி என்றால் என்ன?. அது, ஆபத்துக்குரிய ஒரு “பாதுகாப்பு!” பாதிக்கப்பட்டவனுக்கு பாதிக்கப்பட்ட நேரத்தில், கொஞ்சம் கைகொடுக்கும் ஒரு சிறு பணப் பெட்டகம். ஆபத்தினால் பாதிப்புகள் வரும் என எதிர்பார்க்கும் பலரும் சேர்ந்து குறிப்பிட்ட காப்புறுதித் திட்டம் என்ற பெட்டகத்தினுள் பணத்தினைப் போடுகின்றார்கள். அது சேமிப்பாக, ஒரு முதலீடாக வளர்க்கப்படுசின்றது. இப்பணத்தினை மாதாமாதம் இவ் பெட்டகத்தினுள் போடும் பலருள், பாதிக்கப்

15ம் பக்கம் பார்க்க...

# வாழ்க்கை சுவர்க்கமாவது இனிய இல்லமொன்றில்...

### Lawrence/Midland


**$139,900**

2 Bedrooms, 1 Washroom, Corner Unit, Large And Bright. Totally Renovated - Thousands Spent. Very Clean. Freshly Painted Colours.

### Birchmount/Ellesmere


**$185,900**

1+1 Bedrooms, 1 Washroom, Immaculate Condition, Luxury Tridel Built,1 Bdrm + Den, North View, Close To Ttc & Hwy 401, Indoor Pool,

### Warde/ St.Clair


**$199,900**

2+1 Bedrooms, 1 Washroom, Bright, Spacious & Clean Lowrise Condo In Good Location, Central Air, Walkout To Fenced Yard, Steps To Warden Subway

### Mclevin/Tapscott


**$238,900**

3 Bedrooms, 1 Washroom, Att/Row/Twnhouse 2-Storey, Corner Unit Just Like Semi-Large Lot With Lots Of Space.

### Steeles/Brimley


**$270,000**

3 Bedrooms, 3 Washroom, Bright, 3 Bedroom Home. Living Room And Dining Room Combo Walk-Out To Yard from Dining Room

### Ravenscroft/Delanry


**$279,900**

3+1 Bedrooms, 3 Washrooms, Fantastic Large Family Room, Fully Fenced And Landscaped, Main Floor Laundry Room

### Brimley & Steeles


**$310,000**

3 Bedrooms, 2 Washroom, Newly Renovated!! Freshly Painted, New Laminate Floors Throughout, New Roof, Direct Access To Garage

### Markham/Passmore


**$324,900**

3 Bedrooms, 3 Washroom, Lovely 3 Yrs., New Acorn Built Freehold T/House. Approx. 1900 Sq. Ft., Gleaming H/Wood Flrs.

### Markham Rd/ 14th Ave


**$359,900**

3 Bedrooms, 3 Washroom, Spectacular Home In A Great Location, Many Upgrades, Fabulous Living/Dining/Family & Kitchen

### Middlefield/Denison


**$384,900**

4+1 Bedrooms, 4 Washroom, Home In Prestigous Location Corner Lot. Great Layout 4 Bdrm House With 1 Bedroom Basement Apartment

### Steeles E/Staines


**$389,900**

4 Bedrooms, 3 Washroom, Walkto Ttc Stop N Turnround/Steeles Av,Golf Course,Dble Garage + (4 )Cars No Sidewalk Driveway

### Mccowan/Highglen


**$392,999**

4+1 Bedrooms, 5 Washroom, Beautiful Remington Home In A High Demand Location, Enclosed Front Porch, Direct Access To Garage

### Taunton/Wilson


**$399,300**

5 Bedrooms, 3 Washrooms, 5 Bedroom Home, 5th Bedroom Is 3.84X3.18. , 4 W/I Closets, Main Floor Office, Main Floor Laundry

### Morningside/Sheppard


**$459,000**

4 Bedrooms, 3 Washroom, Less Than 3 Years Old Detached Mattamy Build Home. 4 Bedrooms On The 2nd Floor And A Library

### Major Mac/Mccowan


**$465,000**

4 Bedrooms, 3 Washroom, Gorgeous Detached, The Gallery Model, 2431 Sq Ft, Built By H&R, Beautiful Layout, 9-Foot Ceilings

### 14th/9th Line


**$489,900**

4 Bedrooms, 2 Washroom, Brand New House. Never Lived In. Hardwood Floor Throughout. Move In To A New House For The New Year

### Castlemore/Mcvean


**$679,000**

6 Bedrooms, 5 Washroom, Over 4200 Sqft Living Space With Extra Large Bedrooms, Hardwood Floors And Parquet Floors

### Finch/ Middlefield



**$144,500 For Sale**

Brand New Two Storey Indoor Mall Located Right At The South East Corner Of Finch And Middlefield. Modern Design Immediate Occupancy

***New Retail/Restaurant Units Available for SALE/LEASE***

### Kingston/Lawrence



**$899,000 For Sale**

Amazing Location In Heart Of Toronto Zoning Permits Many Uses. Professional Offices [Doctor, Lawyer, Dentist, Vetenary, Chiro, Physio Etc] Church, Day Care Centre

**I can also assist you with:**
**Mortgage Financing,**
**Home Inspection,**
**Real Estate Lawyer**



## Elaguppillai (Mike) Srinathan, B.Sc.

Sales Representative

**Direct: 416.276.1225**

esrinathan@trebnet.com

**HOMELIFE/GTA Realty Inc.** 1711 McCowan Rd., Suite 206, Toronto, ON M1S 3Y3

HOMELIFE HIGHER STANDARDS

digi Media Creations - 416.467.4952

# அறியவில்லையானால் அறிந்து...

13ம் பக்கத் தொடர்ச்சி...

படும் ஒரு சிலரே இழப்பீடு என்னும் பெயரில் கொஞ்ச நட்ட ஈட்டினை வெளியே எடுக்கின்றனர்.

இப்பெட்டகத்தினுள் இருக்கும் பணம் என்பது எல்லோருக்கும் பொதுவான மக்கள் பணம். ஆயுள் காப்புறுதி என்றாலும் சரி வாகன காப்புறுதி என்றாலும் சரி வீடுகள், உடமைகள் சொத்துகளுக்குரிய காப்புறுதியாக இருந்தாலும் சரி உடல் இயலாமை காப்புறுதி உட்பட கொடியநோய்களினால் பாதிக்கப் பட்டவர்கள் நிவாரணம் பெறும் காப்புறுதியாக இருந்தாலும் சரி சகல காப்புறுதிகளும் பலரும் பணம் போட்டு வைக்கும் ஒரு பணப் பெட்டகமே!

இதனை நிர்வகிப்பவர்களுக்குரிய செலவுகளும் இதே பெட்டகத்தில் இருந்தே போகின்றது. இதில் இருந்து மோசடி செய்து, நட்டஈடு கோரும் பலரின் குற்றங்களைப் புலனாய்வு செய்வதற்கு ஒரு நிறுவனம் உருவாக்கி, அதற்குரிய மில்லியன் டொலர்களும் இப் பெட்டகத்திலிருந்தே வெளியே போகின்றது.

இங்கு பண மோசடிமூலம் காப்பறுதிப் பணம் பெறுவது பல மனிதர்களின் கூட்டான பொதுப் பணமே ஆகும். எந்தவொரு காப்புறுதி நட்டஈடு கோரலின்போதும் இழப்பீடுகளில் பணம் பெறும் சம்பவங்களை, முதலில் காப்புறுதி கம்பனிகள் சந்தேகக் கண்கொண்டே பார்க்கும். நட்டஈடு கோரும் சம்பவம் உண்மை! மோசடி என்பது இல்லை என்பதனை நிரூபிக்க எத்தனையோ பத்திரங்கள் சமர்ப்பித்த அனுபவம் எங்கள் தொழில் அனுபவங்களில் உண்டு.

ஆயுள் காப்புறுதியில் மரணம் நடந்து நட்டஈடு கோரும்போது 'மரண அத்தாட்சிப் பத்திரம்' சமர்ப்பிக்க வேண்டும்.

கனடாவில் ஆயுள் காப்புறுதி செய்த ஒருவர் தாயக மண்ணில் உள்ள கிராமத்தில் போய் நின்ற வேளையில் மரணம் நடந்தால், அதனை நிருபிப்பதற்கு காப்புறுதிக் கம்பனி எத்தனையோ வழிகளைக் கையாளும். இங்கு தேவையானது - இழப்பீடு தொடர்பான சரியான நிருபணம்.

## தெழில் விபத்து காப்புறுதி

வாகன விபத்தில் மோசடிப் பத்திரம் சமர்ப்பித்து, நட்டஈடு கோர முயற்சித்து சிறைத் தண்டனையினை எதிர்கொண்டவரின் கதை இது.

2002ஆம் ஆண்டு யூன் மாதம் 12ஆம் திகதி வன்கூவரில் வாகன விபத்தினை எதிர்கொண்டார் திரு. அலன் மெல்ரி என்ற அந்த மனிதன். வீடுகளுக்கு நிறம் பூசும் தொழில் செய்துவந்த இவர், உடல் காய முற்ற நிலை விபத்தில் உருவாகியது என்பதனைக் காட்டி தமது தொழில் வருமானத்தில் 80வீதத்தினை இழப்பீடாகக் காப்புறுதிக் கம்பனியிடமிருந்து பெறுவதற்கு மனுச் செய்திருந்தார். தமது வருமானத்தினை உறுதிப்படுத்துவதற்காக விபத்து நடந்த வருடத்திற்கு முதல் இரு வருடங்களிலும் (2000, 2001ஆம் ஆண்டுகள்) கனடிய வருமான வரி நிறுவனத்திற்குச் சமர்ப்பித்த அறிக்கைகள் கேட்கப்பட்ட போது, நட்டஈடு பெறும் மோகத்தில் அதிகூடிய வருமானம் பெற்றதாக போலியான அறிக்கைகளைத் தயார்செய்து காப்புறுதிக் கம்பனிக்குச் சமர்ப்பித்தார்.

போலியான அறிக்கைகள் சமர்ப்பித்து நட்டஈடு கோர முயற்சித்தார் என்பது ஒரு கிரிமினல் குற்றமாகக் கருதப்பட்டு, நீதிமன்றத்தின் முன் நிறுத்தப்பட்டு இறுதியில் நான்கு மாத சிறையும் 1,500 டொலர் அபராதமும் தீர்ப்பாக வழங்கப்பட்டது.

இவ்வழக்கில் தீர்ப்பு வழங்கிய பிரிட்டிஷ் கொலம்பியா மாகாண நீதிமன்ற நீதிபதி திரு.ரி.ஜே.ஹோவ், இது பற்றிக் குறிப்பிடும் போது, வாகனக் காப்புறுதியில் மோசடி என்பது ஏராளமான பொது மக்களின் வாகன காப்புறுதி நிதியத்தில் மேற்கொள்ளும் ஒரு திருட்டு முயற்சி எனவும், இது வாகன காப்புறுதிக்காக மாதாமாதம் பணம் செலுத்தும் யாவரையும் பாதிக்கும் செயலாகும் என்றார்.

## ஆயுள் காப்புறுதி மோசடி

ஆயுள் காப்புறுதியில் மோசடி செய்யப்போய் மாட்டிக்கொண்ட இன்னொருவரின் கதை இது!

1985ஆம் ஆண்டு அல்பேர்ட்டா மாகாணத்தின் தலைநகரமான எட்மன்ரன் நகரில் நடந்தது. தூக்கத்தில் ஆழ்ந்து போயிருந்த குடும்பப் பெண்ஒருத்தி திடீரென குளோரபோம் தோய்க்கப்பட்ட துணியினால் மூக்கினை அழுத்தி கொலை செய்யப்பட்டிருந்தார். இவரது கணவன் கயிற்றினால் கட்டப்பட்டு இருந்தார். இவர்களின் இரு பெண்குழந்தைகளும் ஆழ்ந்த தூக்கத்தில் இருந்தனர்.

கணவனே திட்டமிட்டு மனைவியைக் கொலை செய்துவிட்டு தம்மையும் தாமாகவே கயிற்றால் கட்டிப்போட்டுவிட்டு வீட்டினுள் புகுந்த கொள்ளையர் எவரோ இவ்வாறு செய்து விட்டனர் என்று புலம்பினார்.

கொலைசெய்யப்பட்ட பெண்ணுக்கு 'ஆல்ஸ்ரேற் இன்சூரன்ஸ் கம்பனியில் (All State Insurance Company)இருந்த 150,000 டொலர் பணத்துக்காகவே இது நடந்தது என்பது இலகுவாகத் துப்பறியப்பட்டது. கொலை செய்த கணவன் நிரந்தரமாகக் கம்பி எண்ணுகின்றார். இவ்விரு குழந்தைகளும் தங்கள் பேரன்மாரின் அரவணைப்பில் வளர்ந்து, பின்னர் காப்புறுதிக் கம்பனிக்கு எதிராக வழக்குத் தாக்கல் செய்து தாயின் மரணத்துக்குரிய காப்புறுதித் தொகையினை இவ்வளவு காலத்திற்குரிய வட்டியுடன் சேர்த்து 1998ஆம் ஆண்டு பெற்றுக்கொண்டனர்.

(ஆதாரம் 'ரொறன்ரோ ஸ்ரார்', டிசம்பர் 31, 1998)

## வாகன விபத்து காப்புறுதி மோசடி

2002ஆம் ஆண்டு, ஏப்ரல் 28ஆம் திகதி நடந்தது. திரு.பீற்றர் புற்றொஸ் என்பவரது வாகனமும் திரு.ஜோனி ஜேனா என்பவரது வாகனமும் ரொரன்ரோ வீதியில் இருந்து கடைகள் இருக்கும் பக்கம் திருப்பும்போது மோதல் நடந்துவிட்டதென 'விபத்துக்கள் முறைப்பாட்டு நிலையத்தில்' (Collision Reporting Centre) முறைப்பாடுகள் செய்துவிட்டு தத்தமது காப்புறுதிக் கம்பனிகள் ஊடாக வாகனங்களுக்கு ஏற்பட்ட சிறு காயங்களுக்கு நட்டஈடு, உடல் காயங்களுக்கு நட்ட ஈடு எனப் பல வழிகளில் முயற்சி செய்தனர். ஆனால், விபத்துக்கள் முறைப்பாட்டு நிலையத்தில் வாகனத்திற்கு ஏற்பட்ட காயம் என்பது சிறு உரசலாக இருந்தாலும் அதனைப் படம் பிடிப்பது வழமையாகும். ஆனால் இங்கு எடுக்கப்பட்ட படங்களை வைத்து துல்லியமாகப் பார்த்தபோது, இவ்விரு வாகனங்களும் மோதியதில் ஏற்பட்ட விபத்து மாதிரித் தெரியவில்லை என்ற சந்தேகம் ஒரு நபரின் காப்புறுதிக் கம்பனிக்குப் புலப்பட்டது. அடுத்தது என்ன? இரு காப்புறுதிக் கம்பனிகளின் புலனாய்வுப் பிரிவினர், விபத்து முறைப்பாட்டு நிலைய புலனாய்வுப் பிரிவினர் யாவரும் கூட்டாகச் சேர்ந்து துப்பறியத் துவங்கி, இது எங்கேயோ என்னவோ வாகனத்தில் ஏற்பட்ட காயத்தினைக் காட்டி, விபத்து நடந்த இடம் வீதியில் இருந்து கடைப் பகுதியில் திரும்பும் இடம் குறிப்பிட்ட விலாசத்தில் சரிவர இல்லாதிருப்பதும் தெரியவர, இது மோசடி என்பது சந்தேகத்திற்கு இடமில்லாது நிரூபிக்கப்பட்டது.

திட்டமிட்டு இருவரும் வாகன விபத்து என முறைப்பாட்டு நிலையத்தில் மோசடியாக முறைப்பாடு செய்து நட்டஈடு பெற முயற்சித்தார்கள் எனக் குற்றம் சாட்டப்பட்டு, நீதிமன்றத்தில் நிறுத்தப்பட்டனர்.



நம் நாட்டில் ஒரு பழமொழி சொல்வார்கள்: "பொய் சொன்னாலும் பொருந்தச் சொல்லு" என்று. பொருந்தச் சொல்லத் தெரியாததால் எடுக்கப்பட்ட படங்களை வைத்து வசமாக மாட்டிக்கொண்டார்கள்.

(தகவல்: காப்புறுதி தகவல் மையத்தின் மின் கணணி தகவல் மையம்)

■ ■ ■

# Smoke detectors, 'Co' detectors...

11ம் பக்கத் தொடர்ச்சி...

**வீட்டு வாகனத் தரிப்பிடத்திற்கும் வீட்டுக்கும் இடையிலுள்ள கதவினை மூடி வைத்திருப்பது அவசியம் என்கிறார்கள். அதற்கான காரணத்தை விளக்க முடியுமா?**

காங்கேசு, Brampton.

நிச்சயமாக. இதுவும் குளிர்காலங்களில் ஓர் முக்கியமாக கவனிக்கப்பட வேண்டிய விடயமாகும். வாகனங்களிலிருந்து வெளி யேறும் வளியில் 'காபன்மொனொக்சைட்' (CO) எனப்படும் நச்சு கலந்த வாயுவும் உண்டு. இதனை Silent Killer என்றும் அழைப்பார்கள். குளிர்காலங்களில் நாம் வாகனங்களை சிறிதுநேரம் தரிப்பிடத்திலே யே இயக்குவது வழமை. அவ்வாறான வேளைகளில் வாகனத்தின் புகை வீட்டுக் குள் பரவாமல் தடுத்தல் மிக அவசியம். சில சந்தர்ப்பங்களில் நாம் ஏதேச்சையாக கதவினை திறந்து விடக்கூடும் என்பதனால் தானியங்கி முறை மூலம் கதவினை பூட்டிய நிலையில் வைத்திருக்கக் கூடிய (Self control closing device) கருவியை பொருத்தி விடுதல் வேண்டும். இம்முறைமூலம் சிறார் களை அதிகம் பாதிக்கும் 'CO'நச்சு வாயுவை வீட்டுக்குள் புகாமல் தடுக்க முடியும்.

சரி நேயர்களே 2008 ஆம் ஆண்டில் காலடி எடுத்து வைத்திருக்கும் எமது சமுதாயம் இதுவரை எத்தனையோ படிக்கற்களை கடந்து வந்தாயிற்று. இனிவரும் காலங்கள் உங்கள் வசந்த காலமாக இருக்க வேண்டும் என்பது எனது உளமார்ந்த விருப்பமும் கூட. மலரும் இப்புத்தாண்டில் சீரும் சிறப்பு மாக அனைவரும் இன்புற்றிருக்க இறையருள் வேண்டி, மீண்டும் வரும் இதழ்களில் வாசகர் அனைவரையும் சந்திப்போம் என்று நிறைவடைகின்றேன்.

■ ■ ■

# வாடகைவீடா சொந்தவீடா சிறந்தது?



சொக்கலிங்கம் பிரபாகரன்
- வீடுவிற்பனைப் பிரதிநிதி -

வீடு வாங்குவது என்பது சடுதியாக முடிவெடுத்து கடையில் ஒரு பொருளை வாங்குவது போன்றதல்ல. நீண்ட கால முதலீடு ஒன்று என்ற அடிப்படையில் பொறுப்புணர்வோடு ஆராயப்பட வேண்டிய விடயம்.

எமக்கு தேவையான வீட்டை வாங்குவதா அல்லது வாடகைக்கு எடுப்பதா சிறந்தது என்பதனை ஒவ்வொருவரும் சிந்தித்து முடிவெடுக்க வேண்டும். வீடு வாங்குவது என முடிவெடுத்தபின் அந்த முடிவு சரியானது என்ற திருப்தி உங்களுக்குள் இருக்க வேண்டும். வீடு வாங்கமுன் வீடு வாங்குவதா உங்கள் வீட்டுத் தேவையை வாடகைக்கு என மட்டும் எடுத்து பூர்த்தி செய்வதா சிறந்தது என்பதை அதன் அனுகூல பிரதிகூலங்களை ஆராய்வதனூடு தீர்மானிக்க முடியும்.

## வாடகைக்கு இருத்தல்:

பொதுவாக வீடு வாங்கும் செலவைவிட வீட்டை வாடகை பெற்று இருக்கும் செலவு குறைவானதாக இருத்தலுக்கும் கடந்த சில காலங்களில் வட்டிவீதம் முதல்தரமாக வீடு வாங்குபவரின் வீட்டுக்கடனுக்கு குறைவாக வேளையில் வாடகைக்கு இருப்பதைவிட Mortgage Payments குறைவாக இருந்தது என்பது உண்மை. ஆனாலும் வாடகைக்கு இருக்கையில் வேறு சில அனுகூலங்கள் உள்ளன. உதாரணமாக ஒரு வீட்டில் வாடகைக்கு இருப்பவர் வீட்டுவரி செலுத்தத்தேவையில்லை. மற்றும் பராமரிப்புச் செலவு, திருத்த வேலைகள் போன்ற வீட்டு உரிமையாளர்கள் செய்கின்ற செலவுகள் செய்யத் தேவையில்லை.

Down Payment, இதர செலவுகள் போன்றவற்றிற்கு செலவிடும் பணத்தை அதிக வருவாய் தரவல்ல முதலீடுகளில் முதலிடலாம். இதனை ஒப்பிட்டுப் பார்த்து முடிவு செய்வது ஒவ்வொருவரது தனிப்பட்ட பொறுப்பாகும். அதாவது வீட்டில் முதலிடுவதா அல்லது பிற வர்த்தக அல்லது பொருளாதார முதலீடுகளில் முதலிடுவதா சிறந்தது என்பதை ஒவ்வொருவரும் தம் தம் நிலைமைகளுக்கேற்ப முடிவு செய்ய வேண்டும். குறுகிய கால நோக்கில் பார்க்கும்போது அடிக்கடி இடம்மாறி வேலை செய்ய வேண்டிய தேவையுள்ளவர்களுக்கு வாடகைக்கு இருப்பது உதவியாக உள்ளது.

வாடகைப்பணமானது வரிவிலக்கிற்கு காட்டப் படக்கூடிய ஒன்று. குறைந்த வருமானமுள்ள வர்களுக்கு ஒன்ராரியோ வரிவிலக்குக்கு காட்டவல்ல ஒன்றாக வாடகைச் செலவு அமைகிறது. வாடகைச் செலவிற்குள் வீட்டுவாடகை, வீட்டில்உள்ள அலுவலக வாடகை, வர்த்தக இடவாடகை, சொந்த அலுவலக, வர்த்தகத்திற்கு தேவையான இடத்துக்கான வாடகை என்பன அடங்கும்.

## பொருத்தமாக வீட்டை வைத்திருத்தல்:

வீட்டின் விலை காலத்துக்கு காலம் அதிகரித்து வருகிறது. ஆனால் வீடு உங்கள் பிதான வதிவிடமாக இருப்பின் அதன் செலவுகளை வரிவிலக்கிற்கு காட்டமுடியாது.

வீட்டின் கடனுக்கான மீள செலுத்துதலில் ஆரம்ப சில வருடங்களில் முதல்ப்பணம் சிறிதளவே காட்டப்பட்டாலும் பின்பு வெகு வேகமாக கடனுக்கான முதல்ப்பணம் செலுத்தப்படுவதால் சொத்தின் சேமிப்பு தொகை வேகமாக அதிகரிக்கிறது.

முதல்தரமாக வீடு வாங்குபவர்களினால் RRSP எனப்படும் சேமிப்பு தொகையிலிருந்து வீடு வாங்குவதற்கு தேவையான முதலாக ஒவ்வொருவருக்கும் $20,000 வரை பெற முடியும். இவ்வாறாக மீளச் செலுத்தப்படும் அடிப்படையில் பெறப்பட்ட பணமானது வரிவிலக்குக்கு தகைமையுடையதாக உள்ளது. இந்த சலுகை முதல்த்தரமாக வீடு வாங்குபவர் ஒருவர் தன் பிரதான வதிவிடமாக ஒரு வீட்டை வாங்கும் பொழுது மட்டுமே சாத்தியமாகிறது. அவ்வாறு இன்று முதல்தரமாக வீடு வாங்காதவருக்கு Five Year rule (5வருட நிபந்தனை) விதிக்கப்படுவதுண்டு. முதல்த் தரமாக வீடு வாங்குபவர்கள் RRSPயிலிருந்து பெற்றுக்கொண்ட பணத்தை 15வருட காலத்தில் மீளச் செலுத்த அனுமதிக்கப்படுவதும் மற்றுமொரு சலுகையாக அமைகிறது.

அண்மைக்க காலங்களில் வீடு வாங்குபவர்களுக்கு வீடு வாங்கும் படலத்தை வெகு இலகுவாக்குகின்ற விடயம் அதி குறைந்த முற்பணம் (Down Payment) செலுத்துவது ஆகும். அதிகுறைந்த முற்பணமாக "Nothing Down" அல்லது "% Down" எனப்படும் முற்பணமின்றி வீடு வாங்குவது கருதப்படுகிறது. ஆனால் அவற்றை இலகுவில் நம்பிவிடலாகாது. "Down Payment" என்பவர்கள் "No Fees" (கட்டணங்கள் ஏதுமின்றி) என்பதை உத்தரவாதப்படுத்துவதில்லை. வீட்டுக்கடன் தொகையை மிக அவதானமாக எப்பொழுதும் பாருங்கள். நீங்கள் Title இல் இருக்கலாம். ஆனால் உங்கள் வீட்டில் உங்களுக்குரிய எத் தொகைக்குரியது என்பதைப் பாருங்கள். அண்மைக் காலங்களிலலே வட்டி வீதம் வரலாற்றிலேயே அதிகுறைவானதாக கருதப்படும் வண்ணம் குறைவாக உள்ளது. வீடு வாங்கும் போது தற்போதுள்ள வட்டி வீதம் அதிகரிக்கும் நிலை எதிர்காலத்தில் வரும் என்பதை எதிர்நோக்கி அதனால் எம் Mortgage கட்டணம் அதிகரிக்கும் என்பதையும் கணக்கிட்டு பார்த்து அந்த மாற்றத்தை எம்மால் சமாளிக்க முடியுமா என்பதை உறுதிசெய்வது அவசியமாகும்.

வீட்டு உரிமையாளர்களுக்கு வாடகையிலுள்ளவர்கள் போலன்றி செலவுகள் அதிகம். ஆனாலும் சுதந்திரமும் சொத்துரிமையும் தமக்கான முதலீட்டுச் சொத்து சேமிப்பும் பிரதான அனுகூலங்களாக உள்ளன.

குறைந்த வருமானமுள்ளவர்கள் Ontario Tax Credit for Property Taxes எனப்படும் சொத்து வரிக்கான ஒன்ராரியோ வரிவிலக்கு சலுகையை பெறலாம்.

70%க்கும் மேற்பட்ட கனடியர்கள் தமக்கென சொந்தமாக இல்லங்களை வைத்திருக்கின்றனர். அதனை வாழ்வின் பூரணத்துவமாக கருதுகின்றனர். அந்த வகையில் குடிசையேயானாலும் தமக்கென்றோர் வீடு இருப்பதைப் போன்ற சுகமும் சுதந்திரமும் வேறெதிலும் இருப்பதில்லை.

■ ■ ■

# ஊழல் சீனாவில் ஒரு லாபகரமான தொழில்


மாறன் செல்லையா

- நிதி திட்டமிடல் ஆலோசகர் -




முதலீட்டாளர் Warren Buffet அவர்களும் கனடிய பிரதமர் Stephan Harper அவர்களும் சீனாவைப் பற்றி எச்சரித்துள்ளனர். திரு. Buffett சொல்லுகிறார் சீனாவில் முதலிடுபவர்கள் எச்சரிக்கையாக இருக்க வேண்டும் என்று பிரதமர் Harper சொல்கிறார். கனடியர்கள் சீனாவில் முதலீடுபற்றி எச்சரிக்கையாக இருக்க வேண்டும் என்று.

இதற்கு காரணம் என்னவென்றால் சீனாவில் பொருளாதாரத்தில் புரையோடிசக் கிடக்கும் ஊழல் காரணமாக சீனாவின் பொருளதார வளர்ச்சி முடிவுக்கு வரக்கூடும் என சில ஆய்வாளர்கள் எதிர்வு கூறியுள்ளார்கள்.

Maxin Pei என்ற பேராசிரியர் சீனா முகம் கொடுக்கும் முதலாவது பிரச்சனை ஊழல். இந்த ஊழல் சீன பொதுவுடமைக் கட்சியின் அதிகாரத்திலான பிடியை இளக்கி அரசாங்கத்தை முடிவுக்கு கொண்டு வந்துவிடும். இவரின் இந்த ஆய்வு சரியானதா? திரு. Buffet அவர்களும் திரு. Haper அவர்களும் அவர்களது எச்சரிக்கை பற்றி மிகச் சரியாக இருக்கிறார்கள். திரு. Buffet அவர்கள் 22 சதத்திற்கு வாங்கிய Petro China பங்குகளை 19 Dollor க்கு விற்றுள்ளார். திரு. Harper அவர்கள சீனாவில் மனித உரிமை மீறல்கள் பற்றியும் சீனாவின் கனடிய சொத்துக்கள் வாங்குதல் பற்றியும் எச்சரிக்கையாக உள்ளார்.

சீனாபற்றி திரு. Pei அவர்கள் மேலும் தெரிவிக்கையில் சீனா ஒரு Mafia நாடு. ஒரு ஊழல் நிறைந்த வர்க்கத்தால் ஆளப்படுவது. பொதுவுடமைக் கட்சியின் அங்கத்தவர்கள் மேலிருந்து கீழ்வரை ஊழல் நிறைந்தவர்கள். இதனால் இந்த கட்சி சீர்திருத்தங்களைக் கொண்டுவரவோ அல்லது பதவியைப் பகிர்ந்து கொள்ளும் ஜனநாயகச் சீர்திருத்தங்களை நடைமுறைப்படுத்தவோ முடியாமல் இருக்கிறது.



சிலர் நினைக்கலாம் பொது நிகழ்வாக இருக்கும் ஊழல் செய்தவர்களுக்கான மரண தண்டனைகள் உலக நாடுகளையும் மக்களையும் ஏமாற்றுவததாக இருக்கிறது. ஏனென்றால் ஒரு ஊழல் செய்வோரினால் ஒரு சிறிய பகுதியினரே தண்டிக்கப்படுகிறார்கள். 190,000 கட்சி உறுப்பினர்கள் ஊழல் குற்றம் சாட்டப்பட்டபோதும் அதில் ஒரு 20 வீதமான மானவர்களே கட்சியிலிருந்து நீக்கப்பட்டுள்ளனர். ஏனையோர் வெறும் எச்சரிக்கை மட்டுமே பெற்றுக்கொண்டுள்ளனர். 6வீதத்தினர்மீது வழக்குகள் தொடுக்கப்பட்டன. 3வீதத்தினரே கடும் தண்டனைகளைப் பெற்றனர். ஊழலுக்காக சிறைக்குச் செல்வதற்கான விகிதாசாரம் 100ல் 3 ஆகும். இதனால் சீனாவில் ஊழல், குறைந்த இடரும் (risk) மிகுந்த வரவும் தரும் ஒரு நடவடிக்கையாகும்.

1980ல் மிகக் குறைந்த எண்ணிக்கையான அதிகாரிகள் ஒரு மில்லியன் Yuan வரையில் திருடினார்கள். இருந்தும் பல அதிகாரிகளும் லட்சக்கணக்கில திருடுகிறார்கள்.

ஊழல் நிறைந்த அதிகாரிகள் 3% GDP யின் பெறுமதியை திருடி இருக்கிறார்கள். இது ஏழை மக்களின் செல்வத்தை ஒரு மிகக் குறிப்பிட்ட கட்சி அலுவர்களுக்கு மாற்றவதாகும். ஆனால் ஒரு முழுமையான கணிப்பீடு இதைவிடக் கூடவாகும்.
சீனாவில் நில சீர்திருத்த அமைச்சு கடந்த ஆண்டு நடந்த சொத்து பரிமாற்றதில் அரைவாசிக்கு மேல் சட்டத்திற்கு முரணானது என தெரிவித்துள்ளார்கள். ஒரு Million மேலான பரிமாற்றங்கள் குற்றவியல் (Criminal) சட்டங்களுக்கு முரணானவை என்றும் கூறப்பட்டுள்ளது. இந்த சொத்து பரிமாற்றங்களுக்கு எதிராக பல இடங்களில் கலகங்களும் வன்செயல்களும் நடந்துள்ளன. இந்த வன்செயல்கள மேற்கு நாடுகளில் ஊடகங்களில் வெளியாகவில்லை.

அரசாங்கம் இன்றும் 35%மான பொருளாதார நடவடிக்கைக்கு காரணமாக இருக்கிறது. இது வங்கித்துறை, சக்தி வளம், இயற்கைவளம் என்ற துறைகளைக் கட்டுப்படுத்தி வருகிறது. அரசாங்கம் விலைகள், வட்டி வீதங்களை கட்டுப்படுத்தி வருகிறது.

உலகில் ஊழல் அரசாங்க முதலீடுகளில் தொடர்பாக இருந்துள்ளது. இந்த ஊழல் சகதிக்குள் சீன அரசாங்கம் சிக்குண்டுள்ளது. இதனால் இந்த சீன அரசு சீர்திருத்தங்கள் எதையும் செய்யமுடியாது உள்ளது. சீனாவின் வங்கித்துறை பலவீனமாக உள்ளது. சூழல் அசுத்தமடைகிறது. சட்ட அமுலாக்கம் முழுமையானதாக இல்லை. பொதுச் சுகாதாரத் துறை மக்களின் தேவைக்காக வளர்ச்சியடையவில்லை.

இந்த சீனாவின் நிலை மேற்கு நாட்டு முதலீட்டாளர்களின் முதலீடுகளுக்கு பாதகமாக வரலாம். இந்த ஊழல் நேர்மையான வர்த்தகங்களை வளரவிடாது. இந்த ஊழல் மேற்கு நாட்டவரின் International Perpety right கேலிக்கூத்தாகிறது.

இந்த ஊழல் காரணமாக சீனா பல சர்வதேச ரீதியாக ஒத்துக்கொண்ட ஒப்பந்தங்களை செயற்படுத்தமுடியாது உள்ளது. சீனா ஒரு ஊழல் நிறைந்த அரசு. அதை ஒரு பங்காளியாக ஏற்றுக்கொள்ள முடியாது என்கிறார் Pie அவர்கள்.

யப்பான், தென் கொரியா, தாய்வான், தாய்லாந்து, இந்தோனேசியா போன்ற நாடுகள் கடந்த காலங்களில் ஊழல் காரணமாக பல பொருளாதாரப் பிரச்சினைகள் வந்துள்ளன. சீன இதற்கு விதிவிலக்காக இருக்க முடியாது.

■ ■ ■


வீடு, வியாபாரம் வாங்க, விற்க..
THE CHAIRMAN'S CLUB
NATIONAL Award Winner 2003-2007
Top 1% in Canada
20 வருடங்களாக இத்துறையில் முன்னணியில்.
அனுபவம்! அறிவு! திறமை! பொறுமை!
KARU'S ROYAL TEAM
Top 10 TEAM Across CANADA
Karu Kandiah FRI. CRES,
Real Estate Broker.
Karu's ROYAL TEAM, Top 10 Team in Canada
Praba Jeganathan*
Chandran Sornalingam*
Siva Kandiah*
Charles Deva*
Malini Muhunthan*
Ranjan Franics Xavier*
Joy Emmanuel*
Sri Ganesh Thambaiah*
Pickering Bch/Bayly-Ajax
3 Bedrooms, 3 Washrooms Rare End Unit Townhome With Separate Driveway Like Detached.Desirable Floor Plan. Separate Living & Dining Rooms
$239,900
Torbram/Sandalwood
4 Bedrooms, 3 Washrooms All Brick Home In Most Desirable Area. Built By 'Paradise Home.' Professionally Decorated With Hardwood Floors
$434,500
Islington/Finch
3 Bedrooms, 3 Washrooms Never Lived Before. Brand New Town House. End Unit. 2 Balconies.Walkout Basement High Visibility From Finch
$354,000
Middlefield/Finch
2+1 Bedrooms, 1 Washroom Brand New 768 Sq Ft. Low-Rise Condo! Excellent Location Call for more info!
$181,900
Sheppard/Kennedy
2+1 Bedrooms, 2 Washrooms Conveniently Located Close To Agincourt Go Station, Mall, Collegiate Institute, Parks & TTC Minutes From Hwy 401
$149,900
Albion/Finch
4+2 Bedrooms, 3 Washrooms Well Maintained,2 Storey Home.Finished 2 Bdrm Bsmt W/Sep Entrance Ideal For Students/Small Family
$349,900
Kingston/Markham
Busy Kingston Road 3, Hoist Can Hold Up To 9 Cars At One Time With 3 Rolling Doors. Fantastic Bus Opp. Rent $3,000 + G.S.T
$99,900
Midland/Eglinton
Sale Of Business Location!Location!Location! This Is An Investment Property Allowing Mulpiple Uses Currently Used AsMedical Walk-In Clinic
$599,900
Morningside/Lawrence
3 Bedrooms, 1 Washroom Wow! Don't Miss This Upgraded Unit! Close To Schools, Park, Shops, Dr Offices, Community Centre And Highway 401
$174,900
Morningside/Finch
4 Bedrooms, 3 Washrooms Approximately 2000 Sq Ft. Practical Layout And Well Maintained. Direct Access To Garage, Steps To Ttc, Schools
$1,500 For Lease
Bathurst/Centre
1+1 Bedrooms, 1 Washroom Promenade Park, Prestigious Area, Luxurious New Building, Grand Lobby &Modern Facilities 2 Guest Suites, Indoor Pool
$239,900
Markham/Major Mac
Location!Location! South Of MajorMac On Markham,Sought Aftr Locatn In High Visibility Shop Plaza & Many Suitable Uses
$567,900
Yonge/Clark
Sale Of Business Total Area: 992 Sq Ft Prime Location At The Busy Part Of Yonge In Thornhill. Luxury Spa. Can Be Changed
$39,900 For Sale
Bellamy/Ellesmere
4+1 Bedrooms, 2 Washrooms Great Location, Close To Ttc. Roof 06, New Entry Doors Front & Back,3 Mths Old Paint, Hardwood Floor
$359,900
Markham/Eglinton
2 Bedrooms, 2 Washrooms Spacious Unit W/Ensuite 2Pc In Master Bedroom. Large Balcony W/Eastern Exposure.
$110,000
Markham/Sheppard
2+1 Bedrooms, 1 Washroom Ensuite Laundry &Rare Find With 2 Parking Spots. Close To Ttc, Shops, School, Basil Food Sasque & 401
$169,000
Kennedy/Ellesmere
4+1 Bedrooms, 3 Washrooms Four Bedroom Townhome In A Very Good Location, Close To Highland Farms, Medical Doctors, Shops, School
$249,800
Kennedy/Ellesmere
2 Bedrooms, 2 Washrooms Luxurious Tridel Mondeo Spring Close To Schools And Ttc. Buyers To Verify Tax, Maint.And Dimensions.
$229,000
Victoriapk/Ellesmere
Restaurant Excellent Street Exposure. Few Blocks South Of Hwy 401. SpecializingIn Pakistani/Indian/ Canadian Cuisine.
$120,000 Plus Stock
Victoria Pk/O'connor
3 Bedrooms, 2 Washrooms Excellent 3 Bedroom Unit With Unobstructed View! Walk To Ttc Call for more info!
$1,300 For Lease
Ananthi Selvasivam*
Neelan Thambiah*
Austin Flavius*
Ken Seyon*
Sunil Guneratne*
Kumar Varatharajah*
Raj Ariyam*
Ganesh Thangarajah*
Meera Ram*
Ramanan Ramachandran*
Vithi Thillainayaham*
Ragu Paramsothy*
Roger Kuhan Thambiah*
Saba Ganeash*
Kannan Kankesu*
Siva Ratheesan*
Murali Kanagasbai*
Sajanthan Shan*
ROYAL LEPAGE
Connect Realty, Brokerage
INDEPENDENTLY OWNED AND OPERATED
Dir: 416-284-5555
Bus: 416-284-4751(24 Hrs)
Toll Free: 1-888-766-4456
E-Mail: karusroyalteam@yahoo.ca
Visit: www.royalteamonline.com
880 Ellesmere Rd, Suite 203, Toronto

# உதடுகளில் புன்னகையை வைத்திருங்கள் வெற்றி உங்கள் கூடவே இருக்கும்

**எனக்குத் திடீரென்று வேலை இட மாற்றம் தந்துவிட்டார்கள். எனது வீட்டை உடனடியாக விற்கவேண்டிய சூழ்நிலை. இது கடுங் குளிர் காலம் என்பதால் வீட்டை விற்பதில் சிரமம் இருக்குமா?**

கடும் குளிர்காலத்தில் வீடுகள் விற்கப் போடுவதில் சில சிரமங்கள் இருந்தாலும் சில நன்மைகளும் இருக்கத் தான் செய்கின்றன. ஒரு வீடு விரைவில் விற்பனையாவது 2 முக்கியமான காரணிகளில் தங்கியுள்ளது. ஒன்று விலை. இரண்டாவது வீட்டின் வெளி, உள் அழகு. எப்படிப்பட்ட நிலையில் இருக்கும் வீடும் அந்த விடயத்தைக் கருத்தில் கொண்டு சரியான விலை குறிக்கப்பட்டால் விற்பனை துரிதமாக நடக்கும். இதை ஒரு அனுபவமுள்ள வீடு விற்பனைமுகவர் மூலமாகச் சரிவரச் செய்துகொள்ள முடியும்.

வீட்டின் உள்ளேயும் வெளியேயும் அழகாய் வைத்திருப்பதென்பது முழுக்க முழுக்க உங்களில்தான் தங்கியுள்ளது. சிரமங்கள் சிலவற்றைக் குறிப்பிட்டால்...!

- பனி விழுந்திருக்கும் நாட்களில் வீட்டைப் பார்வையிட உள்ளே வருபவர்களின் பாத அணி நிறைய ஈரத்தை வீட்டினுள்ளே கொண்டுவரச் சந்தர்ப்பமிருக்கிறது.
- குளிர்காலத்தில் சூரிய வெளிச்சம் குறைவானநாட்களில் வீட்டின் வெளிப்புறஅழகை சரிவரப் பார்க்க முடியாது. உதாரணமாக நீச்சல் தடாகம், அல்லது பூங்கா இருந்தால் சரிவரப் பார்க்க முடியாது.
- கூரையையும் நன்கு பார்க்க முடியாதிருக்கலாம்.
- பனி விழுந்தால் உடனடியாக அகற்றப்பட வேண்டும்.
- வீட்டின் ஒடுபாதையும், வாசலும் துப்பரவாக்கப்பட்டு வழுக்கல் நிலையைத் தவிர்க்க வேண்டும்.

**நன்மைகள் சில...!**



- கடும் குளிர்காலத்தில் நிறைய வீடுகள் விற்பனைக்கு இருப்பதில்லை. ஆதலால் உங்கள் வீட்டுக்குப் போட்டியாக வேறு வீடுகள் இல்லாதபட்சத்தில் உங்கள வீடு விரைவாக விற்கப்பட வாய்ப்புண்டு.
- கட்டாயம் வீடு வாங்க வேண்டியவர்கள் (Serious Buyers) மாத்திரமே இந்நாட்களில் வீடு பார்க்க வருவார்கள். ஆகவே, குறைவானவர்கள் பார்த்தாலும் விரைவாக விற்பனையாகும் சந்தர்ப்பம் அதிகம்.

### செய்ய வேண்டியவை

- வீட்டை விற்பனைக்குப் போடமுன்னர் ஒரு வீடு விற்பனை முகவரைத் தொடர்பு கொண்டு உங்கள் வீட்டை வந்துபார்த்து, அதில் என்ன திருத்தவேலைகள், அழகுபடுத்தல்கள் செய்ய வேண்டுமென அறிந்து கொள்ளுங்கள். உடனடியாக அந்த வேலையைச் செய்யத் தொடங்குங்கள்.
- வீட்டுப் பரிசோதகர் (Home inspector) ஒருவரை அழைத்து விட்டைப் பரிசோதனை செய்து, அவரின் அறிக்கையைப் பெற்று வைத்தல் நல்லது. அந்த அறிக்கையில் ஏதும் பிழை திருத்தங்கள் குறிப்பிடப்பட்டிருந்தால் அந்தத் திருத்தங்களையும் செய்து முடித்தல் நல்லது.
- பனி விழுந்ததும் அகற்ற ஏற்பாடுகளைச் செய்துவைத்திருத்தல் நல்லது.
- வீட்டின் உள்ளே வெளியே எடுத்த புகைப்படங்கள் இருந்தால் தேடி எடுத்து ஒரு அல்பம் ஒன்றை ஆயத்தப்படுத்தி வைத்திருந்தால் பனி இல்லாத நாட்களில் எப்படி இருக்குமென்பதை மற்றவர்கள் பார்வையிட உதவியாக இருக்கும்.



### வெற்றிக்கு வழிகள்

Attitude வேண்டும். ஒருவன் வெற்றியடைய முக்கியமாகத் தேவையானது அவன் வெல்லும் மனப்பான் மையுடன் (Attitude) தொழிற்படுவதுதான். Attitude is everything. A=1 B=2 C=3...... Z=26 என்று ஒவ்வொரு ஆங்கில எழுத்துக்கும் மதிப்புக் கொடுத்து Attitude என்பதன் கூட்டுத்தொகை என்ன என்று பார்த்தால் (1+20+20+9+20+21+4+5 =100) திடமான மனதுடன் செய்யும் எதுவும் 100 சதவீதம் வெற்றியைத் தரும் என்பதற்கு வேறென்ன விளக்கம் தேவை?

தோமஸ் அல்வா எடிசன் மின் குமிழைக் கண்டுபிடிக்க ஆயிரத்துக்கு மேற்பட்ட பரிசோதனைகளைச் செய்தும் வெற்றி காணாத நிலையில் அவருடன் உடன் இருந்தவர்கள் "உங்கள் உழைப்பு வீணாகிவிட்டதே" என்று கூறினார்களாம். யார் சொன்னது அப்படி, அந்த ஆயிரம் முறைகளும் பிழையான முறைகள் எனக் கண்டுபிடித்திருக்கிறேனே" என்றாராம் உலகையே மின்மூலம் ஒளிரவைத்த பெருமைக்குரிய அந்த




விஞ்ஞானி. That is winning attitude.

### Ego வேண்டாம்.

- உதடுகளில் எப்போதும் புன்னகையை வைத்திருப்பவர்கள் வெற்றியையும் கூடவே வைத்திருப்பார்கள்.
- ஈகோ வேண்டாம். புன்னகையுங்கள். ஈகோ இருக்கும்வரை உங்களால் அடுத்தவர்களிடம் நல்லவிதத்தில் பழகமுடியாது. அடுத்தவர்களிடம் இருந்து மாத்திரமல்ல, அது உங்களை உங்களிடமிருந்தே தனிமைப்படுத்திவிடும்.
- நீங்கள் எவ்வளவு திறமைசாலியாக, நேர்மையானவராக, பெரிய பதவி வகிப்பவராக இருந்தாலும் உங்களிடம் இனிமையாகப் பழகும் தன்மை இல்லையெனில் அத்தனை தகுதிகளும் வீண். மற்றவர்களைக் காணும்போது புன்னகையுங்கள். அது புதியவர்களாக இருந்தாலும் சரி, அதற்கான பலனை நீங்கள் காணும் போதுதான் புன்னகையின் மகத்துவமே உங்களுக்குப் புரியும்!

### சோம்பேறி சாமியும் சீடனும்

குருவும் சீடனும் விடிகாலையில் தரையில் அமர்ந்திருந்தனர். குரு சொன்னார் - "யன்னலைத் திறந்துவிடேன். காற்று வரட்டும்" என்று. அதற்கு சீடன், "திறந்து விடத்தான் விருப்பம். நுளம்பு, ஈ வந்து விடும். வேண்டாம்" என்றான்.

குரு: அறைக்குள் விளக்கை ஏற்றினால் நல்லதல்லவா?

சீடன்: விரைவில் சூரியனின் வெளிச்சம் வந்துவிடும்தானே. ஏன் எண்ணைக்குச் செலவழிப்பான்?

குரு: சரி, அந்தக் கதிரையை எனக்கருகில் கொண்டு வாவேன், உட்கார.

சீடன்: நீங்கள் முதல் சொன்ன இரண்டு வேலைகளையும் நான்தானே கவனிச்சேன், இதை நீங்கள் செய்யலாம்தானே!

### விவகரத்து

நண்பி: உனக்கு விவகரத்து பெற்றுத்தர உன்ர லோயர் எவ்வளவு fees வாங்கினார்?

மற்றவள்: லோயர் என்ர கணவனுடைய பழைய நண்பனாம். தன்ர நண்பனுக்கு உதவிசெய்யிறதுக்காக free ஆகச் செய்து தாறாராம்!

### செய்யும் தொழில் தெய்வம்

ஒவ்வொருவரும் தான் செய்யும் தொழிலை மதித்து ஈடுபாட்டுடன் செய்தால் அதில் கிடைக்கும் சந்தோஷமும் திருப்தியுமே தனி!. கோவில் ஒன்றில் கட்டிடப் பணி நடந்துகொண்டிருந்தது. அங்கே வேலையாட்கள் கற்களைச் சுமந்துசென்று ஓரிடத்தில் கொட்டிக்கொண்டிருந்தார்கள். அவர்களில் ஒருவனை ஒரு பெரியவர் இடைநிறுத்தி, என்ன செய்துகொண்டிருக்கிறாய் என்று கேட்டார். 'பார்த்தால் தெரியவில்லையா? கல் சுமந்துகொண்டிருக்கிறேன்' எனப் பதில் வந்தது. சிறிது நேரத்தின்பின்

25ம் பக்கம் பார்க்க...

# உதடுகளில் புன்னகையை...

25ம் பக்கத் தொடர்ச்சி...

இன்னொருவனிடமும் இதே கேள்வியைக் கேட்டார். 'என் குடும்பத்துக்குச் சாப்பாட்டுக்காக உழைத்துக் கொண்டிருக்கிறேன்' எனப் பதில் வந்தது. மூன்றாவதாக ஒருவனிடமும் இதே கேள்வியைக் கேட்டார். 'நான் தெய்வத்துக்குக் கோயில் கட்டும் பணியில் பங்கெடுத்துக்கொண்டிருக்கிறேன் என்றானாம். ஆக இந்த மூன்று பேரும் செய்யும் வேலை ஒன்றென்றாலும், மூன்றாமவன் ஈடுபாட்டுடன் அந்த வேலையைச் செய்கின்றான். நீங்களும் உங்களுக்குச் சோறுபோடும் வேலையை நேசித்துச் செய்ய ஆரம்பியுங்கள்.

## மரண பயம்

மரண பயம்பற்றி தாகூர் கூறியது.
"நீ இந்தப் பூமியில் வந்து பிறப்பதற்கு முன்னரே உனக்காக உனது தாயின் இரு முலைகளிலும் பாலைச் சுரக்கவைத்த இறைவன், நீ இறந்த பின்னும் உனக்காக இன்னொரு உலகத்தையேகூட அவன் படைத்து வைத்திருக்கக்கூடும். அதனால் நம்பிக்கையோடு இரு" என்றார்.

## தவறு

அரிது அரிது மானிடராய்ப் பிறத்தல் அரிது என்பார்களே. இது தவறு
எளிது எளிது மானிடராய்ப் பிறத்தல் எளிது
அரிது அரிது மானிடராய் வாழ்தல் அரிது.

## நீங்களே எடுத்துச்செல்லுங்கள்.

புத்தர் ஊர் ஊராக சென்று கொண்டிருந்த வேளை. ஒரு ஊரில் புத்தரை மக்கள் தாறுமாறாகத் திட்டினார்கள். அவர் சிரித்தபடியே இருந்தார். இவ்வளவு திட்டுகிறார்களே உங்களுக்கு அவமானமாயில்லையா என்று திட்டியவர்கள் கேட்டார்களாம். அதற்குப் புத்தர்; இதற்கு முன்னர் சென்ற ஊரில் என்னை வெகுவாகப் புகழ்ந்தார்கள். பழங்கள் இனிப்பு வகைகள் தந்து உபசரித்தார்கள். எதையுமே நான் ஏற்றுக் கொள்ளவில்லை. இங்கு எடுத்துவரவுமில்லை. அவர்களே அவற்றை திருப்பி எடுத்துக் கொண்டு சென்றார்கள். அதேபோலத்தான் இங்கும் உங்கள் திட்டுக்கள் எதையும் நான் ஏற்றுக் கொள்ளவில்லை. நீங்களே தான் எடுத்துச்செல்லவேண்டும் என்றாராம் அமைதியாக.

## அபிப்பிராயங்கள் மாறுபடும்



பூனையின் பல்லைப்பற்றி கேட்டுப்பாருங்கள். அதன் குட்டி ஒன்று சொல்லும். எலி ஒன்று சொல்லும்

## நரைமுடியும் பொய்யும்

அப்பாவின் தலையில் சில நரைமுடி இருந்ததைக்கண்ட சிறுவன் அது ஏன் என்று அப்பாவைக் கேட்டானாம். நீ சொல்லும் ஒவ்வொரு பொய்க்கும் அப்பாவுக்கு ஒரு தலைமுடி நரைக்கும் என்று புத்திசாலித்தனமாகப் பதில் சொன்னாராம் அப்பா.

அடுத்தகணம் அச்சிறுவன் சொன்னது, அதுதானே பார்த்தன் உங்கட அப்பாவுக்கு அதாவது என்ர தாத்தாவுக்கு ஏன் முழுத் தலையும் நரைமுடி எண்டு.

## முதுமையில் விவாகம்

ஒருவன் இளமைப்பருவம் பாதிகடந்த நிலையில் விவாகஞ் செய்ய முனைந்தான். நண்பன் அது ஏன் என்று கேட்க, "நல்ல மனைவி என்றால் காத்திருந்ததுக்கு நல்ல பலன் எனலாம். மோசமான மனைவியென்றால் இன்னும் கொஞ்சக் காலம் தானே என ஆறுதல் பட்டுக்கொள்ளலாம் என்றானாம். இது எப்படி இருக்கு

## கலிகாலம்

கலிகாலம் என்றால் என்ன என்று ஒருவன் கேட்டானாம்.
வீரப்பனைப் பிடிக்கச் சென்ற பொலிஸார், அப்பகுதியில் சில பெண்களைக் கற்பழித்தார்களாம். அதையறிந்த வீரப்பன் மற்றவன் மனைவியில் ஆசைப்பட்ட ராவணன் மாதிரி அழிஞ்சு போயிருவீங்க என்று அவர்களைத் திட்டினானாம். இங்கே சிறையில் இருக்க வேண்டியவன் ராமாயணம் பேசுறான். ஆனால் ராமாயணம் சொல்ல வேண்டிய பிரேமானந்த சாமி சிறையில் இருக்கிறார். இது தான் கலிகாலம்.

## யார் மடையன்

ஆசிரியர் பரீட்சைத்தாள் திருத்திக் கொண்டிருந்தார். சிறிது தூரத்தில் மாணவர்கள் இருவரிடையே சண்டை. நீ தான் மடையன் என்றான் ஒருவன். இல்லை நீ தான் மடையன் என்றான் மற்றவன். தூரத்தில் இவர்கள் சண்டையை திடீரெனக் கண்ட ஆசிரியர் டேய். இங்க நான் ஒருத்தன் இருக்கிறன் எண்டு தெரியேல்லையாக்கும் என்றார்...???

## வீட்டு ஞாபகம்

மனைவியிடம் சண்டை போட்டுவிட்டு 3நாள் வீடு செல்லாதவர் ஓட்டலுக்கு வந்தாராம் ஆறின தேநீர் ருசியில்லாத கறியும் பழைய இடியப்பமும் கொண்டுவரச் சொல்லி ஓட்டல் ஊழியர் இடம் சொன்னாராம்.
சர்வர் ஏன் என்று கேட்க "வீட்டு ஞாபகம் வந்துவிட்டது" என்டாராம்.

தொகுப்பு : கரு கந்தையா

# காசுமேலே காசுவரும் நேரமிது.



பெரி முத்துராமன்
- நிதித்துறை ஆலோசகர் -

கனடிய நிதிமந்திரி ஜிம் பிளாகர்டி (Jim Flaherty) 2007ஆம் ஆண்டு முடியும் தறுவாயில், செய்த – செய்யவிருக்கும் பணிகளைப்பற்றிய கருத்துக்களைப் பகிர்ந்து கொண்டிருக்கிறார். அவர், தம்முடைய பணியைத் திறம்படச் செய்கிறார். தனிநபர் வருமான வரிகள் குறையும் என்ற நினைப்பை மறந்துவிடுங்கள் என்று கூறியிருக்கிறார். இவர் இதற்கு முன்னால் ஜனவரி 1, 2007 இலிருந்து கணக்கிடப்படும் தனிநபர் வருமானவரி ஆரம்ப விகிதத்தை 15.5 சதவீதத்திலிருந்து 15 சதவீதமாகக் குறைத்தவர் என்பது குறிப்பிடத்தக்கது. மேலும், அடிப்படை வருமானவரி விதிவிலக்குத் தொகையையும் 8929 டாலர்களிலிருந்து 9600 டாலர்களாக உயர்த்தியிருந்தார். இப்படி மக்களுக்கு நன்மைகளைச் செய்தவர், திடீரென்று ஏன் இப்படிப் பேசுகிறார்? காரணம் இல்லாமல் இல்லை. பலவீனம் அடையும் அமெரிக்கப் பொருளாதாரம் கனடாவைப் பாதிக்கும் என்று அவர் உறுதியாக நம்புவதுதான் காரணம்.

நாட்டின் நிதிமந்திரி, நாட்டினுடைய எதிர்கால நிதிநிலைமையை ஆண்டு இறுதியில் ஆராயும்போது நாம் நம்முடைய வீட்டின் நிதி நிலைமையையும் புத்தாண்டில் (2008) திட்டமிட வேண்டாமா?

ஒன்ராறியோ மாநிலத்தில் 2003இலிருந்து தொழில் உற்பத்தித் துறையில் 150000வேலை இழப்புக்கள் ஏற்பட்டிருப்பதாகப் புள்ளி விவரங்கள் தெரிவிக்கின்றன. இந்த நிலை 2008இல் தொடர்வதற்கான சாத்தியக் கூறுகள் நிறையவே உள்ளன. ஒவ்வொருவரும் தாம் செய்யும் வேலை கனடாவில் எவ்வளவு நிரந்தரமானது அல்லது நிரந்தரமற்றது என்று சற்றே சிந்தித்து, அதற்கேற்ப வரவு செலவுகளையும், சேமிப்புக்களையும் 2008 இல் திட்டமிடுவது புத்திசாலித்தனமாக இருக்கும்.



பொதுவில், மூன்றிலிருந்து ஆறு மாதங்களுக்கான வீட்டுச் செலவுகளுக்கான பணத்தை எளிதில் எடுக்கக்கூடிய அதே சமயத்தில் கணிசமான வட்டியையும் தரக்கூடிய வங்கி சேமிப்புகளில் வைத்திருப்பது நல்லது. சேமிப்புக் கணக்கிலோ செக்கிங் கணக்கிலோ பணத்தைப் போட்டு வைத்திருந்தால் வட்டி ஒன்றும் வராது. அவசரகால தேவைகளுக்கான பணத்தையும் கால வரையறைக்குட்படுத்தாத, அதே சமயத்தில் கூடுதல் வட்டி தரக்கூடிய ஜிஐசி (GIC) என்று சொல்லப்படும் வங்கி வைப்புக்களில் போட்டு வைத்திருத்தல் வேண்டும்.

மேலும், 2007க்கு ஆர்ஆர்எஸ்பி க்கு என்று இதுவரை நினைத்துப் பார்க்காமல் இருந்தவர்கள் நினைத்துப் பார்க்கவேண்டிய நேரம் வந்துவிட்டது. பிப்பிரவரி மாதம் முடிவதற்குள் ஆர்ஆர்எஸ்பி யில் எவ்வளவு சேமிக்கலாம் என்று திட்டமிடலாம். ஆர்ஆர்எஸ்பி என்பது வயதான காலத்திற்கான சேமிப்பு என்று சொல்லப்பட்டாலும் நடைமுறையில் வரிகளைக் குறைக்கும் ஒரு நல்ல சாதனமாகவே இருந்துவருகிறது. வருவாயில் ஒரு பகுதியை நல்ல வேலையில் இருக்கும் காலத்தில் ஆர்ஆர்எஸ்பியில் சேமித்தால் அந்த ஆண்டிற்கான வரிகள் குறையும். ஏற்கனவே சம்பளத்தில் வரி பிடிக்கப்பட்டிருந்தால் குறையும் வரியின் காரணமாக ஆர்ஆர்எஸ்பியில் பணம் போட்டதினால் அரசாங்கத்திடமிருந்து மீளளிப்பு அல்லது ஏற்கனவே செலுத்திய வரியில் ஒரு பகுதி, காசோலையாகக் கிடைக்கும். பிறகு எப்போதாவது வேலையில்லாமல் போனால், அந்தச் சமயத்தில் இந்த ஆர்ஆர்எஸ்பியிலிருந்து பணத்தை எடுத்தால் அரசாங்கத்திற்குக் கட்டும் வருமான வரி குறைவாகவே இருக்கும். சிந்தித்துச் செயல்படுங்கள்.

எதிர்பாராத காரணங்களினால் வேலையில்லாமல் இருக்கும் சமயங்களில் ஆர்ஆர்எஸ்பியிலிருந்து பணம் எடுப்பது என்பது நடைமுறையில் இலாபகரமாகவும் பயனுள்ளதாகவும் இருக்கும். அதே சமயம் ஓரளவு வேலை நிரந்தரம், வருமானம் தொடர்ந்து வர வழியுள்ளது என்னும்போது, நல்ல மியூச்சுவல் நிதிச் சந்தைகளில் ஆர்ஆர்எஸ்பி பணத்தைப் போடுவது சிறந்தது. மியூச்சுவல் fundஇல் போடப்படும் பணத்துக்கோ அதன் வளர்ச்சிக்கோ உத்தரவாதம் ஒன்றுமில்லை. அப்பணம் பங்குச் சந்தையிலேயே முதலீடு செய்யப்படுகின்றது. பங்குச் சந்தையோ சறுக்குமரம் போல ஏறுவதும் இறங்குவதுமாக உள்ளது. ஆனால், ஐந்து முதல் பத்து வருடங்களுக்குக் குறையாமல் மியூச்சுவல் பண்டுகளில் போட்டு வைத்திருக்கும்போது சரித்திர ரீதியாக வங்கி வைப்புக்களை விட கூடுதல் இலாபம் இருந்தேவந்துள்ளதைச் சரித்திரம் தெரிவிக்கின்றது.

27ம் பக்கம் பார்க்க...

மியூச்சுவல் பண்டுகளிலும் எத்தனையோ வகைகள் உள்ளன. ஆனால் எல்லாக் காலங்களிலும் பெரும்பாலும் பலனைத் தரக்கூடியன டிவிடென்ட் பண்டுகள். இத்தகைய பண்டுகளில் முதலீடுசெய்யும்போது, அந்த பண்டுகள் தரம் வாய்ந்த கம்பனிகளில் முதலீடு செய்திருக்கின்றனவா, கடந்த காலங்களில் இத்தகைய பண்டின் வளர்ச்சி எத்தகையதாக இருந்தது என்று ஆராய்ந்து ஆர்ஆர்எஸ்பி பணத்தை முதலீடு செய்யலாம். இத்தகைய பண்டுகளில் ஆதாயம் டிவிடென்ட்டிலிருந்து மட்டுமன்றி நாளடைவில் ஏறும் பங்குச் சந்தை விலையின் காரணமாக பொருள் ஆதாயத்திலும் (Capital appreciation) இருக்கின்றது. பொதுவில் உலகம் முழுவதுமே நல்ல டிவிடென்ட் பண்டுகளில் செய்யப்பட்ட முதலீடுகள் எல்லாவிதமான சந்தை நிலவரங்களிலும் ஆண்டுக்கு ஆண்டு பெரும்பாலும் வளர்ந்தே வந்திருக்கின்றன. விதிவிலக்குகள் நிர்வாகத் திறமையின்மையைக் காட்டுவதாகக் கருதுகிறேன்.

சிலருக்கு அமெரிக்க டாலர்களில் முதலீடு செய்ய ஆர்வம் இருப்பதைக் காண்கிறோம். இவ்வாறு பிற நாட்டு நாணயங்களில் முதலீடு செய்யும்போது உள்ள அபாயங்களைத் தெரிந்துகொள்ள வேண்டும். தெரிந்து கொண்டு முதலீடு செய்தால் பின்னர் அதனால் நட்டம் வந்தாலும், தெரிந்து தானே செய்தோம் என்று மனத்தைத் தேற்றிக்கொள்ளலாம். சிறிய அளவில் பிறநாட்டு நாணயங்களில் முதலீடு செய்யும் போது பெரிய நட்டமோ, இலாபமோ வந்து விடாது. ஆனால், அளவு மாறும்போது எதிர் பாராத விளைவுகளுக்குத் தயாராகவே இருக்கவேண்டும். விளைவு மகிழ்ச்சியையும் தரலாம்; துக்கத்தையும் தரலாம். கனடிய டாலர் கடந்த பல வருடங்களாக அமெரிக்க டாலருக்கு எதிராக மதிப்பில் உயர்ந்தே வருகின்றது. அத்தகைய சூழ்நிலையில் றோயல் பாங்கின் புள்ளிவிவரப்படி 2003-2006 இல் ஒருவருக்கு அமெரிக்க டாலர்களில் கிடைத்த லாபம் 12.9சதவீதம் எனக் கொண்டால் அதையே கனடிய டாலருக்கு மாற்றும்போது, நாணய மாற்று விகிதத்தின் காரணமாகக் கிடைக்கும் இலாபம் கனடிய டாலர்களில் 4.1 சதவீதம் மட்டுமே.

உங்கள் சூழ்நிலைக்கேற்ற நிதி ஆலோசனைகளை ஒரு நல்ல நிதி ஆலோசகரைச் சந்தித்துப் பெறுங்கள். பிறகு எத்தகைய முதலீடுகளில் முதலீடு செய்ய வேண்டும் என்று முடிவு செய்யுங்கள். திட்டமிட்டுச் செயல்பட்டால் ஏமாற்றங்களைக் குறைத்துக் கொள்ளலாம்.

■ ■ ■

# கத்தி இன்றி இரத்தம் இன்றி...

ஜிப்ரி
உதுமாலெப்பை
- கணினி வல்லுனர் -



1ம் பக்கத் தொடர்ச்சி...

1. முதற் பெயர், கடைசிப் பெயர்
2. பிறந்த திகதி
3. வதிவிட விலாசம்/ வதிவிட தொலைபேசி எண், விலாசம்
4. சாரதி அனுமதிப் பத்திரம்.
5. வேலைபற்றிய தகவல்
6. Sin இலக்கம்
7. உங்களை அடையாளப்படுத்திக்கொள்ள ரகசிய password (பொதுவாக தாயின் பெயர்).

குறிப்பிட்ட பல வருடங்களுக்கு முன்னர் எந்த விடயமும் கையெழுத்திடப்படுவது வழக்கம். அன்று ஒரு சாட்சியை வைத்துக் கொண்டே ஒப்பந்தத்தில் கையெழுத்திடப் படும். கணனி மயப்படுத்தப்பட்ட இந்தக் காலத்தில் மேற்கூறிய உங்களை பற்றிய தகவல்களைப் பெற்றுக்கொண்டு, உங்கள் பெயரிலேயே ஒரு பதிவுசெய்யப்பட்ட சாரதி அனுமதிப் பத்திரம் (அதில் உங்கள் படம் இருக்காது அதற்குப்பதிலாக உங்கள் தகவலை களவாடிய நபரினுடைய சிரித்த முகம் இருக்கும்.) சின் (SIN) கார்ட், ஹெல்த் கார்ட், கிறெடிற் கார்ட் என பலவற்றை உருவாக்கிவிடுவார்கள். இவற்றை வைத்துக் கொண்டே அவர்களுடைய பெயரில் சொத்து உடைமைகளையும் சிலவேளைகளில் முகமே தெரியாதவர்களால் தொலைபேசி, தொலைநகல் முறைமூலம் நடைபெறும் வர்த்தக வியாபார பரிமாற்றம் மூலமாக, உங்களுக்கு உரித்தான சொத்துக்களையும் வங்கி முதலீடுகளையும் பிறருக்கு விற்றுவிட்டும் போய்விடுகிறார்கள். Collection Agencyயும் வழக்கறிஞர்களும் உங்கள் வீட்டுக் கதவைத் தட்டும்வரை என்ன நடந்தது ஏது நடந்தது என்பதே தெரியாது. Face book, My Spce என்ற இணையத் தளங்களின் வளர்ச்சியில் இந்த Identity theft மிகவும் ஓங்கிவிட்டது.



அண்மையில் இரண்டு வாலிபர்கள் கனடா நாட்டு எல்லையைத் தாண்டி அமெரிக்காவிற்குச் செல்லும்போது 144 வங்கி அட்டைகளுடன் கைது செய்யப்பட்டுள்ளனர். இந்த 144 வங்கி அட்டைகளின் மேலும் அந்த வங்கி அட்டைகளுக்குரிய பாஸ்வேட் பெரிய எழுத்துக்களில் எழுதியிருந்தது சுவாரசியமான விடயமாக இருந்ததாக அவர்களைக் கைதுசெய்த அதிகாரி கூறியிருந்தார்.

### எவ்வாறு உங்களைப் பற்றிய தகவல்களை மற்றவர்கள் பெறுகிறார்கள் என இப்போது பார்ப்போம்.

- உங்களது wallet அல்லது purse தொலைந்து போதல்
- உங்கள் வீடு அல்லது அலுவலகம் உடைக்கப்படும்போது பாதுகாப்பாக வைக்கப்படாத பல தஸ்தாவேஜுகள் மூலமாக உங்களைப் பற்றிய முக்கிய தகவல்கள் பலரிடம் கைமாறலாம். (குடும்ப அங்கத்தவர், அலுவலக ஊளியர்களின் தகவல்களும் கூட.)
- உங்களுக்குச் சேரவேண்டிய தபால்கள் களவாடப்படுவதல், (Credit cards Statements, கடவுச்சீட்டு approved credit cards, நிலவரித் தகவல்கள் கொண்ட தபால்கள், வருமானவரித் திணைக்களத்தில் இருந்து வரும் தபால்கள்) இந்தக் களவாடல் உங்கள் மெயில் பொக்சிலிருந்து அல்லது விலாச மாற்றம் மூலம் அல்லது உங்கள் தபால்காரரினால் உங்கள் வீட்டின் முன் கதவில் அனாதரவாக விட்டுச்செல்லப்பட்ட தபாற் பொதிகள் மூலமாகக் கூட நடைபெறும்.
- நீங்கள் தேவையில்லை எனக்கருதி வெளியில் வீசும் காகிதங்களில் சிலவேளைகளில் உங்களைப்பற்றிய முக்கியமான தகவல்கள் அடங்கியிருக்கலாம்.
- தொலைபேசி உரையாடல், ஈமெயில்கள், இணையத்தளங்களில் உங்களைப் பற்றிய தகவல்களைப் பரிமாறுகையில் அவை கெட்டவர்களின் கைகளுக்கூடாகப் பரிமாறப்படலாம்.
- தபால்மூலமாக உங்களுக்கு வரும் "You won" என்று சந்தோஷமான செய்திகளுடன் வரும் தபால் பொதிகளுக்குத் தாங்கள் மறுமொழி கூறும்போது எங்களை அறியாமலேயே எங்களைப்பற்றிய பல தகவல்களை முகமே தெரியாத நபர்களுடன் பரிமாறிக்கொள்கிறோம்.
- உங்கள் தனிப்பட்ட Laptops, Pcs இல் Signature attach பண்ணுவதால் உங்களைப் பற்றியது மட்டுமல்லாமல் உங்களைச் சார்ந்த பலருடைய தகவல்களும் களவு போகின்றது. (உதாரணமாக கணக்காளர். வீட்டுக் கடன் பெறுபவர்களின் கணனி, கிடைக்கக் கூடாதவர்களின் கைக்குக் கிடைத்தால் என்னவாகும்?)
- ATM மெஷினில் இருந்து பணம் பெறும்போது மிகக் கவனமாக இருக்கவேண்டும். உங்கள் வங்கிக்குரிய ATM மெஷின் தவிர மற்றைய ATM மெஷின்களில் பாவிப்பதைத் தவிர்ப்பது நல்லது.

### களவாடப்பட்ட சில தகவல்கள்:

Sick Children Hospital Doctor ஒருவரின் வாகனத்தை உடைத்து, அவருடைய Laptopஐ மட்டும் களவாடியிருக்கிறார்கள். அதில் 10,000 நோயாளிகளைப் பற்றிய தனிப்பட்ட தகவல்களும் தொலைந்ததாகக் கூறப்படுகிறது.

GAP நிறுவனத்தில் வேலைபுரியும், வேலைக்கு விண்ணப்பித்த 40,000 தனிப்பட்டவர்களின் தகவல்களுடன் அலுவலக Laptop ஒன்று காணாமல் போய்விட்டது.

### இப்படிப்பட்ட தகவல்களை மற்றவர்கள் எப்படிப் பணமாக மாற்றுகிறார்கள்

- உங்களைப் பற்றிய அல்லது உங்கள் வர்த்தக நிறுவனங்கள் பற்றிய தகவல்களைச் சேகரித்துக்கொள்வார்கள்.
- அந்தத் தகவல்களை வைத்துக்கொண்டு, 500முதல் 1000டொலர்கள் வரை முலதனமிட்டு உங்கள் பெயரிலேயே ஒரு கடனட்டையை வாங்கிக்கொள்வார்கள்.
- உங்கள் தகவல்களை வைத்துக்கொண்டு, அவர்களுடைய படத்துடன் கூடிய சாரதி அனுமதிப் பத்திரம், மருத்துவ அட்டை அத்துடன் உங்களுக்கான சின் அட்டையையும் தயாராக்கி விடுவார்கள். இந் நாட்களில் இவற்றைஉருவாக்குவது கஷ்டமான காரியமே இல்லை. கணினியும், கலர் பிரின்ரரும், மலிவான பிளாஸ்ரர் அட்டையும் எளிதாகக் கிடைக்கும்.
- 25டொலர் செலவில் உங்கள் அனுமதியில்லாமலேயே உங்கள் கடன் சரித்திரத்தை எடுத்துக்கொள்வார்கள். (Equ Fax, Trans Union Company ஆகிய இரண்டு நிறுவனங்களுமே உங்கள் கடன் சரித்திரத்தை வைத்திருப்பார்கள். இவர்களுடைய இணையத் தளங்களுக்குச் செல்வதன்மூலம் மிக எளிதாக கடன் சரித்திரத்தை எடுத்துக்கொள்ளலாம்.
- உங்கள் பெயரில் அவர்கள் எடுத்துள்ள கடனட்டையினை நன்றாகப் பாவித்து, குறிப்பிட்ட காலம் வரையில் உங்கள் கிறெடிற் ஸ்கோரையும் வளர்த்துவிடுவார்கள். (இது ஏறத்தாழ அறுக்கப்போகும் ஆட்டை இலை, குழை போட்டு வளர்ப்பது போன்றதுதான்!)
- உங்கள் கிறெடிற் ஸ்கோர் நன்றாக இருந்தால் வேறு ஒரு நிறுவனத்தில் வேலை செய்வதாகக் கூறும் தகவல்களை எடுத்துக்கொண்டு உங்கள் பெயரிலேயே ஒரு வாகனம், வங்கிக் கடன் என தனது சௌகரியமான வாழ்வுக்குத் தேவையான பண வசதிகளை வங்கியில் இருந்து உங்கள் பெயரில் எடுத்துக்கொண்டு தம் வாழ்வை அபிவிருத்திசெய்து கொள்வார்கள். பின் தலைமறைவாகி விடுவார்கள்.

### உங்களைப்பற்றிய தகவல்களை வேறு எங்கெல்லாம் பெற்றுக்கொள்ளலாம்

- உங்கள் வருமான வரி ஆலோசகர், அத்துறைசார் ஊழியர்கள்.
- அரச திணைக்களங்கள் (உதாரணமாக Health department, Social Welfare, Revenue Canada, Immigration ஆகியன மட்டுமல்லாமல் அங்கு வேலைசெய்யும் குறிப்பிட்ட சில ஊழியர்களாலும் தகவல்களை எடுக்கக்கூடிய வசதியும் இருக்கிறது.
- Mortgage Lenders, Trust Companies, Bank, Brokers.
- Insurense நிறுவனங்கள், (Auto, Life, அடமானக்கடன்) உங்களுடன் தொடர்பு கொள்ளும் Bookersக்கும் இந்த நிறுவனத்தில் வேலைசெய்யும் ஒரு குறிப்பிட்ட ஊழியர்களுக்கும் உங்கள் தகவல்களை எளிதாக எடுக்க முடியும்.

### இவற்றிலிருந்து உங்களைப் பாதுகாப்பது எப்படி?

35ம் பக்கம் பார்க்க...

# சக்தி பெற சக்தி கொடு


சிவவதனி
பிரபாகரன்
- காப்புறுதிப் பிரதிநிதி -

மீண்டும் பனிபெய்யும் குளிர்காலத்தில் கால்பதித்துள்ளோம். இக்காலத்தில் சக்தி விரயம் என்பது தவிர்க்க முடியாத ஒன்று. ஆனாலும் வீடுகளில் வசிப்பவர்கள் இந்த சக்தி சேமிப்பு நடவடிக்கைகளில் முனைப்புடன் ஈடுபட வேண்டிய அவசியம் உண்டு. இதனால் சக்திக்கான விரயமாகும் பணத்தைச் சேமிப்பதோடு எம் மாகாணத்தில் வழங்கல் சக்தியையும் சேமித்து மீண்டும் ஒரு மின்துண்டிப்பினனான இருள் காலத்தை இக்குளிர் காலத்தில் வராமல் தவிர்க்கலாம்.

உங்கள் வீட்டில் நீங்கள் வாழும் வாழ்க்கை சிக்கனமாக சிக்கலின்றியும்வாழ சக்தி சேமிப்பு நடவடிக்கைகள் உதவுகின்றன. சக்தி சேமிப்புக்கான சில வழிமுறைகளை பார்ப்போம்.

- உங்கள் வீட்டில் வெப்ப இழப்பு பாதுகாப்புக்கு அணையிடப்பட்டுள்ளதா என்பதை உறுதி செய்யுங்கள். (Properly insulated) அதாவது சரியான வெப்ப பாதுகாப்பானால் குறைந்த பட்சம் 10 - 12 தடிப்பில் சீராக பரவப்பட்ட வெப்ப அரிதிற் கடத்தியால் பாதுகாக்கப்பட்டிருப்பது அவசியம். வீட்டைச் சுற்றி ஆராய்ந்து சிறு சிறு துவாரங்கள் இருப்பினும் அவை அடைக்கப்பட வேண்டும். குறிப்பாக Baseboards, Sink, Electrical Sockets க்குப் பின்னால் Cable wire வரும் இடங்கள் போன்ற துவாரங்களை பார்த்து வளி ஊடுபுகவிடா வகையில் அடைக்க வேண்டும்.
- கோடைகாலத்தில் பாவிக்கின்ற கதவு யன்னல் Blinds curtains பனிக்காலத்தில் பாவிக்காமல் தடித்த துணிகளை பாவிப்பது நன்று. அதேபோன்று வெயில் வருகின்ற வேளைகளில் இவ் Blinds Curtain களை திறந்துவிட்டு போதிய சூரிய ஒளியை வீட்டிற்குள் அனுமதிப்பதன் மூலம் சூரிய வெப்பத்தை பயன்படுத்தி Furnace க்கு சற்று நேரம் ஓய்வு வழங்கலாம். இரவு வேகைளில் திரைகளை மூடிவைத்து உள்ளிருக்கும் வெப்பம் வெளியேறாகாவகையில் பாது காத்துப் பேணலாம்.
- Thermastatஐ இரவில் குறைத்து படுக்கும் வேளையில் பகலில் கூட்டலாம். அதேபோன்று வெளியே செல்லும் வேளைகளிலும் குறைத்துவிடலாம்.
- Dishwasher வைத்திருப்பவர்கள் அதனை முழுமையாக நிறைக்கு முன்பாக போடக் கூடாது. இதேபோன்றுதான் Washer, Dryer போன்ற உபகரணங்களும் அதன் உபயோத்தினை முழுமையாக சிக்கனமாக பயன்படுத்தவேண்டும். ஒரு சில உடுப்புக்களுக்காக Washer, Dryer போடுவதும் ஓரிரு பாத்திரங்களுக்காக Dish washerஐ பயன்படுத்துவதும் கூடாது.



- தேவையில்லாமல் வீட்டில் மின் குமிழ்களை போட்டுவிடக்கூடாது. இப்பொழுது மின்சக்தி விரயத்தை அரைவாசியாக்கும். சக்தி சேமிப்பு மின்குமிழ்களான Compact Fluorescent மின்குமிழ்கள் உள்ளன. அவற்றை உபயோகிப்பதும் மின்சக்தி சேமிப்பிற்கு உகந்த உத்திகளில் ஒன்றாகும்.
- சிறு உபகரணங்களானாலும் பாவிக்காத போது மின் இணைப்பை துண்டித்து வைக்கப்பழகுவது நன்று. உதாரணமாக மின்கணணியானது Turn off செய்தால் சக்தியை பயன்படுத்துகிறது. இவ்வாறாக remote ஆக அல்லது stand by powerஐ பயன்படுத்தும் உபகரணங்களை ஒரு power bar சேமிக்க உதவும். சிறுதுளி பெருவெள்ளம் அல்லவா, சிறு சக்தி தானே என பலர் உதாசீனம் செய்வதுண்டு. ஆனால் இவ்வாறு செய்வதால் மாத மின்சக்திக்கான bill இல் 4% சேமிக்க முடியும் என்கின்றது Toronto hydro அறிக்கை ஒன்று.
- குளிர் காலத்தில் நிலக்கீழ் அறையில் வசிப்பவர்கள் Humid பாவிப்பதுண்டு. ஈரப்பதனை அதிகரிப்பதற்கு அதற்கு பதிலாக தோய்த்த உடைகளை காய வைக்க பயன்படும் Drying rackஐ வாங்கினால் Dryerக்கு தேவையான சக்தியை சேமிப்பதோடு Humidifier க்கு தேவையான மின்சக்தியையும் சேமிக்கலாம். (ஒரு கல்லில் இரு மாங்காய்). Dryer தான் பிரதான சக்தி உறிஞ்சும் உபகரணம் ஆதலால் Drying rack இல் உடைகளைக் காயவைக்கும் முறையால் அச்சக்தியை சேமிக்கலாம். இவ்வாறு செய்வதனால் உடைகள் ஒரு நாளில் காய்ந்துவிடும்.

இவ்வாறாக மின்சக்தியை சேகரிக்கும் வழிமுறைகள் பல உண்டு. முன்னரும் ஒரு பொழுது சிலவற்றை வீடு பத்திரிகையூடாக தந்திருந்தேன்.

சக்தி சேமிப்பின் அனுகூலங்கள் பணம், மின்சக்தி சேமிப்பு மட்டுமன்றி Co2 வாயுவின் Enissicஐ குறைப்பதனூடாக ஆரோக்கியமான சூழல் ஏற்படுத்தலுமாகும். உங்களுக்கு வீட்டிற்குத் தேவையான சக்தி சேமிப்புகள் பற்றிய ஆலோசனைகளைப் பெற விரும்புவீர்களாயின் (416) 203 3106 என்ற இலக்கத்தில் அழைத்து Energy Audit செய்ய வருமாறு அழைக்கலாம். அவர்கள் பயன்தரும் ஆலோசனைகளை உங்களுக்குத் தருவார்கள். இது குறித்த மேலதிக விபரங்களை www.greensaver.org என்ற இணையத்தளத்தில் பார்க்கலாம். Green Saver என்பதை இலாபநோக்கற்ற கட்டுப்பாட்டைக் கடைப்பிடித்து ஆரோக்கியமான சூழல் உருவாக்குவதே இவ்வாறான சுற்றுச்சூழல் நலன் பேண அரச சுகாதார நிறுவனங்களின் நோக்கமாகும்.

மின்சக்தி சேமிப்பு என்பது கடினமானதொரு விடயமல்ல. கருத்தில் கொள்ள வேண்டிய ஒரு விடயமாகும். சக்தி சேமிப்புக்காக இரு வழிகள் உண்டு. ஒன்று நாமாக எமக்கு தெரிந்த வழிமுறைகளை பின்பற்றி முயல்வது. அடுத்தது நிபுணத்தவ ஆலோசனையைப் பெறுவது.

இங்கே மேலும் சில சக்தி சேமிப்பு வழிமுறைகளை தருகின்றேன். இது Smarthving எனப்படும் இணைத்திலிருந்து பெறப்பட்டது. இதன் மூலம் வருடமொன்றுக்கு $140 வரை சேமிக்கலாம் என கூறப்படுகிறது.

- குறைந்த வீச்சுடைய Showerhead உம் இரண்டு Faucet Aerators உம் பயன்படுத்ததுவதால் வருடமொன்றிற்கு ஒரு தனிநபர் உபயோகிக்கும் சக்தியான $45 டொலரால் மீதப்படுகிறது.
- ஐந்து Incandescent மின் குமிழ்களை அதிக பிரயோசனமுள்ள பகுதிகளில் Compact Fluorescent மின்குமிழ்களாக மாற்றவதால் வருடமொன்றிற்று $30 டொலர்கள் வரை மீதப்படுத்தலாம்.
- உங்கள் Thermostatஐ படுக்கச் செல்லும் போது வீட்டைவிட்டு வெளியே செல்லும் போதும் 20c ஆல் குறைப்பீர்களேயாயின் வருடமொன்றுற்கு $58 டொலர்கள் வரை சேமிக்கலாம்.
- யன்னல் Insulation Kit ஐ வாங்கி ஒரு வடக்குப்புறமாக பார்க்கும் யன்னலுக்குப் போட்டால் $7 வரை சேமிக்கலாம்.

சக்தி சேமிப்பு குறித்த மேலதிக தகவல்களை கனடிய அரச இணையத்தளமான www.enerquideforhouses.gc.ca இல் பெறலாம்.

April 2004 முதல் நாம் மின்சக்திக்காக அதிக விலையை செலுத்தி வருகிறோம். தொடர்ந்தும் விலை அதிகரிக்கப்படவுள்ளதாக அறிவிக்கப்படுகினறது. ஆதலால் இந்த சக்தி செலவு விலைகளிலிருந்து எம்மைப்பாதுகாப்பது மிக முக்கியமான ஒரு விடயமாகும்.

கடந்த வருடம் August 26ல் Toronto Hydro-Electric System ரொறன்ரோவிலேயே மிகப்பாரிய அளவான Industrial Solar power Generation Systerm எனப்படும் சூரிய சக்தியைப் பயன்படுத்தும் சக்தி பிறப்பாக்கி வழிமுறையை அறிமுகப்படுத்தியுள்ளனர். சூரிய சக்தியை மின்சக்தியாக்கும் இந்த அதிசிறந்த திட்டம் Toronto Hydro வினர்Solo Commrssioners Stem இல் உள்ள Service Centre நடைமுறைப்படுத்தப்படவுள்ளது. இந்த திட்டத்தினூடாக 36,000 Watts (36 Kilo Watts) சூழல் மாசுபடுத்தாதமின்சக்தியானது பிறப்பிக்கப்படவுள்ளதாக அமைகிறது. அதாவது இதன் மூலம் 4-5 வீடுகளுக்கு தேவையான சக்தி பிறப்பிக்கப்படவல்லதாக இது அமைகிறது.

## இதன் அனுகூலங்கள்:

- Solar Panel ல் அசையக்கூடிய பகுதிகள் இல்லை.
- பராமரிப்பு செலவுகள் இல்லை.
- கதிர்ஒளி அல்லது கதிர்ஒலி வீச்சுக்கள் இல்லை.

அத்துடன் சக்தி கூடிய உபகரணங்கள் குறைந்த சவர்காரம் (Detergent)ஐ பயன்படுத்துவதோடு, உடைகளை மென்மையாகவும் நன்றாகவும் தோய்ப்பனவாக நிகழ்கின்றன.

இவ்வாறாக ஒவ்வொரு சிறுவிடயத்திலும் சக்தி சேமிப்பு குறித்த ஆர்வத்தை ஒவ்வொரு ஒன்ராரியோ வாசிகளும் காட்டுவோம் ஆயின் மீண்டும் ஒரு இருள்காலம் இப்பனிக்காலத்தில் வந்து வருத்தும் அபாயம் நேராது என்பதோடு அனாவசியமாக செலவு செய்யும் பணத்தையும் மீதப்படுத்தலாம்.

■ ■ ■

# பிள்ளைகளின் கேள்விகளைக் கையாளும் முறை

## பாலியல்: ஆரோக்கியமான சிறார்களை வளர்த்தல் (Raising Sexualy Health Children )

### பிள்ளைகள் கேட்கும் பாலியல் சம்பந்தமான கேள்விகளுக்கு பெற்றோர் எப்போதும் ஏன் விடைபகர வேண்டும்?

-றாஜினி தார்சீசியெஸ்-

சிறுவர்களின் இயல்பு எந்த விடயம் பற்றியும் அறிய விரும்புவர். அந்த வகையில் பாலியல் பற்றியும் அறிய ஆவலாக இருப்பர், சிறுவர்கள் ஏனைய விடயங்களில் இருந்து பாலியலை வேறாகப் பிரித்துப் பார்க்கமாட்டார்கள். மற்றைய விடயங்களைப் போலவே தமது ஆர்வத்தை, தேடலை கேள்விகளாக பெற்றோரிடம் கேட்பார்கள். சிறார்கள் தங்களைச் சுற்றி நடக்கும் பல புரியாத குழப்பமான விடயங்களை இயல்பாகவே அவதானித்துக் கொண்டிருப்பர். சிறார்கள் கேட்கும் எந்தக் கேள்வியும் முட்டாள் கேள்விகள் என ஒன்றுமே இல்லை. அறியும் ஆவலினாலும் அவர்களுக்குள்ளே இருக்கும் தேடலினாலும் தான் கேள்விகளைக் கேட்கிறார்கள் எனவே, அவர்கள் கேட்கும் கேள்விகளை, கேள்வி கேட்கும் தன்மையை பெற்றோர் வரவேற்க வேண்டும். எப்போதும் மிகவும் நம்பிக்கைக்குரியவர்கள் பெற்றோரே என்ற உணர்வு எந்தச் சிறு குழந்தைக்கும் உண்டு. பிள்ளைகள் கேள்விகளுடன் பெற்றோரிடம் வருகையில் பெற்றோர் தகுந்த விதத்தில் வரவேற்புடன் கையாண்டால், தொடர்ந்து பிள்ளைகளுக்கு உதிக்கும் கேள்விகளுக்கான விடைகளை நாடியும், சந்தேகங்களைத் தீர்க்கவும் பிள்ளைகள் தயங்காமல் பெற்றோரிடம் இயல்பாகவே வந்து கதைக்கத் தொடங்குவார்கள். இல்லையேல் வேறு வழிகளை நாடுகையில் விடைகள் பிழையானதாகவோ அல்லது பொறுப்பற்ற விதத்தில், அக்கறையில்லாமல் கொடுக்கப்பட்ட விடையாகவோ அமைவதால் குழப்பமாக இருந்து, பின்விளைவுகள் பாதகமாகலாம். பெற்றோர் சரியானபடி பிள்ளைகளின் கேள்விகளை வரவேற்றுப் பதிலளிக்கையில், பெற்றோர் பிள்ளைகளுக்கிடையில் ஆரோக்கியமான உறவுமுறை உருவாகும். திறந்த மனதுடன் எதையும் கதைத்து, பிரச்சினைகளை சுமுகமாகத் தீர்க்கவும் உதவுகின்றது. ஆரோக்கியமான உறவுப் பாலத்தின் ஊடாக, குடும்பம் பற்றியும் பெற்றோர் தங்கள் கலாச்சாரத்தின் மேன்மைபற்றியும் பிள்ளைகளுடன் கலந்துரையாடுவதற்கு ஏற்ற சந்தர்ப்பங்கள் நிறைவே உருவாகும். பெற்றோர் அவர்களின் கேள்விகளுக்கு உண்மையாக, நல்ல விதமாக, சாதகமாக பதில் கூறும் பொழுது பாலியல் என்பது ஓர் அற்புதமான விடயம், நாங்கள் மிகவும் மதிப்பிற்குரியவர்கள் என்ற எண்ணத்தை மீண்டும் மீண்டும் பிள்ளைகள் மனதில் வலியறுத்துவதினால் சிறந்த ஆளுமை உடைய சிறார்களாவர்.

### எப்போது நாம் சிறார்களின் பாலியல் சம்பந்தமான கேள்விகளுக்கு விடை கூற வேண்டும்

பிள்ளைகள் எப்போது கேள்வி கேட்கிறார்களோ அந்நேரம் (அப்போது). கேள்வி கேட்கையில் கேள்விக்குரிய சரியான பதிலைக் கொடுக்க முடியாவிட்டால் அல்லது பதில் தெரியாவிட்டால் நாம் இது பற்றி பின்னர் கதைப்போம் என்று கூறி அதை ஞாபகத்தில் வைத்து, பின்னர் உரிய நேரத்தில் கதைக்க வேண்டும். அல்லது சரியான பதிலைத் தேடி பின்னர் பிள்ளைகளுக்குக் கூற வேண்டும். பெற்றோருக்குச் சந்தர்ப்பம் கிடைக்கும் வேளை எல்லாம் பெற்றோர் அவர்களுடன் கதைக்கலாம். உதாரணமாக, தொலைக்காட்சி நிகழ்ச்சி பார்க்கும் பொழுது, கர்ப்பவதியான ஒருவரைப் பார்க்கும் பொழுது, அல்லது விலங்குகள் குட்டி ஈனும் காட்சியைக் காணும் வேளை என பெற்றோர் கதைப்பதற்கு தகுந்த தருணம் என உணரும் வேளை எதுவோ அவ்வவ் வேளைகளில் கதைக்கலாம். பிள்ளைகள் கேட்காவிடினும் அவர்களைக் கட்டாயப் படுத்தாத விதத்தில் பெற்றோர் கேட்கலாம்



- “ இது பற்றி என்ன நினைக்கிறாய்? இதுபற்றி என்ன தெரிந்துள்ளாய் அல்லது அறிந்துள்ளாய்?” என்று. பெற்றோர் இப்படிக் கேட்பதால் பிள்ளைகளுக்குத் தெரியவரும். அவர்கள் விரும்பும் நேரம், அத்துடன் பெற்றார் பாலியல் விடயத்தைத் திறந்த மனதுடன் தம்முடன் கதைக்கத் தாயாராக இருக்கின்றனர் என. பெற்றோருக்கும் பிள்ளைக்கும் சௌகரியமாக உணரும் எவ்வேளையிலும் இரு தரப்பினரும் கதைக்கலாம்.

### கேள்விகளுக்கு விடை கூறும் பொழுது நாங்கள் என்ன கூற வேண்டும்?

விடைகளைச் சரியாக, இலகுவாக விளங்கக் கூடிய விதத்திலும், பிள்ளைகளின் வயதிற்கு விளங்கக் கூடிய சொற்களையும் கருத்துக்களையும் உள்ளடக்கிய விடைகளைப் பகருதலானது, தொடர்ந்து பிள்ளைகளுடன் தொடர்பாடலுக்கு சாதகமாக அமையும். தமது குடும்பம், கலாச்சாரம், சமயம், போன்றவற்றில் முக்கியமானது, பெறுமதியானது என்று பெற்றோர் கருதும் விடயங்கள் பற்றி பிள்ளைகளுக்குச் சொல்லிக் கொடுக்கலாம். நீண்ட அறிவுரைகளையும் கோபமான உரையாடல்களையும் தவிருங்கள். அவர்களது கேள்விகளை உயர்ந்த எண்ணத்துடன் செவிமடுத்து, அவர்கள் அவ்வாறு கேட்பதை நீங்கள் வரவேற்பதை பிள்ளைகளுக்குத் தெரியப்படுத்துங்கள். அவர்களது கேள்விகள் வரவேற்கப்படுவதை வலியுறுத்துவதுடன், தொடர்ந்து கதைப்பதற்கு வழிவகுத்துக் கொடுங்கள். பிள்ளைகளது கேள்விகள் பெற்றேருக்கு மிகவும் சங்கடமாக, தனிப்பட்ட விடயமாக அமைகையில் பெற்றோரின் சொந்த பாலியலுறவு பற்றிய கேள்விகளுக்கு விடையளிக்கும் பொழுது அது, ஒருவரின் தனிப்பட்ட விடயம்; அவர்களுக்கு மட்டும் உரிய இரகசியமான விடயம் என்று புரியவைக்க முயலுங்கள். உதாரணமாக “எனக்கும் அப்பாவுக்கும் வாய்வழி உறவு பற்றி கேள்வி கேட்டநீங்கள். சில விடயங்கள் எங்கள் இருவருக்கும் உரிய தனிப்பட்ட விடயம். அதில் இதுவும் ஒன்று. இதை நாங்கள் வேறு ஒருவருடனும் பகிர்ந்து கொள்ள மாட்டோம். உங்களுக்கும் சில தனிப்பட்ட விடயங்கள் இருக்கும்; இருக்கலாம். இவ்விடயங்களை நீயும் மற்றவருடன் பகிர்ந்து கொள்ள விரும்ப மாட்டீர்கள்” என்று பதிலளிக்கலாம்.

இதுதான் சரியான விடையென இல்லை. ஒவ்வொரு பிள்ளையும் கேட்கும் கேள்வியின் தன்மைக்கும் சூழல் சந்தர்ப்பத்திற்கேற்ற விதத்திலும் பெற்றோர் விடைகளைக் கையாளலாம்.

பகுதி 2

### கேள்விகளுக்கு எவ்வாறு விடை கூற வேண்டும்?

பெற்றாரிடம் பிள்ளைகள் கேள்விகளைத் தொடுக்கும் பொழுது கேட்கின்ற விடயம் பற்றி ஏதோ ஒரு விடயத்தை அறியும் ஆவலில் கேள்வி தொடுப்பார்கள். எனவே, பிள்ளையிடம் இவைபற்றி ஏற்கனவே என்ன அறிந்துள்ளாய், என்ன தெரியும், நீ என்ன உணர்கின்றாய் என பிள்ளையின் எதிர்பார்ப்பை அறிய முயலுதல் நன்று.

பிள்ளைகளின் கேள்விகளுக்கு எப்படி விடை கூறலாம் என நேரம்எடுத்து யோசிக்கலாம். பெற்றோர் தம் பிள்ளைகளுக்கு விடை கூறுவது தான் முக்கியமாகையால், அது சில நிமிடங்களின் பின்னராகவோ அல்லது சில நாட்களின் பின்னராகவோ இருக்கலாம். கேள்வி கடினமாக இருந்தால், அதற்கு எவ்வாறு பதில் கொடுக்கலாம் என்பது பற்றி வேரு யாருடனாவது கலந்துரையாடலாம். பிள்ளைகளின் கேள்வி பெற்றோருக்கு அசௌகரியமாக அல்லது சங்கடமாக உணர்ந்தால் சங்கடமாக உள்ளது என தெரிவிக்கலாம். அல்லது சங்கட உணர்வை ஒப்புக் கொள்ளலாம். விடை பெற்றோருக்குத் தெரியாவிட்டால் பிழையான விடை கொடுக்காது, விடை தெரியாததை வெளிப்படுத்தலாம். பெற்றோர் தம் பிள்ளையின் கேள்விக்கு உரிய விடயம் அடங்கிய புத்தகம் ஒன்றைக் கண்டுபிடித்து அப்புத்தகத்தை பிள்ளையுடன் சேர்ந்து வாசிப்பது நன்று.

ஆதாரம்: ரொரன்ரோ பொதுச் சுகாதாரக் கையேடு.

■ ■ ■

# வீட்டுத் தூசியும் ஒவ்வாமையும்

ராஜேஸ்வரி முத்துலிங்கம்

வீட்டுத்தூசி என்பது குடியிருப்பவரின் ஆரோக்கியத்துக்கு பங்கம் விளைவிக்கிறது என்பது பல சுகாதார நிபுணர்களாலும் நிரூபிக்கப்பட்ட ஒன்று. இத்தூசி குழந்தைகள் முதல் வயோதிபர்வரை நல்ல சுகதேகிகளையுஞ்சரி, நோய்வாய்ப்பட்டவரையுஞ்சரி வேறுபாடின்றிப் பாதிக்கிறது. உங்கள் வீட்டிலொருவருக்கு வருடம் பூராவும் மூக்கடைப்பு, நீர் வடிதல், தும்மல், கண்ணில் நீர் வடிதல், புருவங்களில் அரிப்பு போன்ற அறிகுறிகள் இருப்பின் அதன் முக்கிய காரணம் வீட்டுத் தூசியால் வரும் ஒவ்வாமை காரணமாக விருக்கலாம். இத்தூசி சிலருக்கு தொய்வு, இருமல், சுவாசக் கோளாறுகளையும் உருவாக்கலாமென்று மருத்துவர்கள் கருதுகிறார்கள்.

வீட்டுத் தூசி என்பது பல நுண்பதார்த்தங்களின் கலவையே. வீட்டுக்கு வீடு இக் கலவை வேறுபடலாம். தளபாடங்கள், வளர்ப்புப் பிராணிகள், ஈரத்தன்மை போன்றன தூசியின் சில மூலங்கள். ஒரு சிறிய தூசிக் குவியலில் பருத்தி நார்கள், மனித சருமத்தின் உதிர்வுகள், பிராணிகளின் முடித்துகள்கள், நுண்ணுயிரிகளெனக் கருதப்படும் மைற்ஸ், பக்டீரியா, பூஞ்சணப் பொடிகள் போன்றவற்றைக் காணலாம். இவற்றில் ஒன்றிற்கோ அல்லது பலதிற்கோ ஒருவர் ஒவ்வாமை அடையலாம்.

மேற்சொன்ன ஒவ்வாமை இருப்பதனால் உங்கள் வீடு அசுத்தமானது, தூசி நிறைந்தது என்பது பொருளல்ல. சுத்தமாக வைத்திருக்கும் வீட்டிலும் இப்படியான தூசிகள் சேரவே செய்யும். ஆனாலும் சாதாரண துப்புரவு செய்யும் முறைகளோ அல்லது பாவிக்கின்ற உபகரணங்களோ இத்தூசிகளை அகற்ற முடியாதிருக்கலாம். உதாரணமாக எப்படியான முறைகளைப் பின்பற்றினாலும், கம்பளத்தினுள்ளும், தலையணைகளிலும், மெத்தைகளிலும் மறைந்துறையும் டஸ்ட் மைற்ஸ் (dust mites) என்ற நுண்ணுயிரிகளை அகற்றுவது இலகுவான காரியமல்ல.

இந்த டஸ்ட் மைட்ஸ் என்பன அராக்னிட்ஸ் என்ற குடும்பத்தைச் சேர்ந்த எண்கால் நுண்கிருமிகளாகும். ஓரளவு வெப்பமான, ஈரப்பதனுள்ள இடங்களில் இவை பல்கிப் பெருகும் வல்லமை கொண்டன. பொதுவாக 70பாகை பரன்ஹைட் வெப்பநிலையும் 75-80 வீதம் சாரீரப்பதனும் கொண்ட சூழலில் இவை வாழக்கூடியன. ஈரப்பதன் 40-50 வீதத்துக்கும் குறைவாகின்றபோது இவை இறந்துவிடுகின்றன. கனடாவில் பொதுவாக 10 வீதமான மக்களும் 90 வீதமான தொய்வு நோயாளிகளும் இந்த டஸ்ட் மைற்ஸ் கிருமிகளுக்கு ஒவ்வாமை கொண்டவர்கள். 45 வீதமான தொய்வு நோய் கண்ட இளைஞர்கள் இக்கிருமிக்கு ஒவ்வாமை கொண்டவர்களெனக் கணிக்கப்பட்டுள்ளது. பொதுவாக தலையணைகளில் காணப்படும் இக்கிருமிகளின் உடற்கழிவுகளே ஒவ்வாமைக்குக் காரணமாகின்றன என்று மருத்துவர்கள் கூறுகிறார்கள். தலையணை, மெத்தை, கம்பளம் ஆகிய வற்றில் காணப்படும் இக்கிருமிகள் வீடு துப்புரவாக்கும் போது காற்றில் மிதக்க வாரம்பிக்கும். தலையணையில் முகம் புதைத்துக் கொண்டு நித்திரை கொள்ளும் மனிதர்கள் பெருமளவும் இக்கிருமிகளுக்கு ஒவ்வாமையை உருவாக்கிக் கொள்கிறார்கள். இவர்களது வாழ்வில் மூன்றிலொரு பங்கு மூக்கடைப்போடு கழியும் என்கிறார்கள்.

ஒரு கிராம் தூசியில் ஏறத்தாழ 19,000 டஸ்ட் மைற்ஸ் இருக்கிறதெனவும், சராசரியாக 100 தொடக்கம் 500 கிருமிகள் ஒரு கிராமில் (ஒரு பேப்பர் கிளிப்பின் எடை ஒரு கிராம்) இருக்கின்றனவென்றும் ஆய்வுகள் கூறுகின்றன. ஒவ்வொரு கிருமியும் 30 நாட்கள் உயிர்வாழும். மனித சருமத் துகள்களையும் பொடுகுகளையும் உண்டு இவை உயிர் வாழுகின்றன. இவற்றுக்கு ஒவ்வாமை கொள்ளாதோரை இவை துன்புறுத்த மாட்டா. சாதாரண கிருமி நாசினிகளால் இவற்றை அழிக்க முடியாது. ஈரப்பதனற்ற வீட்டில் இவை உயிர்வாழ மாட்டா.

“ ஒரு கிராம் தூசியில் ஏறத்தாழ 19,000 டஸ்ட் மைற்ஸ் இருக்கிறதெனவும், சராசரியாக 100 தொடக்கம் 500 கிருமிகள் ஒரு கிராமில் (ஒரு பேப்பர் கிளிப்பின் எடை ஒரு கிராம்) இருக்கின்றனவென்றும் ஆய்வுகள் கூறுகின்றன. ”

### பூஞ்சணப் பொடி

இவை பொதுவாக வெளிக் காற்றிலேயே இருக்கின்றன. இருப்பினும் சரியான வாழ் நிலையைக் கொண்டிருக்கும் வீடுகளினுள்ளேயும் இவை விருத்தியடையும். இவை 50 வீதத்துக்கு மேல் ஈரப்பதனுள்ள வீடுகளிலும், அவை பற்றிக்கொள்ள ஏதுவான பலகைகள், சட்டங்கள், சுவர்களுமுள்ள இடங்களிலும் பொதுவாக வாழ்கின்றன. மரம், துணி போன்ற பொருட்கள் இவற்றை மிகவும் கவர்கின்றன. கண்ணுக்குத் தெரியாத பொடிகளைக் காற்றில் பரப்புவதன் மூலம் அவை பரம்பலடைகின்றன. இப்பொடிகளும் மேற்சொன்ன ஒவ்வாமையை உருவாக்குகின்றன.

### கரப்பான் பூச்சிகளின் எச்சங்கள்

பல வீடுகளில் நுண்ணிய கரப்பான் பூச்சியின் துகள்களும் காற்றின் வயப்பட்டிருக்கும்போது சுவாசத்தினூடு புகுந்து ஒவ்வாமையை உருவாக்குகின்றன. பழைய, பன்மாடிக் கட்டிடங்களில் இவை வெகு சாதாரணமாகப் பெருகும். உணவும், ஈரப்பதனும் இவற்றின் பெருக்கத்துக்கு அவசியமானவை. இவற்றை ஒழிப்பது சிரமம்.

வட அமெரிக்காவில் டஸ்ட் மைற்ஸ் பிரச்சினைகள் யூலை, ஆகஸ்ட் மாதங்களில் உச்சமாக இருக்கிறதென்றும் டிசம்பர் மாதத்தில் ஒவ்வாமை உச்சநிலைக்குப் போகிறதென்றும் அறியப்படுகிறது. அதே வேளை பூஞ்சணப் பொடிகளினால் வரும் ஒவ்வாமை கோடை காலங்களில் உச்சநிலக்குப் போகிறது. கரப்பான் பூச்சியினால் வருகின்ற ஒவ்வாமை பருவ காலங்களுக்கேற்ப வேறுபடுவதில்லை.

வெப்பக் காற்றினால் சூடேற்றும் வீடுகளில் (Forced Air Heating Systems) காற்றுடன் இந் நுண்ணுயிரிகள் பறந்து வந்து சுவாசத்தில் சேர்கின்றன. இதனால் ஒவ்வாமை வியாதியுள்ளவர்கள் தமது வீடுகளில் சுடுநீரிலான வெப்பமாக்கும் முறைகளையோ அல்லது மின்சார சூடாக்கும் சாதனங்களைப் பாவிக்கிறார்கள் (Hot Water Radiator systems or Electric Baseboard Heating).

உங்களுக்கு ஒவ்வாமையோ அல்லது நிர்ப்பீடனக் குறைபாடு சம்பந்தமான வியாதிகள் இருக்கலாமென்று சந்தேகித்தால் அது சம்பந்தமான மருத்துவரிடம் ஆலோசனை பெறுங்கள். சருமப் பரிசோதனை செய்வதன் மூலம் அவர் ஒவ்வாமைக்கான காரணத்தைக் கண்டுகொள்வார். சில வேளைகளில் இரத்தப் பரிசோதனைகளையும் செய்து கொள்ள வேண்டி ஏற்படலாம்.

உங்கள் ஒவ்வாமைக்கு காரணமென்னவென்று கண்டுபிடித்ததும் அக் கிருமியை ஒழிப்பதற்கான வழிவகைகளைக் கையாள வேண்டும். டஸ்ட் மைட்ஸ் போன்ற கிருமிகளை ஒழிப்பது இலகுவில்லை எனினும், பின்வரும் சில நடைமுறைகளினால் இக் கிருமிகளைக் கட்டுப்பாட்டுக்குள் கொண்டு வரலாம்.

- பருத்தி ஆடைகளையோ, அவற்றினாலான தலையணைகளையோ பாவிக்காது செயற்கையான (synthetic) ஆடைகளை அல்லது துணிவகைகளைப் பாவியுங்கள். மெத்தைகளைப் பிளாஸ்டிக் அல்லது ரப்பர் மூலமான உறைகளினால் மூடிவிடுங்கள். கழுவக்கூடிய போர்வைகளைப் பாவியுங்கள். அடிக்கடி கொதி நீரில் கழுவுங்கள்.
- ஈரப்பதனை அகற்றும் dehumidofier சாதனங்களைப் பாவித்து அறைகளுள் ஈரப்பதனைக் குறையுங்கள். Humidifiers அல்லது Vaporizers சாதனங்களைப் பாவிப்பதைத் தவிருங்கள்.
- Cheese Cloth எனப்படும் வடிகளை வெப்பம் வரும் துவாரங்களில் வைத்து தூசிகளை வடிகட்டுங்கள்.
- ஆடைகளை வெளியில் தூக்காது அதற்கான closet களில் போட்டு கதவுகளை மூடிவிடுங்கள்.
- Stuffed animals வகையான பொம்மைகளை அப்புறப்படுத்துங்கள்.
- வளர்ப்புப் பிராணிகளைப் படுக்கையறைகளுக்குக் கொண்டு போகாதீர்கள்
- வீட்டை அடிக்கடி மிகவும் கவனமாகத் துப்புரவாக்குங்கள். அடிக்கடி vaccum cleanerகளைப் பாவித்து தூசிகளை அப்புறப்படுத்துங்கள். முகமூடிகளைப் போட்டுக்கொண்டு வீடுகளைத் துப்புரவாக்குவது நல்லது.
- படுக்கையறைகளில் கம்பளத்தை அகற்றி விட்டு பலகை நிலங்களை அமைப்பது நல்லது.
- தூசியைத் தக்கவைத்துக் கொள்ளும் பொருட்களை அகற்றுங்கள். மரத்தினாலான அல்லது தோலினாலான தளபாடங்களை உபயோகியுங்கள்.
- குளிர் சாதனத்தைப் பாவித்து வீட்டினுள் ஈரப்பதனை 50 வீதத்துக்கும் குறைவாக விருக்கப் பார்த்துக் கொள்ளுங்கள்.
- டஸ்ட் மைட்ஸ் கிருமிகளைக் கொல்ல வல்ல கிருமிநாசினிகள் இருக்கின்றனவென்றாலும் அவற்றினால் பல இதர தீய விளைவுகளும் ஏற்படலாம். கட்டுப்பாடற்ற பாதிப்புள்ள இடங்களில் மட்டுமே இந்நாசினிகளைப் பாவிப்பார்கள்.
- Benzyl benzoate என்ற ஒருவகைப் பவுடர் கம்பளங்களில் தூவி விட்டு 8-12 மணித்தியாலங்களின் பின்னர் vaccum செய்வதன்மூலம் அதை அகற்றி விடலாம். இதனால் இந்நுண் கிருமிகளைக் கட்டுப்பாட்டில் வைத்திருக்கலாம்.

■ ■ ■

# கத்தி இன்றி...

29ம் பக்கத் தொடர்ச்சி...

- உங்கள் கிறெடிற் றிப்போர்ட்டை ஒரு குறிப்பிட்டகால இடைவெளிகளில் கிறெடிற் ஹிஸ்ரறி எப்படி இருக்கிறது என்பதையும் அதில் இருக்கும் கடன் விபரங்களையும் சரியானதா என்பதையும் பார்த்துக் கொள் ளுங்கள்.
- உங்கள் கணனி தொடக்கம் வங்கிக் கணக்கு வரையிலான அமைப்புகளின் பாஸ்வேட்டுகளை மிகப் பாதுகாப்பாக வைத்துக்கொள்ளுங்கள்.
- முன்னர் கூறிய உங்களைப் பற்றிய தனிப்பட்ட 7 காரணிகளையும் முடிந்த வரை மற்றவர்க்கு முழுமையாகத் தெரி யாதபடி பாதுகாத்துக்கொள்ளுங்கள்.
- உங்களைப் பற்றிய தகவல்களைத் தொலைபேசி மூலமாகக் கொடுப்பதனைப் பொதுவாகத் தவிர்த்துவிடுங்கள். முடிந்த அளவிற்கு நேரடியாக அவற்றைப் பரி- மாறிக்கொள்ளக்கூடிய வசதிகளை ஏற் படுத்திக்கொள்ளுங்கள். (தொலைபேசி யில் தகவல்களைக் கூறும்போது, அடுத்த முனையில் இருந்து யார் யாரெல் லாம் கேட்டுக்கொண்டிருக்கிறார்கள் என்று அறிய முடியாது.)
- உங்களுக்கு வரும் தபால்கள், தொலை நகல்மூலம் வரும் காகிதங்களைத் தேவை யில்லாமல் குப்பைக் கூடைக்குள் போட்டு விடாதீர்கள். முடிந்தவரை shredders மூலம் மீளவும் ஒன்று சேர்த்து வாசிக்க முடியாதபடி கிழித்து, பின்னர் குப்பை யுடன் சேர்த்துவிடுங்கள். Bank Bills, Bank Statments, Properpy Tax Statm- ents, போன்ற முக்கியமானவற்றைப் பாது காப்பான இடத்தில் பத்திரப்படுத்தப் பழகிக் கொள்ளுங்கள்.
- உங்கள் வங்கி அட்டை அல்லது கடன் அட்டையில் ஒருகுறிப்பிட்ட சிறிய தொகை -க்கு மேல் ஒரே நாளில் எடுக்கமுடியாத வசதியினை அதனுடன் தொடர்பான நிறு வனத்துடன் ஒப்பந்தத்தை ஏற்படுத்திக் கொள்ளுங்கள்.
- உங்களுடைய Porch (wallet) இல் என்ன என்ன இருக்க வேண்டும் என்பதனை முன்னரேயே தீர்மானித்துக்கொள்ளுங் கள். உதாரணமாக. Canadian Citizen Card, Sin number, passport இன் பிரதி என்பவை அடிக்கடி பாவனைக்கு உட்படுத் தப்படாதவை. அவற்றை உங்கள் Porch (wallet)இனுள் வைத்திருப்பதைத் தவிர்த்து விடுங்கள்.
- உங்கள் பெயர்களை Mailing listஇல் இருந்து அகற்றிவிடுங்கள். அகற்றிவிடுவ தால் பல நிறுவனங்கள் அனுப்பும் Pre approved cards, திடீரென வெற்றிபெற்ற தாகக்கூறி, உங்களைப் பற்றிய மேலதிகத் தகவல்களை அறிய விரும்பும் நிறுவனங் களை இதன்மூலம் கட்டுப்படுத்திக் கொள்ளலாம்.
- Face book, My space, You Tube என்பவற்றை உருவாக்கும்போது திடீரெ- னத் தோன்றும் தகவல்களில் மிகுந்த கவனம் எடுத்துக்கொள்ளுங்கள்.



### கணனியிலிருந்து உங்களைப்பற்றிய தகவல்கள் மற்றவர்களைச் சேராமல் இருக்க, நாம் எடுக்கவேண்டிய பாதுகாப்பு முறைகள்

- உங்கள் கணனிகளில் pass word களை குறைந்தது 6 இலிருந்து 8 வரையான இலக்கங்களையும் இடைவெளிகளையும் எழுத்துக்களையும் உடையதாக அமைப்ப துடன், 2இலிருந்த 3மாதத்தில் ஒரு தடவை மாற்றியமைக்கும் முறையைக் கைக்கொள் ளுங்கள்.
- Virus /spyare /Moleware போன்றவற்றிலி ருந்து பாதுகாக்கக்கூடிய மென்பொருட் களை பதிவிறக்கம் செய்வதுடன் அவற் றை update செய்துகொள்வது அவசியம்.
- Fire walls களை அமைப்பது மிகமிக முக்கியம்.
- தேவையில்லாமல் தெரியாதவர்களுக்குப் பதில் அனுப்புவதனையும் அனாவசியமான ஈமெயில்களைத் திறப்பதையும் தவிருங் கள். (பொதுவாக நைஜீரியா நாட்டுடன் சம்பந்தமான ஈமெயில்கள் உங்கள் வங்கிக் கணக்குகளைக் கணக்குப் பார்ப் பதற்கென்றே வருபவை)
- விரும்பாமலேயே வரும் Popup களையும் அவசரப்பட்டுத் திறந்துவிடாதீர்கள்.
- Internet Cafe, HotSpots போன்ற இடங் களிலிருந்து இணையத் தளங்களைப் பாவிக்கும்போது உங்களைப் பற்றிய தனிப்பட்ட தகவல்களுடன் கூடிய இணை யத் தளங்களைப் பாவிப்பதனைத் தவிர்த் துக்கொள்ளுங்கள். ஏனென்றால், இப் படிப்பட்ட சூழல்களில் பல Remote serv- ice settings உங்கள் கணனி நடப்பு களைக் கவனிப்பதற்குரிய மென்பொருட் களுடன் அமைக்கப்பட்டிருக்கும்.
- உங்களுக்கு இனிமேல் தேவையில்லாத அல்லது ஒருவர் பாவித்த கணனியை வேறொருவருக்குக் கொடுக்கும்போது அந்தக் கணனியில் இருக்கும் Hard drive ஐ மாற்றீடு செய்வது நல்லது.

தினமும் நாம் செய்யும் வேலைக்கான ஊதியங்கள் அனேகமாக வங்கிகள் மூலமா கவே எங்களை அடைகின்றன. இந்த Electronic money அல்லது Emoney எந்தஅள விற்குப் பாதுகாக்கப்படலாம் என்பதே இன்று உலகில் இருக்கும் முக்கியமான கேள்வி. முடிந்தவரை, எங்களைச் சுற்றி ஒரு பாதுகாப்பு வலயத்தை ஏற்படுத்திக்கொள் வோம். எங்களைச் சுற்றி நடக்கும் முக்கிய மான தகவல் பரிமாற்றத்திடம் கவனத்தைச் செலுத்திக்கொள்வோம்.

உங்கள் வங்கியிலிருக்கும் பணத்தை, வங்கி யின் இருப்பிடம் தெரியாமலேயே கத்தியில் லாமல், ரத்தமில்லாமல் கொள்ளையடிக் கும் உலகின் கதை இது!

■ ■ ■

# திருக்குறளும் பிள்ளைவளர்ப்பும்



பாலா
இராஜேந்திரன்

உலகத்தில் வாழும் மக்கள் எல்லோரும் குழந்தைகளின் வளர்ச்சியில் ஈடுபாடு காட்டுவார்கள். தமக்குத் தெரிந்த மாதிரித் தமது பிள்ளைகளை வளர்க்கிறார்கள். இயற்கையை விட்டு அதிக தூரம் விலகி வந்துவிட்டதாலும், போக்குவரத்து வசதிகள் அபிவிருத்தியடைந்திருப்பதாலும், எமது உடல் நலத்திற்கு ஒவ்வாத பலவகையான உணவுகளை உண்பதாலும், வளிமண்டலம் அசுத்தப்பட்டிருப்பதாலும், நேரமில்லாமல் மக்கள் சிரமப்படுவதாலும், தமது குழந்தைகளை எப்படி வளர்ப்பது என்று தெரியாமல் திணறிப்போயுள்ளனர் பெற்றோர். பிள்ளை வளர்க்கும்போது அவர்கள் உடலும், உள்ளமும் வளர வகை செய்ய வேண்டும்.

'ஆளும் வளரணும் அறிவும் வளரணும் அதுதாண்டா வளர்ச்சி".

எவ்வளவு பெரிய விடயத்தை எவ்வளவு சுருக்கமாகக் கூறியுள்ளார் இப்பாடல் ஆசிரியர்! சிறுபிள்ளைகள் வளர்ச்சி என்பது உடல் வளர்ச்சி, உள வளர்ச்சியுடன் அவர்களின் சமூகம் பற்றிய அறிவும், பொது அறிவும் ஏற்பட வேண்டும். அப்போதுதான் எமது பிள்ளைகள் நோயற்றவர்களாகவும், அவர்கள் வாழும் சமூகத்திலுள்ள ஏற்றத் தாழ்வுகள், நல்லதற்கு, கெட்டதற்கு ஈடு கொடுத்து வாழமுடியும். இது ஒரு போட்டிகள் நிறைந்த உலகம். 'வல்லவன் வாழ்வான்" என்ற வாக்கியப்படி வலிமையுள்ளவர்கள் வாழ்வார்கள்.

குழந்தைகள் முதலில் பிற பிள்ளைகளுடன் அன்பாகப் பழகக் கற்றுக் கொள்ளவேண்டியது அவசியம். அத்துடன் பெரியோருக்கு உரிய மரியாதை செலுத்த வேண்டும். பெற்றோர் மனம் கோணாது நடக்க வேண்டும்.

'குழல் இனிது யாழினிது என்பர்
தம்மக்கள் மழலைச் சொல் கேளாதவர்"

என்ற குறள் சொல்வது என்ன? தமது குழந்தைகள் பேசுவது குழலிசையையிட, யாழிசையைவிட இனிமையானது என்பது பொருள். எனவே நாம் சிறுவர்கள் பேசுவது இனியவையாக இருக்க ஆவன செய்ய வேண்டும். பிறருடன் எமது சிறார் பேசும் போது இனிய சொற்களை அன்புடன் பேச வேண்டும். அப்போதுதான் பெற்றோருக்கு மட்டுமல்ல - அவர்கள் பேச்சைக் கேட்கும் அனைவரும் மகிழ்வடைவர்.

பிறர் எம்மை சுடுசொற்களால் திட்டினாலும் எமது குழந்தைகள் சுடு சொற்களை உபயோகிக்கக் கூடாது. இளம் வயதில் குழந்தைகள் பல மொழிகளைக் கற்கக்கூடியவர்களாக உள்ளனர். ஐந்து வயதுக் குழந்தை ஐந்து மொழிகளைக் கற்றுக் கொள்ளக் கூடிய திறனுடையது என்பது உளவியல் ஆய்வினர் கருத்து. 'இளமையிற் கல்வி சிலையில் எழுத்து" என்பது பழமொழி. இளம் வயதில் ஒரு குழந்தையின் மூளை மிகவும் சக்தி வாய்ந்தது. அது கேட்கும், படிக்கும் சொற்களை இலகுவில் மனதில் பதிய வைத்துக் கொள்ளும். எனவேதான் குழந்தைகள் கேட்கும்படி நாம் பிறரைப் பற்றித் தவறாகப் பேசவோ, சுடு சொற்களை உபயோகிக்கவோ சுடாது. சில பெற்றோர் தமது குழந்தைகள் அருகில் உள்ளபோது பிறரைப் பற்றிக் குறைகூறல் அறவே கூடாது. ஏனெனில் குழந்தைகள் மனதில் அவை அப்படியே பசுமரத்தாணி போற் பதிந்துவிடுகிறது. குறிப்பிட்ட நபர்களைக் காணும்போது, அக்குழந்தை அவர்களைப் பற்றிய கெட்ட எண்ணத்துடன் வளர்வதுடன் அவர்களிடையே தாம் கேட்டவற்றைக் கூறவும் கூடும்.

## சற்று வளர்ந்த பிள்ளைகள்

'தந்தை மகற்காற்றும் உதவி அவையில்
முந்தியிருக்கச் செயல்"

'மகன்தந்தைக் காற்றும்உதவி இவன்தந்தை
என்னோற்றான் கொல்லெனும் சொல்"

தனது பிள்ளையைக் கற்றோர் அவையில் முந்தியிருக்கச் செய்தல் ஒரு பெற்றோரின் கடமை. அதாவது அவர்கள் தங்கள் பிள்ளைகளைக் கற்றவர்கள் உள்ள சபையில் முன்னிருக்கச் செய்ய வேண்டும். எனவே கல்வி புகட்டுவது பெற்றோருடைய முக்கிய கடமையாகிறது. இவ்விடயத்தில் பெற்றோர் காட்டும் கரிசனையிலேயே தந்தைக்கான பெருமையைப் பிள்ளையால் பெற்றுக்கொடுக்க முடியும்.

'ஈன்றபொழுதிற் பெரிதுவக்கும் தன்மகனைச்
சான்றோன் எனக்கேட்ட தாய்"

ஒரு தாயானவள் தன்பிள்ளை நல்லவன் என்று பிறர்வாயால் கேட்கும்போது, அப்பிள்ளையைப் பெற்றபோது இருந்த மகிழ்ச்சியைவிட அதிக மகிழ்ச்சி பெறுகிறாள். இது பெற்றோர் இருவருக்கும் பொருந்தும். எனவே பெற்றோர் ஆகிய நாம், எம் பிள்ளைகளை நல்லவர்கள் என்று பிறர் சொல்லும்படி வளர்க்க வேண்டும்.

மேலும், எவ்வளவு பெரிய பதவியில் இருந்தாலும், எவ்வளவு படித்திருந்தாலும் எவ்வளவு அதிகாரம் இருந்தாலும்

'காட்சிக் கெளியன் கடுஞ்சொல்லன் அல்லனேல்
மீக்கூறும் மன்னன் நிலம்"

என்பது போல, எவன் ஒருவன் பெரிய படிப்பு, பதவியிலிருந்தாலும் பிறர் அவனைச் சந்தித்துப் பேசவும், சந்திக்கவும் விருப்பமுள்ளவனாக இருக்கிறானோ, அதாவது பெருமை, ஆணவம், மமதை இன்றிப் பிறரை மதித்து, எந்தப் பாரபட்சமுமின்றி, தன் கடமையைச் சரிவர எவன் செய்கிறானோ அவன் மக்களால் மதிக்கப்படுகிறான். அவன் சொல்வதை மக்கள் ஏற்றுக் கொள்வார்கள்.

எமது பிள்ளைகளை நல்லவர்களாகவும், வல்லவர்களாகவும் மனித நேயம் உள்ளவர்களாகவும், ஏழை, எளிய மக்களுக்கு உதவி செய்யும் மனம் உள்ளவர்களாகவும், பிறருக்கு உதவவே இறைவன் எமக்கு நல்ல உடல்நலம், பணம், பதவியைத் தந்துள்ளான். இறைவன், தான் செய்ய வேண்டியவற்றை நல்ல இதயம் படைத்த பண்பாளர், மனித நேயமுள்ளவர்கள் மூலமே செய்விக்கிறார். எனவே மனிதர்கள் துன்பப் படும்போது யாரங்கு ஓடிச்சென்று உதவுகிறானோ அவனில் மக்கள் இறைவனைக் காண்கிறார்கள்.

'அழுக்காற்றின் அல்லவை செய்யாம்
இழுக்காற்றின்
ஏதம் படுபாக்கு அறிந்து"

பொறாமை என்னும் தீய நெறியால் தமக்குத் துன்பம் உண்டாதலை அறிந்தவர்கள் பொறாமைகொண்டு பாவங்களைச் செய்ய மாட்டார்கள். எனவே நாம் எம் பிள்ளைகளை பொறாமை, தன்னலம், இன, மத, சாதித் துவேசம் ஏதும் இல்லாதவர்களாக வாழச் செய்யவேண்டும்.

'அதனமர்ந்து செய்யான் உறையும் முகனமர்ந்து
நல்விருந்து ஓம்புவான் இல்"

எவனொருவன் தன்வீட்டிற்கு வரும் விருந்தினரை உபசரிக்கிறானோ அவன் வீட்டில் திருமகள் விரும்பித் தங்கியிருப்பாள்.

வள்ளுவர் வாக்குப்படி விருந்தினரை அகமும் முகமும்மலர வரவேற்று உபசரிப்பவர் வீட்டில் திருமகள் விரும்பி வாழ்வாள். இங்கு திருமகள் என்று குறிப்பிடுவது செல்வத்தையோ, அல்லது செல்வத்தின் அதிபதியாகிய இலக்குமியையோ அல்ல. அவ்வீட்டில் மகிழ்ச்சி குடியிருக்கும் என்பதே பொருத்தமானது.

இன்னும் எவ்வளவோ சொல்லலாம். நேரமும் இடமும் கருதி இத்துடன் நிறுத்துகிறேன்.

■ ■ ■









# எப்போதையும் விடச்சிறந்த நவம்பரும் சிறந்த வருடமும் ஆகும்.

**S.K. பாலேஸ்**
- வீடு விற்பனை முகவர் -



7313 விற்பனைகளுடன் நவம்பரில் சாதனை படைத்தனர். இதுவரை 88,695 விற்பனைகள் நடைபெற்றன. 2005ம் ஆண்டில் விற்ற 84ஈ145 என்ற எண்ணிக்கையை விட அதிகம் ஏற்கனவே விற்றாகிவிட்டது. இதுவே இதுவரை எமது சாதனையாக இருந்தது. டிசம்பர் இறுதியில் முதல் தடவையாக 90,000 விற்பனை எண்ணிக்கையைத் தாண்டிவிடும். 2007ம் ஆண்டு முடிவுறுந் தறுவாயிலும் ரொறன்ரோ பெரும் பாகத்தில் வீட்டு விற்பனைச் சந்தை எப்போதும் போல ஆரோக்கியமாக உள்ளது. நவம்பரின் விலை மாற்றமில்லாமல் சராசரி டொலர் 393,747 ஆக, அதாவது சென்ற மாதம் பதியப்பட்ட விற்பனையான டொலர் 394,646ஐ விடச் சற்றுக் குறைவாகும். இது 2006 நவம்பரில் பதியப்பட்ட டொலர் 355,727ஐ விட 11வீதம் அதிகம். இதற்கிடையில் சந்தைப்படுத்தப்பட்ட நாட்கள் 32 ஆகவும் விற்பனை விலைக்கிடையில் இருந்த விகிதா சாரம் 98வீதம் ஆகும்.

## வணிக நிலவரம்

(நவம்பரில் 90,000 சதுர அடி குத்தகைக்கு விடப்பட்டது) 895,632 சதுரஅடி இடம் ரொறன்ரோ MLS முறையில் குத்தகைக்கு விடப்பட்டதன் மூலம் இன்னொரு சுறுசுறுப்பான மாதம் இருந்ததாக TREB அங்கத்தவர்கள் அறிவித்தார்கள். இது ஒக்ரோபர் எண்ணிக்கையான 821,889 ஐவிட ஒன்பது வீதம் அதிகமாகும்.

தொழில்இடம் ஒரு சிறு வித்தியாசத்தில் தொடர்ந்தும் நவம்பரில் விற்பனையானது. (சகல பிரிவுகளும்) சராசரி டொலர் 5.63sfn. வர்த்தகச் சில்லறை இடம் டொலர் 14.63sfn. அதுவும் வழமையான வரம்புக்குள் விற்பனையானது.

## மொத்த விற்பனைவிபரம்

| எண்ணிக்கை | மாவட்டம் | சராசரி | விற்பனை |
|---|---|---|---|
| 28 | மேற்கு மாவட்டங்கள் | $362, 272 | 2,725 |
| 14 | மத்திய மாவட்டங்கள் | $519, 641 | 1,529 |
| 23 | வட மாவட்டங்கள் | $417, 967 | 1,354 |
| 21 | கிழக்கு மாவட்டங்கள் | $315, 738 | 1,705 |

## விற்பனைச் சந்தையின் முக்கியவிபரங்கள்.

நவம்பர் மாதம் 71 சொத்துக்கள் விற்பனையானதாக TREB அங்கத்தவர்கள் பதிவு செய்துள்ளனர்.(தொழில், வர்த்தகச் சொத்துக்கள்)

இவற்றுள் 37 தொழில் சொத்துக்கள் (எல்லா அளவிலும் உள்ளவை) சராசரி டொலர் 137,32 சதுர அடியாக விற்றன. இதை MLS அல்லாத சொத்துக்கள் விற்ற டொலர் 96.30 சதுர அடி என்ற விலையுடன் ஒப்பிடலாம்.

■ ■ ■

# குளிர்காலத்தை எதிர்கொள்ளல்

**- த. சிவதாசன் -**

பனி தனது வருடாந்த விடுமுறைக்காய் வருகிறது. வட பூமி தன் வெள்ளைப் போர்வைக்குள் பதுங்கிக் கொள்ளுமுன் மனிதர்கள் தத்தம் தயாரிப்புகளைச் செய்வதற்காய் அவகாசம் கொடுத்திருந்தது அது.

சாவகாசமாய் எழுந்திருத்தல் இனி ஆகாது. பனிவழிக்கச் சிலவும், மெது நடைக்குச் சிலவுமென நிமிடங்கள் பல தேவை. ஆவேசத்தோடு வீசும் பனிப்புயலும் எதிர் பாராது வரலாம். எனவே முன்தூங்கிப் பின்னெழுதல் இனி ஆகாது.

உண்டு கொழுத்து ஊன் பிதுங்கி ‘வாடா வெட்டி’ யாய் வாழ்தல் நமக்குப் பிடிக்கும். பொரித்தும் பிரட்டியும் வதக்கியும் வாட்டியும் எண்ணையில் குளித்த எமதுணவு பற்றி மருத்துவர் சொன்னாலும் ‘இதயம்’ சொல்லும் போதுதான் எடுபடுகிறது. சிலருக்குத் தண்டனை மரணம். எனவே குளிருக்கு முன்னரே வைத்தியரைப் பார்த்து வைப்பது நல்லது. குளிர் இவர்களுக்கு எதிரி. எடுத்தாற்போல் பனி வழிக்கவென்று ஏகுதல் இனி ஆகாது. எனவே தயாரிப்பிற்காக, பல கேள்விகளைச் சுயமாகவே கேளுங்கள்.

ஏற்கனவே இருதயம் பாதிக்கப்பட்டதா? இரத்த உயரழுத்தம் அல்லது ‘காலஸ்ட் ரோல்’ மிதமாக இருக்கிறதா? புகை பிடிப்பவர்களா? அசையாது ஓரிடத்தே உறையும் பாங்கினரா?

அப்பிடியாகில்,

நீங்கள் ஒரு முதியவராயின், ஒரு மாணவரையோ அல்லது தொண்டர் சேவையையோ அணுகி பனி வழித்தலை அவர்களிடம் விட்டு விடுங்கள். சில டாலர்கள் உங்கள் உயிரையே தக்க வைக்கும். முடியுமாயின் சாப்பாட்டிற்குப் பின்னர் ஓரிரு மணித்தியாலங்கள் பனியை வழியுங்கள். அப்போது காப்பி போன்ற பானங்களையும் புகைத்தலையும் தவிருங்கள். பனி வழிப்பதற்கு முன்னர் உடலைத் தயார் செய்யுங்கள். பல நிமிடங்களுக்கு வீசு நடை நடந்து உடலைத் தகுந்த வெப்பநிலைக்குக் கொண்டு வாருங்கள். மந்தகதியில் ஆரம்பித்து 5-7 நிமிடங்களுக்கு வழித்த பின்னர் 2-3 நிமிடங்களுக்கு ஓய்வெடுங்கள். பின்னர் அதே கதியில் தொடருங்கள்.

பனி வழிக்கும்போது ஏற்படும் நீரிழப்பை ஈடுசெய்ய பல குவளைகள் தண்ணீரை அருந்துங்கள். பனி விழுந்து மலையாகக் குவியலாகு முன்னரே வழிக்கத் தொடங்கி விடுங்கள். கொஞ்சம் கொஞ்சமாக அடிக்கடி வழிக்கும்போது சுமை குறைவாகவிருக்கும். புதிய பனி சுமை குறைந்ததாகவும் அடர்த்தியான அல்லது உருகுகின்ற பனி சுமையதிகமாகவும் இருக்கும்.

அடிக்கடி ஓய்வெடுங்கள்.

பாரம் குறைந்த பிளாஸ்டிக் பனிவாரி (shovel) களைப் பாவியுங்கள். உடல்வாகுவுக்கேற்ற (ergonomic) வளைந்த கைப்பிடியுள்ள பனிவாரிகள் களைப்பையும் காயப்படுதலையும் குறைக்க வல்லன. பனிவாரிகளில் பனி ஒட்டாது தவிர்க்க ‘சிலிக்கோன்’ திவலைத் தூவியைப் (Spray) பாவித்து தூவிக் கொள்ளுங்கள்.

குளிர்போக்கும் பல ஆடைகளை அணிந்து கொள்ளுங்கள். எவ்வளவு தூரம் உடலை மூடிக்கொள்ள முடியுமோ அவ்வளவுக்கு மூடிக் கொள்ளுங்கள். தொப்பி, கையுறைகளை உபயோகியுங்கள். நல்ல புதை மிதிகளை (boots)ப் பாவியுங்கள். அதி முக்கியமாக, பனிச் சேரலை வாரிகளால் அள்ளித் தூக்காதீர்கள். மாறாக, வாரிகளால் தள்ளிக் கொண்டுபோய் அப்புறமாக விட்டு விடுங்கள். பாரமான பனிச் சேர்க்கையை வாரிகளால் அள்ளித் தூக்கும் போது நாரி, இடுப்பு போன்றவிடங்களில் எலும்பு பிசகி பலர் நிரந்தரமான வியாதிக்குள்ளாகுகிறார்கள். பாரத்தைத் தூக்கும் போது நாரியைத் தாக்காது முழங்கால்களுக்கு அப்பாரத்தை வழிமாற்றிக் கொள்ளும் இயல்பைப் பழகிக் கொள்ளுங்கள்.

> **“ பனி வழிக்கும்போது ஏற்படும் நீரிழப்பை ஈடுசெய்ய பல குவளைகள் தண்ணீரை அருந்துங்கள். பனி விழுந்து மலைக் குவியலாகு முன்னரே வழிக்கத் தொடங்கி விடுங்கள். கொஞ்சம் கொஞ்சமாக அடிக்கடி வழிக்கும்போது சுமை குறைவாகவிருக்கும். ”**

இடுப்பின் அகலத்திற்குப் பாதங்களைப் பரப்பிக் கொள்வதால் உறுதியாக நிற்பது சாத்தியமாகிறது. தூக்கும்போது வயிற்றுத் தசைகளைச் சுருக்க இறுக்கிக் கொள்ளுங்கள். தூக்கும்போதே உடலை முறுக்காதீர்கள். பனிவாரியை உடலுக்கு மிக அருகே வைத்திருங்கள். இதனால் நெம்பும் வினைத்திறன் அதிகமாகிறது.

பனிச் சேர்க்கையை வாரியினால் அள்ளி வீசாதீர்கள். பனிச் சேர்க்கை ஆழமாகவிருக்கும்போது 1-2 அங்குலமளவுக்கு சிறிது சிறிதாக வாரிக் கொள்ளுங்கள். பனி உறைந்து வழுக்க ஆரம்பித்தால் உப்பையோ மணலையோ தூவி வழுக்கலைத் தவிர்க்கப் பாருங்கள்.

இறுதியாக, பனி வாரல் உடலுக்கு மிகவும் பாதிப்பைத் தரும் தொழிற்பாடு. இருதயத்திற்கு அழுத்தம் தரக்கூடியது. களைப்பு வெப்பவிழப்பு, உறை வெடிப்பு போன்று உடலைப் பாதிக்கும் தன்மையது. பனி வாரும்போது உங்களுக்குப் பின்வரும் அறிகுறிகள் ஏற்பட்டால் உடனே 911 இலக்கத்தை அழையுங்கள். மார்பு, மேற்கைகள், கழுத்து போன்றவிடங்களில் தசையிறுக்கம், பாரம் போன்ற உணர்வு ஏற்படல். வழக்கமற்ற முறையில் சுவாசம் குறுகுதல், சுவாசப் பைகள் நிரம்பாதது போன்ற அவதி உண்டாகுதல். மயக்கம், தலைச் சுற்றல் போன்ற உணர்வு ஏற்படுதல். அளவுக்கதிகமாக வியர்த்தல், வாந்தி எடுக்கவேண்டும் போன்ற உணர்வு ஏற்படுதல்.

பனி தன் விடுமுறைக்கே வந்திருக்கிறது, தங்கிவிடப் போவதில்லை என்பதை ஞாபகத்தில் வைத்திருங்கள். இளையவர்களிடம் உதவி கேட்பதில் தவறில்லை!

■ ■ ■




பல்வகையான ரசனையுடைய வாசகர்களாகிய உங்களுடைய ஆதரவுடன் தொடர்ந்து தாய் வீடு செயற்பட்டுவருகின்றது. தற்போது எமது முயற்சியின் ஓர் படியாகத் தாய் வீடு சிறப்பு மலர் உங்கள் கைக்கு வருகின்றது. இந்த முதலாவது சிறப்பு மலர் எமது மறைந்த ஈழத்து எழுத்தாளராகிய மு.தளையசிங்கம் அவர்களுக்கு மதிப்பளிக்கும் வகையில் அமைகிறது. அவருடைய ஒட்டுமொத்த நூல்களையும் மறுமொழி ஊடக வலையத்தின் ஆதரவுடன் தொகுத்து புங்குடுதீவு பழைய மாணவர் சங்கம் இம்மாதம் 26 திகதி ரொரன்ரோவில் வெளியிடுகிறது. பெரும் பொருட்செலவில் அமைந்த இந்த முயற்சிக்கும் தாய் வீடு பத்திரிகையின் வாழ்த்துகள்.

இந்த இலக்கிய மலர் முயற்சியும் உங்களின் வரவேற்பைப் பெறும் என்று நம்புகின்றோம். தேவையும் வாய்ப்பும் கருத்தில் கொண்டு அவ்வப்போது இம்முயற்சியை உங்களுடன் பகிர்ந்து கொள்வோம்.

இலவச இதழ்களைப் படிக்கும் வாசகர்களுக்கு தரமான இலக்கியங்கள் பற்றிய அறிமுகம் மற்றும் அவற்றை வாசிப்பதற்கான வாய்ப்பு கிடைப்பதில்லை. அந்த இடைவெளியை நிரப்பும் முயற்சியாக இது இருக்கும். குறிப்பாக கனடா வாழ் மற்றும் ஈழத்துத் தமிழ் இலக்கியத்துடன் தொடர்புடைய இலக்கிய படைப்புக்களும் பதிவுகளும் அவ்வப்போது இடம்பெறும்.

## தமிழ் இலக்கிய விமர்சனம்:

# மு.தவும் இன்றைய போக்குகளும்



மு. பொன்னம்பலம்

தமிழில் இலக்கிய விமர்சனம் பற்றிப் பேச முற்படும் நாங்கள், அதன் தோற்றம் மிக அண்மைக்காலத்துக்குரியதென்பதை நினைவில் கொள்ளல் வெண்டும். தமிழில் ஒழுங்கான இலக்கிய விமர்சனம் என்பது, (Literary criticism proper) நாற்பது அல்லது ஐம்பது வருடங்களுக்குமேல் செல்லாது என்றே சொல்லலாம். தமிழ் ஆதிமொழிகளில் ஒன்றென்றும் அது பல மொழிகளின் தாயாக இருந்திருக்கிறதென்றும் அதன் பழமை பற்றிப் பேசப்படுவதில் உள்ள கணிசமான உண்மை, அதன் விமர்சனத்துறைக்குப் பொருந்தாது என்பதை நாம் அறுதியிட்டுக் கூறலாம். எஸ்.வையாபுரிப்பிள்ளை அவர்கள் தமிழரின் இலக்கியத் தொன்மைக்கு எதிராக முன்வைத்த பிழையான தீவிர அழுத்தத்தை நாம் அதன் விமர்சனத் துறையின் தொன்மைக்கு எதிராகவே அழுத்த வேண்டும். நச்சினார்க்கினியார், பரிமேலழகர் போன்றோர் வரிசையில் வரும் உரைகளையும் நக்கீரரின் 'குற்றமே குற்றம்" போன்ற கதைகளையும் நாம் தமிழ் இலக்கிய விமர்சனத்துறையிலிருந்து ஒதுக்கி விட்டால் நமக்கு எஞ்சுவது எதுவுமில்லையென்றே சொல்லிவிடலாம். இந்நிலையில் வையாபுரிப்பிள்ளை அவர்கள் தமிழ் இலக்கியத் தொன்மைக்கு எதிராக முன்வைக்கும் அழுத்தங்கள் சரியோ, பிழையோ, அந்த அழுத்தங்களில் தொனிக்கும் பற்றின்மை, விஞ்ஞான நோக்கிற்குரிய புறநிலை ஆய்வு, (Objective) போன்றவற்றை தமிழ் இலக்கிய விமர்சனத்துறையின் ஆரம்பக் கருக்கூட்டல்களாகக் கொள்ளலாம். வெறும் ஆரம்பக் கருக்கூட்டல் மாத்திரமே. பலதளப்பார்வைக் கொண்ட பெரும் விமர்சனப் பாய்ச்சல் தமிழில் ஏற்பட இன்னும் பல வருடங்கள் இருந்தன.

இச்சந்தர்ப்பத்தில் நாம் ஒன்றைத் தெளிவு படுத்த வேண்டும். அதாவது நான் மேலே குறிப்பிட்ட பல தளப்பார்வை கொண்ட கலை இலக்கிய விமர்சனப்பார்வை தமிழ்நாட்டில் ஏற்படவில்லை, முதன்முதலில் ஈழத்தில் தான் ஏற்பட்டது என்பதே அது. இது பற்றி மு.தளையசிங்கம் குறிப்பிடுகையில் 'அல்பிரட் காஸின் என்ற அமெரிக்க விமர்சகர் ஃபோக்னர், எமிங்வே கால இலக்கியங்களைப் பற்றிக் கூறும்போது, ஆண்மையையும், வீரத்தையும் எதிர்பார்க்கும் ஒரு விரகதாபமுள்ள பெண்ணைப்போல் ஐரோப்பாவும் இனி அமெரிக்காவை நோக்கித்தான் புதியவீரமும் ஆண்மையுமுள்ள இலக்கியத்துக்காக ஏங்கிக்கிடக்கும் என்று உவமித்தார்" என்று கூறுகிறார். இக்கூற்று இக்கால ஈழத்து ஆக்க இலக்கியத்துக்குப் பொருந்துவது சந்தேகத்துக்குரியதாக இருந்தாலும் விமர்சன ரீதியாக முற்றும் பொருத்தமான கூற்றாகவே நிற்கிறது எனலாம். 1960ல் இருந்து 1970 வரையிலான பத்தாண்டு காலப்பகுதியே இத்தகைய வேகத்தையும் பார்வை வீச்சையும் விமர்சனத்துறையில் ஏற்படுத்தியதாக நிற்கிறது.

இது ஒரு சொற்பகாலப் பகுதியெனினும் இக்கால இலக்கிய விமர்சனம் காட்டிய வீச்சும் பார்வை விரிப்பும் பிரமிக்கத் தக்கதாக இருந்தது மட்டுமல்ல, ஒரு பெரும் சுற்று வட்டமொன்றையே போட்டு உலக இலக்கியப் போக்குகள் பலவற்றை ஆய்வு செய்தும் அவற்றைக் கேள்விக்குள்ளாக்கியும் அவற்றுக்கும் அப்பால் போகும் ஆற்றல்களைக் காட்டுவதாகவும் அமைந்தது. மிகுந்த சொற்ப காலப் பகுதி. ஆனால் சாதனை அளப்பரியது. தொழிற்புரட்சி மூலம் நீண்ட 250 வருடகாலப் பகுதியில் மேற்குலகு ஏற்படுத்திய அபிவிருத்தியை, ஸ்ரலின் கால ரஷ்ஷியா திட்டமிடல் பொருளாதாரத்தின் மூலம் 50 வருடங்களில் நிறைவேற்றி நிமிர்ந்ததை ஒத்த செயல் இது. ஆனால் இதே காலத்தில் ஸ்ரலின் கால ரஷ்யாவில் மனிதத்தின் விடுதலை முகங்கள் வெளிப்படும் சாதனங்களான பேச்சும் எழுத்தும் அதனோடு சம்பந்தப்பட்ட கலை இலக்கிய சாதனங்கள் அனைத்தும் அடக்கி ஒடுக்கி நலமெடுக்கப்பட்டன. சர்வாதிகாரத்தின் உச்ச வெளிக்காட்டல் அங்கு நிலவிற்று. மனிதம் மூச்சுவிட முடியாது திணறிற்று. ஆனால் இங்கே ஈழத்தில், அதே ஸ்ரலின் கால ரஷ்ஷியாவின் அனுதாபிகளாய் இருந்த நமது 'முற்போக்கு எழுத்தாளர்" என்போரால் கடைப்பிடிக்கப்பட்டுவந்த ஒரு பாரிய இலக்கியச் சர்வாதிகாரம் அறுபதுகளின் ஆரம்பத்தில் முறியடிக்கப்படத் தொடங்கிற்று. இலக்கிய விடுதலை முகங்காட்டலின் கீற்றுக்கள் தெரிய ஆரம்பித்தன.

> கலை இலக்கிய உலகிலும் இது அடிப்படையான உருவ உள்ளடக்க மாற்றங்களைக் கொண்டுவரக் கூடியதாகவும் அந்த மாற்றங்கள் அதைச் சிருஷ்டிப்போரிலும் அதை நுகர்வோரிலும் ஏற்படுத்தக் கூடியனவாகவும் இருக்குமென அவர் நம்புகிறார்.
> அத்தகைய கலை இலக்கியப் படைப்புக்களை, 'மெய்யுள்" என்று புதுப்பெயரிட்டழைக்கிறார்.

அறுபதுகளில் இருந்து பாயத் தொடங்கிய இவ்விலக்கிய விமர்சன வீச்சுக்கு முகம் கொடுக்க முடியாமல் முற்போக்கு இலக்கியச் சர்வாதிகாரம் வீழ்ந்ததென்பதும் பின்னர் சிதைந்ததென்பதும் இக்காலத்தில் நிகழ்ந்த விமர்சனப் போக்கின் ஒரு சிறு அம்சமே. ஒரு சிறு விளைவே. ஆனால் அறுபதுகளில் ஆரம்பித்து, எழுபதுவரை பிரவகித்த இவ்விலக்கிய விமர்சனப் போக்கின் நோக்கம் பரந்த இலக்கிய நோக்குடையதாக இருந்தது. பலபக்கத்தள விரிவுடையதாக இருந்தது. அத்தோடு எல்லாப் பக்கங்களும் விடுதலை முகமுடையவையாய் இருந்தன. ஆனால் இவையனைத்தும் ஈற்றில் ஒன்றிணைந்து ஒரு பரந்த கோட்பாட்டின் வரவை கோடி காட்டுபவையாய் இருந்தன என்பதே இதன் முக்கியமான அம்சமாகும். இப்பின்னணியில் இவ்விமர்சனப் போக்கு முன் வைத்த முக்கிய கேள்வி இதுதான்:

இன்றைய கலை இலக்கியம் மனிதனுக்குத் தடையா? விடுதலையா?

இக்கேள்வி ஈழத்து இலக்கிய உலகில்தான் ஒலித்தது.

ஈழத்து தமிழ் இலக்கிய உலகில் இது ஒலித்தபோதும் எல்லாத் தேசத்தவர்க்கும் உரியதாகவும் அவர்களின் புரட்சிக்குரலாகவுமே ஒலித்தது. இதற்குக் காரணமாய் இருந்தவர் யார் என்பதே எமது அடுத்த கேள்வியாகும்.

இக்கேள்விக்குரிய பதில்காணல், தவிர்க்க முடியாத வகையில் இக்காலத்தில் விமர்சகர்களாக விளங்கிய க.நா.சு, சி.சு.செ, க.கைலாசபதி, கா.சிவத்தம்பி, மு.தளையசிங்கம் போன்றவர்கள் மேல் எமது பார்வையைச் செலுத்த வைக்கிறது. மேலும், ஏ.ஜே.கனகரத்தினா, எஸ்.பொன்னுத்துரை, வானமாமலை, வெங்கட் சாமிநாதன், தர்மு சிவராமு, கனக.செந்திநாதன், கே.எஸ்.சிவகுமாரன் போன்றவர்களும் இக்காலத்து தமிழ் இலக்கிய விமர்சனத்திற்கு பங்களிப்புச் செய்திருக்கிறார்கள் என்பது மறுப்பதற்கில்லை. ஆனால் எனது விமர்சன நோக்கு வெளிக்கொணரவிருக்கும் கோட்பாட்டு ரீதியான கருத்துருவாக்கத்துக்கு நான் மேலே குறிப்பிட்ட விமர்சகர்களே போதுமானவர்களாக இருப்பதோடு இவர்கள் பற்றிய ஆய்வில், என்னால் விடுபட்டு நிற்பார்களும் தமக்குரிய இடங்களைக் காணக் கூடிய வாய்ப்பேற்படும் என்றும் நம்புகிறேன்.




க.நா.சு, சி.சு.செ போன்றவர்களை ஓர் அணியாகவும் கைலாசபதி, கா.சிவத்தம்பி போன்றவர்களை இன்னோர் அணியாகவும் கொண்டால் மிஞ்சுபவர் மு.தளையசிங்கமே. அதாவது மு.தளையசிங்கம் மூன்றாம் அணியாக நிற்கிறார். இன்றைய நவீன இயங்கியல் பாஷையில் சொல்வதானால் முதலாம் அணி Thesis ஆகவும் இரண்டாம் அணி Antithesis ஆகவும் நின்றால் மு.தளையசிங்கம் இவ்விரு போக்குகளின் Synthesis (இணைப்பாக) ஆகவும் அதைக் கடப்பவராகவும் நிற்கிறார்!

மூன்றாம் பக்கத்துக்குரியவரான மு.தளையசிங்கத்திடமிருந்து தான் நான் ஏற்கனவே குறிப்பிட்ட கேள்வி எழுந்தது. அதாவது நமது கலை இலக்கியங்கள் மனிதனுக்குத் தடையா விடுதலையா என்னும் கேள்வி. இக்கேள்வியை நோக்கியே அவரது விமர்சன ஆய்வுகள் அவரை இட்டுச் சென்று, இறுதியில் இவற்றுக்கு விடை காணும் கோட்பாடுகளாகவே நிறைவெய்துகின்றன. அறுபதுகளிலிருந்து எழுபதுவரை பிரவகித்த மு.த.வின் இலக்கிய விமர்சனம் இதன் சாதனையாகவே நிற்கின்றது. அவரின் ஆய்வின் முடிவு இன்றைய கலை இலக்கியங்கள் என்பவை மனிதனை அகரீதியான பண்படுத்தலுக்கும் பரவசத்துக்கும் இட்டுச்செல்லும் ஆற்றல் அற்றவையாக இருக்கின்ற அதே நேரத்தில் அப்படி ஒரு ஆற்றல் உள்ளவை போன்ற போலித் தோற்றத்தைத் தரும் பெரும் மாயையாகவும் இருப்பதால் அவை அவன் வளர்ச்சியைத் தடுத்து விடுதலையைக் கடத்திப் போடுகின்றன என்பதே. இதற்குப் பரிகாரமாக அவர் தன்னைத்தான் வழிப்படுத்திய கோட்பாட்டு ரீதியாக முன்வைக்கும் கருத்துக்களே 'கலையை அழிக்கும் கலை! இலக்கியத்தை அழிக்கும் இலக்கியம்!"

அதாவது இன்று மனிதனால் கலை என்றும் இலக்கியம் என்றும் கொண்டாடப்படுபவை, இன்றைய அவன் தேவைகளின் அடிப்படை

45ம் பக்கம் பார்க்க...

# ஆத்மார்த்தமான ஓர் பிரபஞ்ச தரிசனத்தைத் தேடியவர் மு.தளையசிங்கம்




**- என்.கே. மகாலிங்கம் -**

நூறு ஆண்டுகள் வாழ்ந்தவர்களிலும் பார்க்க 37 ஆண்டுகளே இவ்வுலகில் வாழ்ந்த மு.தளையசிங்கம் அதிகம் பேசப்படக்கூடிய விடயங்களைச் செய்துவிட்டுச் சென்றிருக்கிறார். எத்தனை ஆண்டுகள் வாழ்ந்தார் என்பதல்ல முக்கியம். எதைச் செய்தார் என்பதே முக்கியம். அவர் வாழ்ந்ததால் சிந்தனையும், அறிவும், மனித விழுமியங்களும் மேம்பாடு அடைந்திருக்கின்றனவா என்பவற்றைக் கொண்டே அவர் வாழ்ந்தாரா என்பதைக் காண வேண்டும். அவரின் வாழ்க்கை, சிந்தனைகள், செயல்கள், எழுத்துக்கள் மனித நாகரீகத்திற்கு உதவி இருக்கின்றனவா என்பதேயே பார்க்க வேண்டும்.

மு.த.வாழ்ந்ததுக்கான அடையாளங்கள் அவரின் எழுத்துக்கள் மட்டுமல்ல. அவரின் செயற்பாடுகளும் அடங்கும். அத்துடன், அவருடன் பழகியவர்கள், அவரின் மாணவர்கள், உறவினர்கள், ஊர் மக்கள் அனைவரின் மனதிலும் இன்னும் அழியாத, அன்பான உருவமாக இருக்கிறார் என்பதும் அடையாளங்களே.

அவர் புங்குடுதீவிலே படிப்பித்தது ஒரு ஐந்து வருடங்களே. அங்கு வாழ்ந்ததும் அப்பொழுது தான். (அதற்கு முன் இரத்தினபுரியில் வாழ்ந்தவர்) சமூக சேவையில் ஈடுபட்டதும் அப்பொழுதுதான். அந்தக் குறுகிய காலத்தில் அத்தனை கவர்ச்சி உடையவராக, சக்தியாக, நிறுவனமாக எப்படி வந்தார் என்பதற்கு அது ஒரு சிறிய கிராமம் என்பதோ, அங்குள்ள மகா வித்தியாலத்தில் சிறந்த, எவரும் விரும்பும் ஆசிரியராக இருந்தார் என்பதோ மட்டுமல்ல காரணங்கள். உண்மை, நேர்மை, தன்னலமற்ற செயல்கள், ஈடுபாடுகள், அவருக்கு அந்த வசீகர ஆளுமையைக் கொடுத்திருக்கின்றன.

தீவிரம், சிந்தனை, வேகம், எட்டிப் பிடித்து அடைந்துவிட வேண்டும் என்ற அவசரம், விறுவிறுப்பு, துடிப்பு, விவேகம், கூர்மையான சோம்பலற்ற அறிவு, தேடல், எதையோ அவசரமாக எடுக்கப் போகும் அவதி, அதைத் தன்னால் பிடித்து விட முடியும் என்ற அபாரமான தன்னம்பிக்கை, அதற்காக எதையும் துறப்பதற்குத் தயங்காத மனம், ஆபத்துக்களை, விளைவுகளை கணக்கில் எடுக்காத பொறுப்பின்மை (ஆபத்துக்களைப் பற்றிய கவலையின்மை, தன்னம்பிக்கையின் பாற்பட்டதாக இருக்கலாம்), எதையும் தன் அறிவால், நம்பிக்கையால், நேர்மையால், தன்னலமின்மையால் வென்று விடலாம் என்ற ஓர் ஒப்பற்ற எண்ணம். பொருள், பணம், உறவுகள், தொழில், பாசம் என்பன தடைகள் என்ற குணம். அது ஒரு புரட்சிவாதியின் உண்மையான குணாம்சம். துறவியாகப் போகக் கூடிய மனோபாவம்.

நீற்சே ஆபத்தாக வாழ் (live dangerously) என்று கூறினாரே அதுபோல வாழ்ந்தவர் மு.த. பணம், பொருள், நிலம், சொத்து எவற்றையும் எதுவித கவலையும் இன்றி, பின் விளைவுகள் பற்றிய அச்சமும் இன்றி, மனைவி, மக்கள் நிலை என்னவாகும் என்ற சாதாரண குடும்பஸ்தனின் பொறுப்பின்றி, அள்ளித் தானமாகக் கொடுக்கக்கூடிய, கொடுத்த, அசாதாரணமான, அதிசயமான குணாம்சம் கொண்டவர். உடல் உபாதைகளைக் கூட, (இடைக்கிடை துன்புறுத்தும் ஆஸ்துமாவை) தடையாக எண்ணாமல் தன் ஞானத்துக்கு ஏற்பட்ட சோதனை, அவற்றையும் கடக்க வேண்டும் என்று அடிக்கடி கூறியவர், செயற்பட்டவர். அக்காலத்தும் கூட, தியானம், எழுத்து போன்றவற்றில் அதிகம் ஈடுபாடு காட்டியவர். ஞானத்துக்கு எவை எவை தடையாக இருக்கின்றனவோ அவற்றைத் துறக்க வேண்டும் என்று அடிக்கடி கூறியவர். சுய உணர்வுடன் ஞானத்தைத் தேடியவர்.

'இலக்கியம் என்னில் வளர்த்த துறவு, இலக்கியத்தையே துறக்குமளவுக்கு வந்து விடும் என்பதை இப்போது உணர்கிறேன்' என்றார். 'சாதாரண மனிதன் எதை எதை பெரிதாக நினைத்து ஈடுபடுகிறானோ அவற்றிலெல்லாம் ஈடுபடாது, விடுபட்டு, வெளியே நின்று வேடிக்கை பார்த்துச் சிரிக்கும் பிறத்தியான் போக்கை என்னில் இலக்கியப் பற்று வளர்த்திருக்கிறது' என்றார்.

சாதாரண மனிதன் என்று அவர் கூறியது உலகாயுதத்தில் நம்பிக்கை வைத்தவர்களை. அவர்களின் உலகியல் ஆசைகளை. அவற்றிலிருந்து விடுபட்டு, அல்பர்ட் கமூவின் 'பிறத்தியான்' போக்கு இலக்கியவாதிகளுக்கு இருக்க வேண்டிய தகைமைகளில் ஒன்று, வேற்றானாக நின்று வேடிக்கை பார்க்கும் பண்பு அது. அது அவரிடம் நிறையவே இருந்தது. அதாவது, கூர்ந்து அவதானிக்கும் பண்பு. மூன்றாமவராக நிற்றல் இலக்கியத்தால் வந்தது என்கிறார். அது அவருக்கு மேற்கத்தைய இலக்கியப் பரிச்சியத்தால் இளமையிலேயே வந்து விட்டது. அந்த வளர்ச்சியின் பயன்தான் அவரின் துறவு அல்லது ஏற்கனவே இருந்த துறவு மனப்பான்மையை அது கண்டுபிடித்தது என்கிறார். தியானம் என்பதும் ஆழச் சிந்தித்தல் தானே.

> “ இலக்கியவாதி கதை, கவிதை, நாவல், கட்டுரை எழுதுபவன் என்று தன்னைக் குறுக்கிக் கொள்ளாமல் சமூக, பொருளாதார, அரசியல், ஆத்மீக தளங்கள் அனைத்திலும் மாற்றம் கொண்டுவர உழைக்க வேண்டும். சத்தியத்தை உள்நுழைக்க வேண்டும். சத்தியதரிசனமற்றவன் எல்லாத் துறைகளிலும் தன் ஆணவத்தையே வெளிக்காட்டவே முனைவான் என்றார். ”

தைரியம் அவரின் உடன்பிறப்பு. மிக மெலிந்த உருவம். அதற்குள் இருந்த வீரம், அறிவு, தன்னம்பிக்கை அதிசயப்படக் கூடியவை. 1971 ஆண்டாக இருக்க வேண்டும். ஊர்காவற்றுறை பொலிஸ் இன்ஸ்பெக்ரர் சி... க்கு முன்னால் நிற்கிறார். சமூகப் பிரச்சினையில் இவரையும் இன்னும் சில இளைஞர்களையும் (நான் உட்பட) இன்ஸ்பெக்ரர் அழைத்துச் சென்றிருந்தார். இன்ஸ்பெக்ரர் கேட்ட கேள்விகளுக்கு இவர் கையை மேசையில் ஊன்றிக் கொண்டு பதில் சொல்கிறார். இன்ஸ்பெக்ரர் தன் நாட்டண்மையைக் காட்டுவதற்கு மேசையிலிருந்து கையை எடுத்து, நிமிர்ந்து நிற்கும்படி இவரை ஆங்கிலத்தில் அதட்டுகிறார். 'நான் எப்படி நிற்க வேண்டும் என்பதை நீர் எனக்குச் சொல்லித் தர வேண்டிய அவசியமில்லை' என்று ஆங்கிலத்திலேயே பதிலளிக்கிறார், இவர்.

அதே இன்ஸ்பெக்ரரைத்தான் புங்குடுதீவு கண்ணகை அம்மன் கோவில் நிர்வாகிகளும் பஞ்சாயத்தினரும் (1971) லஞ்சம் கொடுத்து விடுதலையில் அனுப்பி விட்டு, வேறு பொலிஸ்காரரைக் கொண்டு தளையசிங்கத்தையும் அவரின் மாணவரான கவிஞர் சு.வில்வரத்தினத்தையும் இரவு காளி கோவிலில் அமைதியாகத் தியானத்தில் இருந்து சத்தியாக்கிரகம் செய்து கொண்டிருக்கையில் (தாழ்த்தப்பட்டவர்களைக் கோவில் கிணற்றில் தண்ணீர் அள்ள விட வேண்டும், கோயிலுக்குள் வழிபடவிட வேண்டும் என்று கோரி) நையப் புடைத்து அப்போது அமுலில் இருந்த அவசரகாலச் சட்டத்தின் கீழ், (சேகுவேராப் புரட்சி முடிந்த காலம்) அவர்களைக் கைது செய்து யாழ்ப்பாணம் கோட்டையில் சிறையில் அடைத்தனர். அவர்கள் சிறையில் இருந்த நாட்களில் ஜே.வி.பி. தலைவர் றோகண விஜேவீரவும், தமிழ் ஈழப் போராளி சிவகுமாரனும் அதே கோட்டைச் சிறையில் இருந்தார்கள். வேடிக்கை என்னவென்றால் கோயில் நிர்வாகத்தில் இருந்தவர்கள் அனைவரும் மு.த., சு.வி யின் உறவினர்கள். உறவுகளுக்கு அப்பாற்பட்ட பணச் செருக்கும் அதிகாரமும் ஆணவமும், கோயிலும் கடவுளும் தங்கள் தனியுடைமை என்ற மன அபக்குவமும் தான் அவர்களிடம் காணப்பட்ட குணங்கள்.

விவேகாநந்தர், அரவிந்தர் போன்ற தீவிரவாதிகள் தான் உண்மையான துறவிகளாகவும் முடியும். காந்தியைப் போன்ற சத்தியத்தை மூர்க்கத்தனமாக நம்பிய பிடிவாதக்கார மனிதரால் தான் இந்திய சுதந்திரத்திற்காக சாத்வீக முறையில் போராடவும் முடியும். தன்னை இழக்கத் தயாரான ஒருவரால்தான் சத்தியத்தை, ஞானத்தைத் தரிசிக்கவும் முடியும். உலகத்தையே வெல்லக் கூடிய பயமற்ற பலமும் வரும். உண்மையான பொதுவுடைமைவாதி உலகாயுத வாழ்வையும் துறக்கத் தயாராக இருக்க வேண்டும் என்றார், மு.த. அதுதான் உண்மையையும் பேரறிவையும் பலமாகக் கொண்டு, எந்தச் சர்வாதிகாரமுமின்றி -கட்சிச் சர்வாதிகாரமோ,

45ம் பக்கம் பார்க்க...

# ஆத்மார்த்தமான ஓர்...

44ம் பக்கத் தொடர்ச்சி...

தொழிலாளர் சர்வாதிகாரமோ- உலகத்தை உண்மையாக உயர்த்த உதவும் என்றார். அங்குதான் சமதர்மம் நிலைக்கும், சத்திய யுகம் வரும், கூட்டு முக்தி அனைவருக்கும் கிடைக்கும் என்றார்.

இலக்கியவாதி கதை, கவிதை, நாவல்,

> "இவருடன் உரையாடத் தொடங்கிய சிறிது நேரத்திலேயே அவருடைய வசீகரத் தன்மையால் எவரும் கவரப்பட்டு விடுவர். பெரியவர்களாயினும் சரி, சிறியவர்களாயினும் சரி. அவருடைய மாணவர்கள் அவரால் கவரப்பட்டது ஆச்சரியப்படுவதற்கில்லை. மாணவர்களை அன்பால் அணைத்தவர். தட்டிக் கொடுத்து ஊக்குவித்தவர்."

கட்டுரை எழுதுபவன் என்று தன்னைக் குறுக்கிக் கொள்ளாமல் சமூக, பொருளாதார, அரசியல், ஆத்மீக தளங்கள் அனைத்திலும் மாற்றம் கொண்டுவர உழைக்க வேண்டும். சத்தியத்தை உள்நுழைக்க வேண்டும். சத்திய தரிசனமற்றவன் எல்லாத் துறைகளிலும் தன் ஆணவத்தையே வெளிக்காட்டவே முனைவான் என்றார்.

மெய்யுள் என்னும் பிரபஞ்ச யதார்த்தத்தில் இந்தப் போலிப் பிரிவுகள் இருக்க மாட்டா என்றார். சத்தியத்தை உள்ளடக்கமாகக் கொண்ட அது அதற்குரிய உருவத்தையும் எடுத்துக் கொள்ளும் என்றார். பொதுவாக அதை மெய்யுள் என்றே அழைத்தார்.

தன் சிந்தனையும் தரிசனமும் அனைவருக்கும் புரியும் என்று காலத்தையும் கடந்து சிந்தித்த ஒரு தமிழ் இலக்கியவாதி ஒருவர் மு.த.வாகத்தான் இருப்பார். இலக்கியப் பிரிவுகளைக் கடந்து சிந்தித்தவர். செயல்படத் துடித்தவர். அந்த ஆத்மாவைப் புரிந்து கொள்வதற்கு, அவரைப் போலப் பெரும் கனவு கண்டவர்களைப் புரிந்து கொள்வதற்கு, நாமும் பெரும் கனவுகளும் இலட்சியங்களும் கொண்டவர்களாக இருக்க வேண்டும்.

மனைவி, மக்கள், உறவினர், வீடு, மொழி, சமயம், நாடு, பணம், உடல், நோய், என்று சிறு சிறு வட்டங்களுக்குள் உறங்கிச் சுற்றிச் சுற்றி வரும் எமக்கு அவற்றை எல்லாம் கடந்து வாழ வேண்டும், மக்கள் அனைவரும் விமோசனம் பெற வேண்டும் என்று துடித்த ஓர் ஆத்மாவைப் புரிந்து கொள்வது கற்பனைக்கு அப்பாற்பட்டதுதான். அந்தக் கற்பனை, கனவு தோல்வியடைந்தாலும் அந்தப் பெரும் கனவைக் காண்பதற்கே பெரு மனமும், பேர் ஆத்மாவும் தேவை.

முதலில் ஒரு பேர் மனித இனம் தோன்றும் என்று அரவிந்தர் கூறினார். பேர் மனித இனத்தில் முதலாது பேர் மனிதனாக மு.த. தன்னையும் தன்னுடன் செயற் பட்டவர்களையும் நினைத்தார் என எண்ண இடமுண்டு. சமூகத்தில் ஞானிகளுக்கு அடுத்தபடியாகத் தயார் படுத்தக் கூடியவர்கள் கலைஞர்கள், சிந்தனையாளர்கள், எழுத்தாளர் போன்றோர் என்றார் மு.த. பேர் மனித இனம் தோன்றுவதற்கு இவர்களிடம் அடையாளங்களும் சமிக்ஞைகளும் இருக்கின்றன என்று நம்பினார்.

பரவலாக மனித குலம் முழுவதும் பேரறிவுக்குள்இறங்கும் சத்திய யுகமல்லவா இனி வரப் போகிறது என்று பெருங் கனவுகண்டார் மு.த.

'புதுயுகம் ஞான அலையின் அறிகுறிகள் மெல்லிய அடிமன உந்தலாகவே சர்வதேச கலை இலக்கிய தத்துவ பரப்பெல்லாம் சிதறிக் கிடக்கின்றன' என எழுதினார். என்னே நம்பிக்கை!

'மேதா விலாசத்துக்கும் அற்பாயுளுக்கும் அப்படி என்னதான் நமக்கு எட்டாதபடி ரகசிய உறவோ? அந்தவரிசையில் தமிழிலும் பாரதி, புதுமைப்பித்தன், கு.ப. ராஜகோபாலன், கு.அழகிரிசாமி, மு.தளையசிங்கம் என்று எத்தனை இழப்புக்கள்' என்ற படுமுடிச்சை அவிழ்க்க முடியாமல் அவஸ்தைப்படுவது சுந்தர ராமசாமி மட்டுமல்ல நாங்களும் தான். (ஜே.ஜே. சில குறிப்புக்கள் -நாவல்) அந்த மேதா விலாசத்தை அறிய விரும்புவது இயல்புதானே? மு.த. இளமையில் காலமானது ஈழத்துக்கும், தமிழுக்கும் சிந்தனைக்கும் பெரும் இழப்பு.

தமிழ் இலக்கியப் படைப்பாளியாக ஆரம்பித்து, தீவிர விமர்சகராக முகிழ்த்து, பிரபஞ்ச தரிசனத்தைத் தேடிய ஒரு சிந்தனையாளனாக வாழ்ந்தவர், மு.த. அவரின் முழுப் படைப்புக்களும் 2007 இல் 'மு.தளையசிங்கம் படைப்புக்கள்' என வெளியாகி உள்ளது. ஏறக்குறைய 1100 பக்கங்கள்.

■ ■ ■

# மு.தவும் இன்றைய போக்கு...

43ம் பக்கத் தொடர்ச்சி...

யில் வைத்துப் பார்க்கும்போது, அவன் அகத்தை பண்படுத்தி அவனை உயர்நிலைக்கு இட்டுச் செல்லும் ஆற்றல் கொண்டவை யல்ல. மாறாக அவனை அப்படி உயர் நிலைப்படுத்துபவையாக நினைக்க வைக்கும் மாயைக்குள் வீழ்த்துகின்றன. இதுதான் மு.தவின் கருத்து. ஆகவே அவை அழிக்கப் பட வேண்டும். ஆனால் இவற்றை எப்படி அழிப்பது? இவற்றை அழிக்கவேண்டுமானால் மனிதனை அவன் அவாவிற்கும் இலட்சியத்துக்கேற்ப, விடுதலைக்கேற்ப வாழப்பணிக்கும் புதுக்கலை இலக்கியவகை உருவாக்கப்பட வேண்டும். அத்தகைய, மனிதன் தான் சொல்வது போலவும், எழுதுவது போலவும் வாழவும் தூண்டும் புதுக் கலை, இலக்கியவகையே இன்றுள்ள - சொல்வதுபோல் வாழப்பணிக்காத, உண்மை போன்ற போலி நிழல் விடுத்தும் - போலி கலை இலக்கியங்களை அழி அழிக்கும் கலையாகவும் இலக்கியமாகவும் இனிவரப் போகின்றன. இவையே கலையை அழிக்கும் கலை! இலக்கியத்தை அழிக்கும் இலக்கியம்! இதுதான் மு.தவின் கருத்து. இதை நவீன கலாசாரப் புரட்சியாகக் காணும் அவர், அவற்றை நோக்கி ஆற்றுப்படுத்தும் கலைஞர்களையும் எழுத்தாளர்களையும் நவீன சத்தியச் செங்காவலர் என்றழைக்கின்றார்.

இக்கருத்தையும் அதற்குப் பக்கபலமாகத் தான் வைத்த கோட்பாட்டையும் மு.த. 25 வருடங்களுக்கு முன்னர் ஈழத்து இலக்கிய உலகில் முன்வைத்தபோது, அதை யாரும் விளங்கிக் கொள்ளவோ நேர்மையான ஆய்வுக்குட்படுத்தவோ முயன்றதில்லை. மாறாக 'இவை பிற்போக்கு முதலாளித் துவக் கருத்துக்கள்! அமெரிக்க C.I.A சிந்தனை" என கைலாசபதி, சிவசேகரம் போன்றவர்களால் ஒரேயடியாக நிராகரிக்கப் பட்டன. ஆனால் காலந்தான் பொய்யையும் மெய்யையும் உரசிப்பார்க்கும் நேர்மையின் உரைகல். அதனால் இன்று மு.த முன் வைத்த கருத்துக்கள் பரவலான விழிப்பை ஏற்படுத்தியுள்ளதோடு, இன்றைய நவீன கலை, இலக்கிய, தத்துவ கோட்பாடுகளோடு ஒத்தும், அவற்றின் போதாத்தன்மைகளை பூரணப்படுத்தியும் அவற்றுக்குமப்பால் போக விழைவனவாகவும் உள்ளன.

அப்படியானால் மு.த.வை இத்தகைய ஒரு கோட்பாட்டை நோக்கி தனது இலக்கிய விமர்சனத்தை வளர்த்துச் செல்லக் காரணமாய் இருந்த காரணிகள் என்ன? அவர் எப்படி இந்த முடிவுகளுக்கு வருகிறார் என்பவையே எமது அடுத்த கட்டப்பார்வையாகும். இதற்கு முக்கியமாகப் பின்வருவனவற்றை சுருக்கமாக காட்டலாம்.

- இன்று நடைமுறையிலுள்ள மரபுரீதியான மார்க்சீயப் பார்வை.
- இன்றுள்ள கருத்தமுதல் கோட்பாடுகள்
- இவை முன்வைக்கும் நடைமுறையிலுள்ள யதார்த்த சமுகயதார்த்த இலக்கியக் கோட்பாடுகள்.
- இவற்றால் இவற்றை எழுதுவோரிடத்தும் அவற்றைப் படிப்போரிடத்தும் மாற்றங்கள், ஏற்பட்டுள்ளனவா என்ற கேள்விகள்.

இக்கேள்விகள் மூலம் அவர் வந்தடையும் கருத்துக்கள் பின்வருமாறு அமைகின்றன.

- மார்க்சீயம் அடிப்படையான மாற்றத்தக் கொண்டுவரும் தத்துவமாக இருந்திருந்தால் அது அடிப்படையான உருவ உள்ளடக்க மாற்றத்தை கலை இலக்கியத்திலும் கொண்டு வந்திருக்க வேண்டும். ஆனால் அது அப்படி எதையும் செய்ய வில்லை. மாறாக அது கலை இலக்கியத்தில் கடைப்பிடித்த 'சமூக யதார்த்தக்" கோட்பாடு ஏற்கனவே ஐரோப்பிய அறிவு வாதம் முன்வைத்த யதார்த்த வாதத்தின் ஒரு திரிபும் எச்சமுமே.
- இன்று நடைமுறையிலுள்ள கருத்து முதல் கோட்பாடுகள் மரபு வழிவந்த காலங் கடந்த ஆசாரங்களையும் சடங்குகளையும் தூக்கிப்பிடிக்கின்றன. இவற்றின் போர்வையில், அழிக்கப்பட வேண்டிய முதலாளித்துவப் போக்குக்குச் சேவகம் செய்கின்றன. இத்தகைய கூட்டுமொத்த சுயநலத்தைப் பேணி வளர்க்கும் கருவிகளாகவே இன்று கலை இலக்கியங்கள் உள்ளன.
- இன்றுள்ள கருத்து முதல் கோட்பாடுகளின் சிறந்த கண்டுபிடிப்பாக இருப்பது, மேற்குலகின் 'இருந்தலியல்" கோட்பாடே. 'புலன் உணர்வுக் கொள்கை" பொஸிற்றிவிஸம் போன்ற மேற்குலக விஞ்ஞான தத்துவ மரபிலிருந்து, அவற்றை மீறியெழுந்த மேற்குலகின் சிறந்த தத்துவக் கோட்பாடாய் இதைக் கொள்ளலாம். ஆனால் மனித இருப்பின் ஆழத்தை அறியாது, இடைத்தரிப்பை இருப்பெனக் கொள்வதால் இது பூரணமடையாத ஒன்று.

இவற்றுக்கெல்லாம் பதிலாக மு.த.முன்வைப்பது மெய்முதல்வாதம் என்னும் கோட்பாடாகும். இது இன்றைய உலகில் அடிப்படை மாற்றத்தைக் கொண்டுவரக் கூடியதாகவும் அதனால் இருத்தலியல் போக்கின் பூரண வளர்ச்சியாகவும் நிற்கிறது என்கிறார் மு.த.. அதனால் கலை இலக்கிய உலகிலும் இது அடிப்படையான உருவ உள்ளடக்கமாற்றங்களைக் கொண்டுவரக் கூடியதாகவும் அந்த மாற்றங்கள் அதைச் சிருஷ்டிப்போரிலும் அதை நுகர்வோரிலும் ஏற்படுத்தக் கூடியனவாகவும் இருக்குமென அவர் நம்புகிறார். அத்தகைய கலை இலக்கியப் படைப்புக்களை, 'மெய்யுள்" என்று புதுப்பெயரிட்டழைக்கிறார். இந்த 'மெய்யுள்" வார்ப்புகளையே அவர் கலையை அழிக்கும் கலையாகவும் இலக்கியத்தை அழிக்கும் இலக்கியமாகவும் பிரகடனப்படுத்துகிறார். இதற்கு உதாரணமாக அவரது 'மெய்யுள்" நூலில் இடம் பெறும் 'கலைஞனின் தாகம்", 'அண்டை வீடுகள்" போர்ப்பறையில் இடம் பெறும் பல 'கட்டுரை" 'கதை" 'கவிதை"களையும் நாம் கொள்ளலாம். இவற்றைப் படிக்கும்போது, விமர்சனமாகவும், உளவியல் ஆய்வாகவும், தத்துவமாகவும், கலையாகவும் பன்முக அர்த்தமுடையவையாய் இருப்பது தெரிய வரும்.

இத்தகைய முடிவுகளுக்கு அவரைப் படிப் படியாக கொண்டுவருவதற்கு உந்து சக்தியாக இருந்த போக்குகள் நமது கலை இலக்கிய உலகில் பரவலாகச் செறிந்து கிடந்தன. இவை பற்றிய ஆய்வுக்கு நாம் மீண்டும் மு.த.வின் சமகால இலக்கிய விமர்சகர்கள், சிருஷ்டியாளர்கள் பக்கம் திரும்ப வேண்டும்.

■ ■ ■

# புவி வெப்பமடைதலும்...

53ம் பக்கத் தொடர்ச்சி...

நடைகளின் அளவு அதிகரிப்பதற்கேற்ப வளிமண்டலததில் மீதேன் வாயுவின் அளவும் அதிகரிக்கின்றது.

குப்பைகள் அழுகும்போதும் விறகும் ஏனைய தாவரங்கள் எரியும்போதும் மீதேன் வெளி விடப்படுகின்றது. வாயுக்குழாய்கள், நிலக் கரிச் சுரங்கங்கள், ஏனைய தரைக்கீழ் மூலாதாரங்களில் இருந்து மீதேன் கசிவு ஏற்படுகின்றது. புவி வெப்பமடையும்போது வடக்கேயுள்ள தண்டராக் காடுகளில் (Tundra) அடைபட்டுள்ள அதிகளவிலான மீதேன் வெளிவிடப்பட்டு வளிமண்டலத்தை அடைவதால் பச்சை வீட்டு விளைவு மேலும் அதிகரிக்கும்.

வளிமண்டலத்திற்கு வெளிவிடப்படும் மீதேனின் அளவை மதிப்பிடுவது கடினமாகும். 1978ல் ஆரம்பித்த வளிமண்டல அவதானிப்புகளு டன் பனிக்கட்டி உட்பகுதிகளில் மேற்கொள் ளப்பட்ட ஆய்வுகள் கடந்த 200வருடங்க ளில் 0.65ppm இலிருந்து 1.7ppm ஆக மீதேன் அதிகரித்துள்ளபோதிலும் கடந்த தசாப்தத்தில் 5%தால் குறைவடைந்தது அவதானிக்கப்பட்டுள்ளது.

இயற்கையாக தோன்றுவதாகவும் மனித நடவடிக்கைகளால் ஏற்படுவதாகவும் உள்ள இன்னோர் பச்சை வீட்டு வாயு நைதரசன் ஒட்சைட் ஆகும் (N2O). இது பற்சிகிச்சைக் கான மயக்க மருந்தாகப் பயன்படுத்தப்பட் டது. இது மெலிதாக போதையூட்டுவதாக இருப்பதால் ‘சிரிப்பூட்டும் வாயு’ எனவும் அழைக்கப்படுகின்றது. இவ்வாயுவானது பிரதானமாக எரிபொருட்கள் எரிதல், நிலம் பயிர்ச்செய்கைக்காக பண்படுத்தப்படல், நைதரசன் பசளைகள் மற்றும் தாவரப் பொருட்கள் எரிதல், மனித விலங்குக் கழிவுகள் போன்றவற்றில் இருந்தும் வளி மண்டலத்தை அடைகின்றது.

மேற்கூறப்பட்ட வாயுக்களை விட ஏனைய பச்சை வீட்டு வாயுக்களான குளோரோ-புளோரோ காபன்கள் (CFCs), ஹேலன்கள் (Halons) ஆகியவை மனித வசதிகட்காக செயற்கையாக உருவாக்கப்பட்டவையாக உள்ளன. குளோரோபுளோரோ காபனானது 1930 களில் குளிர்சாதனப் பெட்டிகளையும் காற்றுச் சீராக்கிகளையும் குளிரூட்டும் ஊடகமாகப் பயன்படுத்தப்பட்டது. இதனை தோமஸ் மிட்செலி (Thomas Midsely) என்பவர் கண்டுபிடித்தார். ஆரம்பத்தில் இவ்வாயு பயனுள்ளதாக கருதப்பட்டபோதி லும் இவை பச்சைவீட்டு விளைவை அதிகரிக்கச் செய்கின்றன என்பது கண்ட-றியப்பட்டுள்ளது. தற்போதைய குளிருட்டி களில் இவற்றின் பாவனை கட்டுப்படுத் தப்பட்டுள்ளது. இதன் மூலம் வளிமண்டலத் தில் இவற்றின் அளவு குறைக்கப்பட்டுள்ளது.

மேற்கூறப்பட்ட வாயுக்கள் வெப்பநிலையை அதிகரிக்க வழிவகுக்கும் அதேவேளை வளி மண்டல தூசு துணிக்கைகள் வெப்பத்தை சிதறவைப்பதன் மூலம் குளிராக்கல் செயல் முறையை ஏற்படுத்துகின்றன. பினரூபோ எரிமலை வெடிப்பினால் (Mt.Pinatubo) வளி மண்டலத்தினுள் வெளியேற்றப்பட்ட தூசுதுகள் கள் வெப்பத்தை தெறிக்க வைத்ததினால் தற்காலிகமாக 1992-1993 இற்கிடைப்பட்ட காலத்தில் $0.4^{0}$ செல்சியர்ஸால் வெப்பநிலை குறைவடைந்தது.

சல்பேற் துகள்கள் வெப்பத்தை தெறிக்கச் செய்வதால் பச்சைவீட்டு வாயுக்களின் வெப்பமேற்றத்தைக் கட்டுப்படுத்துகின்றன. இதன் காரணமாகவே வட அமெரிக்காவின் கிழக்குப் பகுதி, ஐரோப்பா, தென்கீழ் ஆசியா ஆகிய கைத்தொழில் பிரதேசங்க ளில் சல்பேற் வெளியேற்றத்தால் ஏற்படும் அமில மழை வெப்பநிலை குறைப்பிற்கு காரணமாகின்றது.

கனடாவின் கிழக்குப் பகுதியில் சில தசாப்தங்களில் கணிசமானளவு வெப்பநிலை குறைவடைந்து வருவதற்குக் காரணம் சல்பேற் வெளியேற்றமாகும் சல்பேற் வெளி யேற்றத்தைக் கட்டுப்படுத்த எடுக்கப்படும் மேலதிக முயற்சிகள் பச்சை வீட்டு வாயுக் களின் விளைவினை அதிகரிக்கும்.

காலநிலை மாதிரிகள் (Climate Models)
காலநிலை மாதிரிகள், அதாவது எதிர்காலத் தில் காலநிலை எவ்வாறு அமைந்திருக்கும் என்பதை எடுத்துக் காட்டும் மாதிரிகள் எதிர் கால காலநிலை மாற்றங்களை தொடர்ந்து எதிர்வு (Predict) கூறுகின்றன. இவற்றின் படி, புவி வெப்பமடையும் வீதமானது, மெதுவாக அதிகரித்து 2100 ஆம் ஆண்டில் $4.5^{0}$ Cஆல் வெப்பநிலை அதிகரிக்கும் எனக் கூறப்படுகின்றது. தூசு துணிக்கைகளின் வெளியேற்றம் தொடர்ந்து அதிகரித்தால் இந்த வீதத்தை 25% தால் குறைக்க முடியும் என்றும் எதிர்பார்க்கப்படும். தேறிய வெப்ப அதிகரிப்பு 2100 இல் 1 இலிருந்து $3.5^{0}$ Cஆக அதிகரிக்கும் எனக் கூறப்படு கின்றது.

வடமத்திய கனடாவில் வருடாந்த வெப்ப நிலைகள் இந்நூற்றாண்டின் நடுப்பகுதியில் $5^{0}$ Cஆல் அதிகரிக்கும் எனவும் அடுத்த நூற்றாண்டின் மத்திய பகுதியில் $8^{0}$ Cஆல் அதிகரிக்கும் என எதிர்பார்க்கப்படுகின்றது. அதேவேளை சுற்றியுள்ள சமுத்திரப் பகுதி கள் $3^{0}$ C ஆலேயே வெப்பமடையும் என எதிர்வுகூறப்பட்டுள்ளது.

புவியில் அதிகரித்த சராசரி படிவுவீழ்ச்சி (Precipitation- Rain, Snow, etc) ஏற்படு மெனவும் வடஅரைக்கோளத்தின் உயரக-லாங்குகளில் (முனைவை அண்டிய பகுதி யில்) மாரியில் அதிக மண் ஈரப்பதனை கொண்டிருக்கும் என எதிர்பார்க்கப்படுகின் றது. வட அரைக் கோளத்தின் மத்திய அகலாங்குகளின் (Mid latitudes) கண்டப் பகுதியில் கோடை காலத்தில் ஈரப்பதன் குறைவடைந்து காணப்படும் எனவும் அதி தீவிரமான மழைவீழ்ச்சி, பனிவீழ்ச்சி காணப் படும் எனவும் அதேவேளை நீண்ட அதி தீவிரமான வரட்சியும் காணப்படும் எனவும் கூறப்படுகின்றது.

இவ்வாறான மாற்றங்களை நாம் எமது வாழ்க்கைக் காலத்திலேயே அவதானிக்கக் கூடியதாகவுள்ளதை நாம் இன்று அறிய லாம். கனடாவில் நீண்டகாலமாக வாழ்பவர் கள் முன்னைய காலத்தைப் போல் இன்று குளிர் அதிகமாக இல்லை என்றும் பனி வீழ்ச்சி சிலசமயம் முன்னரை விட அதிகமாக உள்ளது என்றும் கூறுவதை நாம் கேட்கக் கூடியதாகவுள்ளது. இவற்றிற்கு கூடுதலாக மனித நடவடிக்கைகளால் ஏற்படும் பச்சை வீட்டு வாயுக்களும் அவற்றின் விளைவால் ஏற்படும் புவி வெப்பமடைதலுமே காரணமா கும் என்பதை நாம் அறிந்து கொள்ளலாம்.

வளிமண்டல வாயுக்கள் உள்வரும் சூரிய கதிர்வீசலுக்கு வழிவிடக்கூடியதாகவும் அதே நேரம் புவியை அடைந்து பின் வெளி யேறும் புவிமேற்பரப்பு வெப்பக் கதிர் களுக்கு தடையாகவும் இருத்தலே பச்சை வீட்டு விளைவு எனப்படுகின்றது. பொதுவாக தாவரங்கள் இயல்பாக வளர முடியாத காலநிலையில் இத்தகைய கண்ணாடி வீடுகளினுள் தாவரங்களை வளர்ப்பார்கள். இக் கண்ணாடி வீடுகள் ஏற்ற வெப்பநிலை யை உள்வரவிட்டு பின் அவற்றை வெளி யேற விடாது பாதுகாக்கும். இவை பச்சை வீடுகள் என்று அழைக்கப்படும். வளிமண்டலத் தின் சில வாயுக்கள் இவ்வாறு வெப்ப நிலையை வெளியேற விடாது செயல் படுவதால் இவற்றை பச்சை வீட்டு வாயுக் கள் என அழைப்பர் (Green House Gases)

■ ■ ■

# உயரமாக வளர்வதற்கு வழி உண்டா?

இராஜசேகர்
ஆத்தியப்பன்



**புத்தாண்டு சிறப்பு பகுதி.
கேள்வி - பதில்**

2007 இல் வாசகர்கள் கேட்ட கேள்விகள் சிலவற்றிற்கு பதில்களைத் தொகுத்துக் கொடுத்துள்ளேன். 2008 ஆம் ஆண்டு ஆரோக்கியம் கொழிக்கும் ஆண்டாக விளங்கட்டும்.

**உண்மையாகவே நீரிழிவு (சலரோகம்), இரத்த அழுத்த நோய்களைக் குணப்படுத்த முடியுமா?**

இராமசாமி, கேட்வே, GTA

நீரிழிவில் இரண்டு வகை உண்டு. இதில் இரண்டாவது வகை (இன்சுலின் சாராதது) சலரோகம் குணப்படுத்தக் கூடியது. இரத்த அழுத்தம் நிச்சயம் குணமாக்க முடியும். கரிசாலை, கருவா, கருஞ்சீரகம், கசகசா இவைகளில் ஏதேனும் இரண்டை தினந் தோறும் இருவேளை உட்கொண்டு, உடற் பயிற்சி செய்து, ஒழுங்காக ஓய்வும் எடுத்துக் கொண்டால் இரண்டு நோய்களையும் குணப்படுத்தலாம்.

**உலகிலேயே சிறந்த நோய் தீர்க்கும் சிகிச்சை முறை ஒன்று கூற இயலுமா?**

சாந்தி, Kipling, GTA

சிரியுங்கள்! மருத்துவர்கள், நோயாளிகள், தத்துவஞானிகள் எல்லோரும் கண்டறிந்த மறுக்க முடியாத பேருண்மை, சிரிப்புதான் - சிறந்த மருந்து.

சிரிப்பு, இரத்த அழுத்தத்தைக் குறைக்கின்றது. மனஅழுத்தத்தை ஏற்படுத்தும் ஹார்மோன்களைக் குறைக்கின்றது. தசைகளின் வளைந்து கொடுக்கும் தன்மையை அதிகமாக்குகின்றது. நோய் எதிர்ப்பாற்றலை அதிகரிக்கின்றது. T-Cells என்று அழைக்கப்படும் கிருமிகளைத் தாக்கி அழிக்கும் செல்களை உற்பத்தி செய்கின்றது. காமா B –செல் அதாவது நோயை எதிர்க்கும் புரோட்டீன்களை அதிகப்படுத்துகின்றது. எனவே நோய்களை அழிக்கும் antibodies உற்பத்தி பெருக்கம் அடைகின்றது. என்டார்பின் (Endorphin) என்பது நமது உடலில் சுரக்கும் இயற்கையான வலி நிவாரணி (Pain killer) இந்த எண்டார்பினை சுரக்கச் செய்யும் வல்லமை சிரிப்பிற்கு உண்டு.

சிரிப்பு எளிதில் எவரையும் தொற்றிக் கொள்ளும். எல்லாத் தன்மைகளையும் எளிதில் உடைக்கும். சிரிப்பு - இது உலகப் பொதுமொழி. இந்தியாவில் இதற்கான சங்கங்கள் நன்கு செயல்படுகின்றன. லயன்ஸ் கிளப், ரோட்டரி கிளப் இவைகளை விட (Humor club) சிரிப்பு சங்கங்கள் பெருகி வருவதன் இரகசியம் என்ன? பக்க விளைவு இல்லாத சிறந்த வைத்தியம் சிரிப்பு. 'A Brief Smile brings closer' என்ற பழமொழி சிரிப்பின் மூலம் உறவின் நெருக்கத்தை உணர்த்துகின்றது.

**எனக்கு வயது 36. இரண்டு குழந்தைகள். சமீபகாலமாக மார்பகங்கள் தொய்வடைந்து காணப்படுகின்றன. இதற்கான தீர்வு ஆயூர்வேத மருத்துவத்தில் உண்டா?**

பிரேமா இராஜேஸ்வரி, வாட்டர்லூ

நிறைய தீர்வுகள் உண்டு. உங்கள் உயரம், எடை, குருதிவகை, வேறு ஏதாவது மருந்துகள் தற்போது பயன்படுத்துகிறீர்களா? என்ற தகவல்கள் வேண்டும். தவிரவும் வேறு வெளிப்புற செல்லுலாயிட் தெரபி, கிரீம் மற்றும் எண்ணெய் வகை மருந்துகளும் உண்டு. தனிப்பட்ட ஆலோசனை பெறுதல் நன்று.

**டாக்டர், எனது மகளுக்கு வயது 21. உயரம் 130 செ.மீ. அவள் உயரமாக வழி ஏதாவது உண்டா?**

இலலிதா சொர்ணசெல்வம், மிஸிஸாகா.

21வயது வரை உடல் வளர்ச்சி நிச்சயமாக உண்டு. 'New Height Method' என்ற முறையில் உங்கள் மகள் இன்னும் 6மாதங்களில் 6செ.மீ வளர முடியும். அதாவது சராசரியாக மாதம் ஒன்றிற்கு 1 செ.மீ என்ற விகிதத்தில் வளரலாம். தவிர, அக்யூபங்சர் மூலமும் சிறந்த பயனை பெற முடியும். 22 வது வயதிற்குப் பின் அவ்வளவாக பலன் எதிர்பார்க்க முடியாது.




**நான் தற்பொழுது லிபிடால் (LIPIDOL) தினந்தோறும் எடுத்து வருகின்றேன். இதனால் பக்க விளைவுகள் உண்டா?**

நித்தியானந்தம், ஸ்காபரோ

நீங்கள் உங்கள் கொலஸ்ட்ராலைக் கட்டுப்பாட்டிற்குள் வைப்பதற்காக 'லிபிடால்' எடுத்து வருகின்றீர்கள். குணப்படுத்துவதற்காக அல்ல. அதாவது உங்கள் வாழ்க்கையின் இறுதிவரை இப்படிப்பட்ட மருந்தினை எடுக்கும் நிர்ப்பந்தத்திற்கு ஆளாக்கப்பட்டு விட்டீர்கள். LIPIDOL தொடர்ந்து எடுப்பது பல பக்க விளைவுகளைக் கொடுக்கும். அதில் குறிப்பிடத்தக்கது தலைச்சுற்றல் மற்றும், கல்லீரல் பாதிப்பு. வாழ்க்கைமுறையை மாற்றி அமைப்பதோடு (Life style) சில குறிப்பிட்ட மாற்று உணவுவகைகளைச் (Food Supplement) சேர்த்துக் கொள்வதன் மூலம் நான்குமாதங்களில் கொலஸ்ட்ராலைக் குணப்படுத்தலாம். சிந்தியுங்கள், செயல்படுங்கள்.

**எனது மகள் சரியாகக் கவனம் செலுத்தி படிக்க மாட்டேன் என்கிறாள். ஞாபக சக்தி வளர மருந்து சொல்ல முடியுமா?**

இலதா சுப்பிரமண்யம், பிளெமிங்டன், GTA.

உங்கள் மகளின் வயதை நீங்கள் குறிப்பிடவில்லை. 12 வயதிற்குள் இருந்தால் 'VCMAS' என்ற பயிற்சிக்கு அனுப்புங்கள். வல்லாரையைத் தினந்தோறும் உணவில் சேர்த்துக் கொடுங்கள். இங்கு 'Genius' என்ற மருந்து கிடைக்கின்றது. இது தவிர 'Brahmi' என்ற மருந்து ஆயுர்வேதத்தில் உண்டு. மிக மிக முக்கியமான விஷயம் என்னவென்றால் காலை உணவு 7.30 மணிக்குள் தவறாமல் கொடுத்து விடுங்கள். முட்டை மற்றும் ஒமேகா -3 (Omega -3) மிகவும் நல்லது. வெண்டைக்காய் மற்றும் மீன் சாப்பிடுவதால் ஞாபகசக்தி நன்கு அதிகரிக்கும். அத்துடன் தியானப் பயிற்சியும் அளிக்கலாம். வாய்ப்பாட்டு (அல்லது) நடனம் கற்றுக் கொடுங்கள்.

**எனக்கு வேகமாக முடி உதிர்கின்றது. நல்ல தீர்வு கூறமுடியுமா?**

நிலோமி தனசர்வாங்க, ஸ்காபரோ

முடி உதிர்வதற்கு பல காரணிகள் உண்டு. அவற்றுள் சிலவற்றைக் குறிப்பிடுகின்றேன். ஹார்மோன் மாறுதல், வெள்ளைப்படுதல், தவறான (அல்லது) அடிக்கடி ஷாம்பு பாவித்தல், எண்ணெய் தவிர்த்தல், கண்விழித்தல், குறைவுபட்ட உணவு, மாதவிடாய் ஒழுங்காக வராமல் இருத்தல், பொடுகு (சொடுகு) போன்றவை.

ஆயுர்வேதத்தில் 'சதாவரி' என்று ஒரு மருந்து உண்டு. கரிசாலை, கறிவேப்பிலை, வல்லாரை, Omega -3 போன்றவற்றை அன்றாடம் சேர்த்துக் கொள்ளுங்கள். அஸ்வினி ஹேர்ஆயில் பயன்படுத்தலாம். அமேஸான் கம்பெனியின் ஈவா மார்ட்டின், Biofen, மற்றும் Hair folic இவையெல்லாம் நல்ல பலனைத் தரும். இவைகளுடன் Spirulina என்ற Food Supplement அவசியம் எடுத்துக் கொள்ளுங்கள். அழகான கூந்தல் உங்களுக்குச் சொந்தம்.

**எனக்கு மூட்டுவலி (Arthritis) இரண்டு வருடங்களாக உள்ளது. ஆயுர்வேதத்தில் இதற்கு என்ன மருந்து எடுக்கலாம்?**

பவானி ஆம்ஸ்ட்ரோங், Montreal

உங்கள் வயது, எடை, எந்தவகை Arthritis என்ற விபரங்களை நீங்கள் குறிப்பிடவில்லை. Auroyog என்ற மாத்திரை மற்றும் வெளிப்பூச்சுத் திரவம் இவைகளோடு ஏதாவது ஒரு Anti oxidant தொடர்ந்து எடுத்து வந்தால் நல்ல முன்னேற்றம் கிட்டும். துணைமருந்தாக Shila Calcin –R என்ற மாத்திரையை சேர்த்துக் கொள்ள வேண்டும். 'Arthritis' என்பது ஆயுர்வேதத்தில் 'வாத' வகை நோயாகும். அதாவது 'காற்று' தன்மை உடலில் மிகுந்து விடுவதால் ஏற்படும் ஒரு நோய். பெண்களுக்கு மாதவிடாய் சுழற்சி நிற்கும் காலத்தில் அனேகமாக இப்படிப்பட்ட நோய்கள் ஏற்பட வாய்ப்பு உண்டு. ஆண்களுக்கு 40 வயதிற்கு மேல் பெரும்பாலும் இந்நோய் தாக்குகின்றது.

வாசகர்கள் கேள்விகளை அனுப்பும் பொழுது வயது, உயரம், எடை, குருதிவகை இவைகளைக் குறிப்பிட்டு நோயின் அறிகுறிகள், மற்ற விபரங்களையும் தெளிவாக எழுதி அனுப்பினால் நாங்கள் முழுமையான ஆலோசனைகளை வழங்க முடியும். அனைத்து தரப்பினரும் பயன்படத்தக்க வகையில் தெரிவு செய்யப்பட்ட கேள்விகளுக்கு பதிலைத் தந்துள்ளேன். 'தாய் வீடு' வாசகர்கள் தொலைபேசி மூலமாகவும் தகுந்த ஆலோசனைகளைப் பெறலாம்.

இனிய புத்தாண்டு வாழ்த்துக்கள்!

நலம் பெறுக! வளம் பெறுக!

■ ■ ■

# நான்கு காலங்களுக்கும்..

78ம் பக்கத் தொடர்ச்சி...

மாதத்திற்கு ஒரு முறை சுத்தப்படுத்துக அல்லது மாற்றுக.

- அசுத்தக் காற்றை வெளியேற்றி சுத்த மான காற்றை உள்வாங்கும் பகுதிகளான (ventilation system) சுத்தக்காற்றை புகுத் தும் சாதனம் (recovery ventilator), வடி கட்டி (filters) என்பவற்றை இருமாதத் திற்கு ஒருமுறை பரிசோதித்தல் வேண்டும்.
- குளிர் காலத்தில் ஈரப்பதனியை இரு முறை அல்லது முன்று முறை சுத்தப் படுத்துக.
- குளியறையில் காணப்படும் அசுத்தக்காற் றை வெளியேற்றும் விசிறியினை மூடி இருக்கும் கம்பித்தடுப்புகளை சுத்தப்படுத் துக.
- புகை நெருப்பு என்பவற்றைக் கண்டு பிடிக்கும் சாதனங்களில் தூசு, சிலந்தி வலைகள் இருப்பின் அவற்றைச் சுத்தப் படுத்துக.
- குளிர்சாதனப் பெட்டியின் பின் பக்கத்தில் காணப்படும் வெப்பத்தை வெளியேற்றும் கம்பித்தடுப்புகளை சுத்தப்படுத்துக. அத் துடன் drip trays இனை சுத்தப்படுத்துவ துடன் அதுலுள்ள நீரை அகற்றி விடுக.
- தீயணைக்கும் கருவி (fire extigguishers) காணப்படின் அவற்றை பரிசோதிக்க. தேவையேற்படின் அவற்றை மாற்றுக.
- நெருப்பு அபாயத்திலிருந்து தப்புவதற் கான வழிகள் கதவுகள் யன்னல்கள் என்பவற்றை பரிசோதித்து உங்கள் குடும்பமானது பாதுகாப்பாக இருப்பதற்கு வீடு உகந்ததா என நிச்சயப்படுத்துக.
- வீட்டினுள் மிதமிஞ்சிய ஈரப்பதன் (mois-ture) அளவு வருகின்றதா என்பதை அவ தானிக்க. உதாரணமாக வீட்டின் யன்னல் களில் நீராவி காணப்படின் அது பயங் கரமான சுகாதாரத் தாக்கத்தை ஏற்படுத் தும். எனவே இந்நிலை காணப்படின் அதற்குரிய திருத்தத்தை மேற்கொள்ள வேண்டும்.
- நீர்க் குழாய்களின் வாய்களிலிருந்து சொட்டுச் சொட்டாக நீர் வடிகின்றதா என்ப தைப் பார்த்து அதற்குரிய வோசரினை மாற்றலாம். அடிக்கடி வோசரினை மாற்ற வேண்டி இருப்பின் அதனை பழுது பார்த்தல் வேண்டும்.
- Dishwasher, sinks, bathtubs என்பவற்றி லுள்ள கழிவு நீரினை சுத்தப்படுத்துக.
- நீர் குழாய்களின் கட்டுப்படுத்தும் வால்வு கள் சரியாக இயங்குகின்றனவா எனப்பரி சோதிக்க.
- யன்னல்கள் கதவுகள் என்பவற்றினூடாக பனித்துகள்கள் அல்லது குளிர் காற்று வருகின்றதா என்பதை பார்த்து அவற்றைக் குறித்து வைத்து இளவேனிற் காலத்தில் திருத்துக.
- கூரையின் மேலே பனி தேங்கிக்கிடக்கின் றதா எனப் பரிசோதிக்க. மேலதிகமான உறை பனி கூரைக்குக் கிழேயும், கூரையின் மேலே பனியும் தேங்கிக்கி டந்தால் attic இற்குள் காற்றோட்டம் சரி யாக நடைபெறவில்லை எனவே இதற் கென பயிற்ச்சி பெற்றவர்களிடம் கலந்தா லோசிக்க.

### இளவேனில்:

- கொதி நீர்த்தாங்கியின் owner's manual இனை வாசித்த பின்னர் வெப்ப அமுக்க வால்வினை கவனமாகப் பரிசோதிக்க. (கவனிக்க: இப் பரிசோதனையின் போது கொதிநீர் வெளியேறலாம்.)
- எரியூட்டியின் வடிகட்டியினை ஒவ்வொரு மாதத்திற்கு ஒரு முறை சுத்தப்படுத்துக அல்லது மாற்றுக.
- அசுத்தக் காற்றை வெளியேற்றிச் சுத்த மான காற்றை உள்வாங்கும் பகுதிக ளான(ventilation system) சுத்தக்காற்றை புகுத்தும் சாதனம் (recovery ventilator), வடிகட்டி (filters) என்பவற்றை இருமாதத் திற்க ஒருமுறை பரிசோதித்தல் வேண்டும்.
- எரியூட்டியுடனான ஈரப்பதனியை நிறுத்தி விடுவதோடு அதனைச் சுத்தப்படுத்துக.
- குளிரேற்றியினை பரிசோதிக்க. பொது வாக இரண்டு வருடத்திற்கு ஒரு முறை அல்லது மூன்று வருடத்திற்கு ஒரு தடவை பழுது பார்க்க வேண்டும்.
- குளிரூட்டியில் காணப்படும் வடிகட்டி யினை சுத்தப்படுத்துக அல்லது மாற்றுக.
- ஈரப்பதனைக் குறைக்கும் சாதனத்தை (dehumidifier) பரிசோதித்து தேவையேற் படின் அதனை சுத்தப்படுத்துக.
- வாயு எரியூட்டியினை நிறுத்தி விடுக.
- வெளியில் உள்ள உறைபனிகள் அகன்ற பின்னர் வெளிப்பகுக்கு நீரை அனுப்பும் வால்வினைத் திறந்து விடுக.
- அத்திவாரத்தில் ஏதாவது வெடிப்புகள் நீக் கசிவுகள் ஈரப்பதன் ஏற்பட்டுள்ளதா என்பதைப் பரிசோதித்து தேவையேற்ப டின் பழுது பார்க்க.
- உறை பனியினால் சமமற்றுப் போன வெளிப்பகுதியில் காணப்படும் படிகள் டெக்குகளை சமநிலைக்குக் கொண்டு வருக.
- வெளியே நீட்டிக்கொண்டிருக்கும் கூரைப் பகுதியில் இணைக்கப்பட்டிருக்கும் நீர் சேகரிக்கும் பகுதி கூரைப்பகுதியுடன் இறுக்கமாக இணைக்கப்பட்டு இருக்கின் றதா எனப் பரிசோதிக்க. கூரையிலிருந்து வழிந்தோடும் நீர் வெளியேறும் குழாய் கள் சரியாக உள்ளனவா எனப்பார்த்தல் வேண்டும். இதனால் நிலக்கீழ் அறையு னுள் நீர் செல்வதைத் தடுக்கலாம்.

### கோடை:

- நிலக்கீழ் அறையிலுள்ள ஈரப்பதனை அவதானித்து சாரீரப்பதனை 60%க்கு மேல் செல்ல விடாது தடுக்க. சாரீரப்பதனைக் குறைக்கும் சாதனத்தைப் பயன்படுத்தி பாதுகாப்பான சாரீரப்பதனைப் நிலை நிறுத்துக.
- குளிரேற்றியின் வடிகட்டியினை சுத்தப் படுத்துக அல்லது மாற்றுக அத்துடன் தேவையேற்படின் அசுத்தக் காற்றை வெளி யேற்றி சுத்தமான காற்றை உள்வாங் கும் பகுதிகளின் வடிகட்டியை கழுவுக அல்லது மாற்றுக.
- நிலக்கீழ் அறைகளில் காணப்படும் குழாய்களில் நீராவி படிந்து காணப்படின் அல்லது சொட்டு சொட்டாக நீர் வழிந் தோடின் அவற்றிற்குரிய திருத்தத்தை மேற்கொள்ள. உதாரணமாக ஈரப்பத-னைக் குறைக்க அத்துடன் குளிர் நீரினை எடுத்துச்செல்லும் குழாய்களை காப்பு றையிடுக
- குளியறையில் காணப்படும் அசுத்தக் காற்றை வெளியேற்றும் விசிறியினை மூடி இருக்கும் கம்பித்தடுப்புகளை சுத்தப் படுத்துக.
- நிலக்கீழ் அறையின் நிலத்திலுள்ள நீரை அகற்றும் பகுதியின் (floor drain) trap இல் நீர் உள்ளதா எனப்பார்த்து தேவை யேற்படின் நீரை நிரப்பி விடுக.
- ஆடை உலர்த்தியுடன் இனைக்கப்பட் டிருக்கும் டக் (duct)இனை கழற்றி துணி களிலிருந்து உருவாகும் ஒரு வகை யான தூசினை டக் dryer இனுள் துணி போடும் இடத்தைச் சுற்றி இருக்கும் பகுதி வெளியிலுள்ள dryer vent hood என்பவற்றிலிருந்து vacuum cleaner இனால் சுத்தப்படுத்தி விடுக.
- கூரையில் ஏறி அல்லது பைனாகுலரி னால் கூரையில் ஏதாவது தொய்வுகள் காணப்படுகின்றதா எனப்பரிசோதிக்க. தொய்வுகள் காணப்படின் அது கூரை யின் அமைப்பில் ஏதாவது பிரச்சனைகள் இருப்பதற்கான அறிகுறியாகும்.

■ ■ ■

## வீட்டுக்குள் இருக்கும் காற்று மாசுபடுவதால்

# வருடாந்தம் 2 மில்லியன் குழந்தைகள் இறந்துபோகின்றனர்

காற்று மாசுபடுவதால் மனிதருக்கு பெரும் சுகாதாரப் பிரச்சனைகள் ஏற்படுகின்றன. அதிர்ச்சி அளிக்கக் கூடியவகையில் பாராதூர மான விளைவுளையெல்லாம் இது ஏற்படுத் துகின்றது.

காற்று வெளியில் மட்டும் மாசுபடுவதில்லை. வீட்டுக்குள் இருக்கின்ற காற்றும் மாசுபடு கின்றது. ஆய்வுகளின் படி வெளியில் உள்ள காற்றை விட வீட்டுக்குள் உள்ள காற்றே அதிக அளவில் மாசடைந்து காணப்படுகின் றது. இதனால் மனிதரின் உடலில் பல பிரச்சனைகள் உருவாகின்றன. குறிப்பாக ஐந்து வயதுக்கு குறைந்த குழந்தைக-ளிற்கு சுவாசப்பைகளில் பெரும் பிரச்சனை-களை ஏற்படுத்துகின்றது என்று கண்டு பிடிக்கப்பட்டுள்ளது. இவ்வாறு காற்று மாசு படுவதால் உலகம் முழுவதிலுமாக, வருடம் ஒன்றுக்கு இரண்டு மில்லியன் குழந்தைகள் இறக்கின்றனர் என்ற செய்தி உங்களுக்கு நிச்சயம் அதிர்ச்சியாக இருக்கும்.

உலக சுகாதார அமைப்பின் (World Health Organization)இவ்விதமாக வீட்டுக்குள் உள்ள காற்று மாசாவதால் ஏற்படும் நோய்கள், ஏனைய நோய்களுடன் ஒப்பிடும் போது எட்டாவது இடத்தில் உள்ளது.

காற்றில்உள்ள மாசு காரணமாக குழந்தை களுக்கும், சிறுவர், சிறுமிகளுக்கும் சுவாசப பை தொடர்பான நோய்கள் ஏற்படுவதற்கு பெரும் வாய்ப்புகள் உள்ளன என்றும் உலக சுகாதார அமைப்பு எச்சரிக்கை செய் கின்றது. அதே சமயம் இந்த மாசடைந்த காற்றின் காரணமாக வயது வந்தவர்க ளுக்கு சுவாசப் புற்றுநோயும் ஏற்படலாம் என்று இவ்வமைப்புக் கூறுகின்றது.

புற்று நோய் ஏற்படுவதுவதற்கான காரணங் களை ஆராய்கின்றபோது, வீட்டுக்குள் இருக் கும் மாசடைந்த காற்றினால் ஏற்படுகின்ற புற்றுநோய் நான்காம் இடத்தில் உள்ளது என்று, 1987ம் ஆண்டு U.S Environmental Protection Agency (EPA) , தனது ஆய்வின் அடிப்படையில் அறிக்கை சமர்ப்பித்தது.

### ஏன் இந்த நிலைமை?

வடஅமெரிக்காவில் பெரும்பாலான மக்கள் தமது காலத்தை வீட்டுக்குள்ளேயே கழிக் கின்றார்கள். உதாரணத்துக்கு கூறுவதா னால், கலிபோர்னியா மக்கள் தம்முடைய ஒருநாளில் (24 மணிநேரத்தில்) 87வீதத்தை வீட்டுக்குள்ளேயே கழிக்கின்றனர். வெளியில் உள்ள காற்றை விட, வீட்டுக்குள் உள்ள காற்றே மாசடைந்து, உடலுக்கு கெடுதி விளைவிக்கக் கூடிய நிலைமையில் உள்ளது. சில மாசுக்கள் வெளிக்காற்றில் உள்ளதை விட வீட்டுக்குள் இரண்டு மடங்கில் இருந்து ஐம்பது மடங்கு மட்டும் அதிகமாக உள்ளது என்று கண்டறியப்பட்டுள்ளது. வீட்டுக்குள் உள்ள காற்று இவ்வாறு மாசடைந்து இருக்கு மேயானால் அந்தக் காற்றையே தமது வாழ்க்கையின் பெரும்பான்மை நேரத்திற்கு சுவாசிப்பதனால் ஏற்படும் உடல் பாதிப்பு மிக மோசமாகத்தான் இருக்கும்.

### எந்தவகையான மாசுக்கள் வீட்டுக்குள் உள்ளன?

- வீட்டுக்குள் சிகரெட், சுருட்டுப் புகைப்பத னால் உருவாகும் இரசாயனக் கழிவுகள்.
- இவை காரணமாக சுவாசப்பை தொடர் பான நோய்கள் சிறுவர்களுக்கும் பெரிய வர்களும் ஏற்படுவதுடன், சுவாசப்பை புற்றுநோய் மற்றும் இதய நோய்கள் ஏற்படும் வாய்ப்புகளும் உள்ளன.



- இயற்கை வாயு (Gas) பாவித்து சமைப் பதனாலும், வீட்டுக்குத் தேவையான வெப்பத்தை உருவாக்குவதினாலும், மற்றும் வீட்டுக்குத் தேவையான சுடு நீரை உருவாக்கும் போது உருவாகும் காபனோர் ஒட்சைட் வீட்டுக்குள் இருக் கின்றது. இது படுக்கையிலேயே உயி ரைப் பறிக்கின்ற நஞ்சு வாயு.
- நாங்கள் வீட்டுக்குள் பாவிக்கின்ற சில Gas பாவித்து பயன்படுத்தப்படும் உபகர-ணங்களால் உருவாகும் நைதரசன் ஒட்சைட்டினால் சிறுவர்களுக்கு சுவாசம் தொடர்பான சிக்கல்கள் ஏற்படும்.
- வீட்டில் பாவிக்கின்ற Aerosol sprays, sol-vents, cleaning agents, pesticides, Paints, Air fresheners காரணமாக உருவா கின்றன Organic chemicals. இவை ஈரல், சிறுநீரகம், மற்றும் மூளையில் பாதிப்பை ஏற்படுத்துவதுடன் வேறுபட்ட புற்று நோய்களுக்கும் காரணமாக உள்ளன.
- இவவை தவிர plywood மற்றும் wallpa-per போன்றவற்றினால் வீட்டுக்குள் வந்து சேரும் formaldehyde இனால் அலேஜிக்கு களும் புற்றுநோயும் வரலாம்.
- சிகரட், வீட்டில் உள்ள தூசு மற்றும் fireplace, aerosol sprays காரணமாக உருவாகும் Respirable Particles கண் களிலும், மூக்கிலும், தொண்டையிலும் Irritation ஏற்படுவதுடன் சுவாசத் தொகுதி யில் தொற்றுக்கள் ஏற்படலாம்.
- வீட்டுக்குள் பரவும் Bacteria, Viruses, Fungi, animal Dander என்பன Allergic reactions, Influenza வருவதற்குக் காரணமாக அமைகின்றன.
- Asbestos சுவாசப்பை புற்றுநோய்க்குக் காரணமாகவும், Lead நரம்பு மண்டலம், மூளை, மற்றும் ஈரலில் பெரும் பாதிப்பு களை ஏற்படுத்துவதாகவும், Radon சுவாசப் புற்றுநோய்க்குக் காரணமாகவும் உள்ளது.

வீட்டுக்குள் இருக்கின்ற மாசுகள் குறுகிய கால பாதிப்பாக கண்களிலும், தொண்டை யிலும் irritationஐ ஏற்படுத்துகின்றன. நீண்டகால பாதிப்பாக சுவாசத் தொகுதியில் நோய்களையும், புற்றுநோயையும் ஏற்படுத் தலாம். அதே சமயம் அளவுக்கு அதிக மான அளவிலான மாசு உடனடியான உயிர் ஆபத்திலும் முடிகின்றது. இதற்கு உதாரண மாக வீட்டுக்குள் திடீரென அளவுக்கு அதிக மாக அதிகரிக்கின்ற காபனோர் ஒட்சைட்டை (carbon monoxide) சுவாசிப்பதால் மரணம் நிகழ்வதைக் கூறலாம்.

**- சிவா சுப்ரா -**

இந்த வீட்டுக்குள் உள்ள மாசு எல்லோரை யும் ஒரே அளவாகப் பாதிப்பதும் இல்லை. சில வகையினரை அதிக உத்வேகத்துடன் இந்த மாசுக்கள் தாக்குகின்றன. குழந்தை களையும், வயோதிபர்களையும் அத்தோடு ஏற்கனவே இதயத்திலும், சுவாசப்பைகளி லும் நோய் உள்ளவர்கள், அஸ்மா நோய் உள்ளவர்கள், மற்றும் இரசாயனப் பதார்த் தங்களுக்கு sensitivityயாக உள்ளவர்களை யும் இந்த மாசுக்கள் அதிக வீரியத்துடன் தாக்குகின்றன.

### இந்த அபாயகரமான மாசுக்கள் வீட்டுக்குள் உருவாகாமல் என்ன செய்யலாம்?

நீங்கள் பாவிக்கின்ற பொருட்கள், மற்றும் Glues தொடர்பாக விழிப்பாக இருங்கள். இயற்கையான பதார்த்தங்களைக் கொண்டு செய்யப்பட்ட ஏராளமான பொருட்கள் இப்போது விற்பனையில் உள்ளன. அவை பற்றிய அறிவை வளர்த்துக் கொள்ளுங்கள். மலிவு விலையில் கிடைக்கின்றது என்பதற் காக உங்கள் வீட்டில் மாசை ஏற்படுத்தக் கூடிய பொருட்களை பயன்படுத்தாதீர்கள்.

பாவிக்கின்ற பொருட்களை எப்படி பாவிக்க வேண்டும் என்ற குறிப்பை கவனமாகப் படித்து அதன் படிசெய்யுங்கள். வீட்டுக்குள் இத்தகைய பொருட்களை பாவித்தால் யன்னல்களை எல்லாம் திறந்து காற்றோட்டம் ஏற்பட வழி செய்யுங்கள்.

சிகரெட் புகைத்தல் வீட்டுக்குள் கண்டிப்பாக செய்யக் கூடாது. புகைப்பிடிப்பவரை மட்டு மல்ல வீட்டுக்குள் உள்ள எல்லோரையும் இந்த புகையில் உள்ள பல நஞ்சுப்பொருட் கள் பாதிக்கின்றன.

Gas அடுப்புகள், fireplaces, heating system போன்ற gas உபயோகித்துப் பாவிக்கின்ற வற்றை வருடாந்தும் துப்பரவுசெய்ய வேண் டும். அதற்கு அங்கீகரிக்கப்பட்ட ஊழியர் களை அழையுங்கள்.

சமையல் அறையிலும், குளியல் அறை யிலும் இருந்து காற்றை வெளியே தள்ளும் Exhaust fans எப்போதும் ஒழுங்காக வேலை செய்கின்ற நிலைமையில் வைத்திருக்க வேண்டும்.

காபனோர் ஒட்சைட்டை இன் (carbon mo-noxide) அளவு அதிகரிக்கும் போது எங்க ளை எச்சரிக்கை செய்து அலாரம் அடிக்கக் கூடிய கருவிகளை வீட்டின் ஒவ்வொரு மாடி யிலும் பொருத்தவேண்டும்.

பற்றீரியா, பங்கஸ், வைரஸ், பூனையின் உமிழ் நீர், எலிகளின் சிறுநீர், கரப்பான் பூச்சி, மகரந்த மணிகள், தூசு என்பனவும் வீட்டுக்குள் காற்று மாசடைவதற்குக் காரணங்களாகும்.

■ ■ ■


tvi
Tamil Vision Int.
உங்கள் tvi ல்
மசாலா திங்கட்கிழமை இரவு 9:00 மணிக்கு
To order Call
Tel: 416-593-9300 Ext. 400
Or Toll-free: 1-888-836-6834
www.tamilvision.tv
ROGERS
Channel: 621
Tvi + Basic Channels for only $42.99
Tvi 50% off for 2 months
Bell ExpressVu
Channel: 707
Tvi + Basic Channels for only $54.99
$10 Credit for 12 Months
tvi ON LINE DEMAND
www.tviondemand.com
ஒளிக்கீற்று AWARDS 2007
Promoting Our Talent
எமது கலைஞர்களின் இசைப்படைப்புகளின் ஒளிப்பிம்பங்களோடு ஒளிக்கீற்று
உங்கள் தெரிவில் இவ்வாண்டின் ஒளிக்கீற்று விருதுகள்
வழங்கப்பட இருக்கின்றன.
உங்கள் வாக்குகளை நீங்கள் பதிவு செய்ய
http://olikkeetru.tamilvision.tv
வாரந்தோறும் சனிக்கிழமைகளில் 6:30க்கு
திரைப்படம் - Jan11/08 வெள்ளி இரவு 9:00 மணிக்கு
tvi ON LINE DEMAND
www.tviondemand.com


புதிய சுவடு புதிய உலகம் புதிய உணர்வு
இன்று TORONTO பார்ப்பது
tamil one
முற்றுமுழுதாக கனேடிய தமிழ் கலைஞர்களுடன்..
FILM IMPACT RECAP
FILM IMPACT RECAP
(சனி இரவு 7.00 )
இதுதான்டா இம்சை
இதுதான்டா இம்சை
(ஞாயிறு இரவு 7.30 )
SMS
REQUEST SHOW
உங்க நேரம்
(ஞாயிறு மாலை 6.30 )
கனடாவின் முன்னணி தமிழ் நிகழ்ச்சிகளை
கண்டுகளிக்க உங்கள் தெரிவு TAMIL ONE
TO SUBSCRIBE:
CALL DANIEL
1.866.360.7977
416.817.7977
Rogers Channel 622 Phone : 416-299-0118

# மாங்கிளியும் மரம் கொத்தியும்



திரு மகேசன்

"வள்ளிக்கட்டு சபரி மலைக்கு கல்லும் முள்ளும் காலுக்கு மெத்தை"

'மாங்கிளியும் மரங்கொத்தியும்' பயணக் கட்டுரை எழுதியதும் போதும், தொலை பேசி அழைப்புகளுக்குப் பதில் அளித்ததும் போதும்!

செறென்டிப் ட்ரவல்ஸ் இன் வரலாற்றிலேயே ஒரே நாளில் அதிக தொலைபேசி அழைப்பு களுக்குப் பதிலளித்து சாதனை படைத்து விட்டார்கள் நமது அலுவலகத்து அன்பான பிரயாண முகவர்கள். மலையாளத்தில் கூட 'பறைய' வேண்டியதாகிவிட்டது! அடம்பிடித்து, ஒற்றைக் காலில் நின்று 19 பேர் குழுவாக புதுவருடத்தைக் கொண்டாட 25ம் திகதி கேரளா பயணமாகிவிட்டார்கள். பலர் 'போடுங்கள் புக்கிங்' என்றுவிட்டு கூட்டம் சேர்த்துக் கொண்டிருக்கிறார்கள். கேரளா விற்கு மவுசு கூடிவிட்டது. 'தம்பி, மார்கழி கோயில் சீசன். உங்கள் கட்டுரையில் கோயில்களைப்பற்றி எழுதுங்கோ" என்று முதியவர்கள் பலரின் செல்லமான தொலை பேசி அழைப்பு. கடவுளின் சிருஷ்டியான கேரள மண்ணில் ஆலயங்களின் மகிமை யைச் சொல்லவா குறையிருக்கும்?

எந்தக் கோயிலில் தொடங்கலாம் என்ற வுடன் காதில் வந்து விழுந்தது "வள்ளிக் கட்டு சபரி மலைக்கு கல்லும் முள்ளும் காலுக்கு மெத்தை" பாடல்தான். மார்கழி மகோற்சவத்தில் முக்கிய பங்கு வகிப்பது சபரி மலைக்குச் செல்வது. கறுப்பு ஆடைய ணிந்து, மாலையணிந்து, 41 நாட்கள் விரத மிருந்து மலையேறி, தமது பாவங்களைக் கழிக்க பெண்களும் ஆண்களும் கூட்டம் கூட்டமாக - கனடாவிலிருந்துகூட - புறப்பட் டுக் கொண்டிருக்கிறார்கள். உலகெங்கும் உள்ள விமான நிலையங்களில் ஐயப்ப பக்தர்களுக்கு என விசேட கவனிப்புகளுடன் பயணங்களை மேற்கொள்ள விமான நிறு வனங்கள் முன்னிற்கின்றன. ரொறொன்ரோ பியர்சன் விமான நிலையத்தில்கூட ஐயப்ப பக்தர்களுக்காக Toronto Airport Authorities விசேட ஒழுங்கு முறைகளைக் கடைப்பிடிப் பது மனதிற்கு மகிழ்ச்சியைத் தருகிறது. ஐயப்பனின் மகிமையே மகிமை. 18ஆம் படி தாண்டி ஐயப்பனைக் காணப் போவ தென்பது வாழ்க்கையின் பெரும்பேறே.

இந்தியப் பத்திரிகைகள் ஐயப்பனைக் காண மக்கள் 12 மணி நேரத்திற்கு மேல் வரிசை யில் நின்றுதான் இவ்வாண்டு ஐயப்பன் தரிசனம் காணலாம் என்கின்றன என்றால் அவனது மகிமையை எண்ணிப் பாருங்கள். எனவே, அந்த ஹரிஹர புத்திரனின் ஆலய மகிமையை உங்களுடன் பகிர்வதில் மனதில் எவ்வளவு பரவசமாக இருக்கிறது! கார்த்திகை, மார்கழி, தை மாதங்களில் தென்னிந்தியாவின் சனத்திரள் கூடிய ஆலயங்களில் முதன்மையாகத் திகழ்வது தான் சாஸ்தாவின் மணிகண்டனின் ஆலய பெருமையாகும். குறுகிய காலத்தில் அதிக பக்தர்களை உள்ளடக்கும் ஆலயம் என்ற பெருமையையும் சபரிமலையே பெற்றுக் கொள்கிறது.

முருகப் பெருமானைப் போன்றே சுவாமி ஐயப்பனுக்கும் அறுபடைவீடுகள் உள்ளன. அவையாவன: அச்சன் கோவில், சூரியங் காவு, குளத்துப்புழை, பந்தளம், எரிமேலி, மற்றும் சபரிமலை. கேரளபூமியில் மொத்தம் 108 இடங்களில் பரசுராமர் திருக்கோவில் களை அமைத்தாராம். அவற்றுள் 18 கோவில்களில் சுவாமி ஐயப்பன் விக்கிரகத் தைப் பிரதிஷ்டை செய்துள்ளார். சபரிமலை திருக்கோவிலில் சுவாமி ஐயப்பன் விக்கிர கத்தை பிரதிஷ்டை செய்தவரும் பரசுராமரே. சுவாமி ஐயப்பன் பூலோகத்தில் தனது அவதார நோக்கம் முடிவடைந்ததும் (12ம் வயதில்) இந்த விக்கிரகத்தில்தான் ஐக்கிய மானார் என்பது புராண கூற்று.

ஸ்ரீ தர்ம சாஸ்தாவானவரே சபரிமலையில் குக்குட ஆசனத்தில் அமர்ந்து சுவாமி ஐயப்பனாக அருள்புரிகிறார். கலியுக தெய்வமான சுவாமி ஐயப்பனை வழிபட சகலவிதமான துன்பங்களும் நீங்கி, வாழ் வில் வசந்தம் வீசும் என்பர். நான்கு யுகங்க ளுக்கும் அதிபதி சுவாமி ஐயப்பன். ஆதி சாஸ்தா எட்டு அவதாரங்கள் எடுத்ததாகப் புராணங்கள் கூறுகின்றன. அவற்றுள் ஒன்று கல்யாண வரத சாஸ்தா. இவர் பிரம்மனின் புதல்விகளாக பூரணை, புஷ்கலை ஆகி- யோரை மணம்செய்த கதையை புராணங் களில் காணலாம். இந்த அவதாரத்துக்குப் பிறகே இவர் சுவாமி ஐயப்பனாக அவதரித்து, பிரமச்சரிய விரதம் கடைப்பிடித்து, அதர் மமே உருவான மகிஷியை அழித்தார். இதுவே சாஸ்தாவின் கடைசி அவதாரம் என்பர்.



- உல்லாசப் பயணக் கட்டுரை -



இங்கு ஆண்டு முழுவதும் வற்றாமல் ஓடிக்கொண்டிருக்கும் புண்ணிய நதியில் நீராடி, பாவங்களைக் களைந்துவிட்டு, ஐயப்பனைக் கண்குளிரக் காணச் செல் வோம். தாமிரத் தகடுகளால் வேயப்பட்ட கர்ப்பக்கிரகத்தைச் சுற்றி, தங்க ஓடு வேயப்பட்ட பிராகாரம் அமைந்துள்ளது. 41 நாட்கள் விரதம் இருந்த களைப்பே உடம்மை விட்டு அகலுகிறது. இக்கட்டு- ரையை வரையும்போது உடலில் ஒரு புதுத் தெம்பை உணரமுடிகிறது. எத்தனையோ கல்லு முள்ளுகளைத் தாண்டி 18 படி ஏறி தீபங்கள் நிறைந்த ஒளி வெள்ளத்தில் ஐயப்பனின் விக்கிரகம் தகதகவென ஜொலிக்கும் காட்சியைக் காண ஈரேழு பிறவிகள் எடுத்தாலும் போதாது.

இங்குள்ள நதியில் உள்ள மீன்கள் முனிவர்களாகக் கருதப்படுகின்றன. பல வண்ணங்களில் பெரிது பெரிதாக வளைய வரும் மீன்களுக்கு பக்தர்கள் நிலக் கடலைப் பருப்பும், பொரியும் பக்தியுணர்டே வாடு போட்டு மகிழ்கின்றனர்.

இவையெல்லாற்றுக்கும் மேலாக மகரஜோதி தரிசனம் காணக் கண்கோடி வேண்டும். அந்த ஜோதி தோன்றும் நேரத்திலே எட்டுத் திக்கும் ஒலிக்கும் 'சாமியே சரணம் ஐயப்பா' ஒலி நம் உடலில் ஒரு அதிர்வலையை ஏற்படுத்துவதை அனுபவ வாயிலாக உணர ஐயப்பன் தரிசனம் காணப் புறப்படுவோம்.

ஒருபுறம் ஐயப்பா கோஷம் என்றால் கேரளாவை பக்திமயப்படுத்தும் இன்னொரு கோஷம் "குருவாயூரப்பா". குருவாயூரப்பன் மகிமையை நம்மோடு வந்த பலர் பலவித மாக உணர்ந்திருக்கிறார்கள்.

குருவாயூரப்பன் கிருஷ்ணாவின் அவதாரமா கக் கருதப்படுகிறது. இவ்வாலயத்தில் காணப்படும் ஸ்ரீ கிருஷ்ணர் விக்கிரகமானது, வாசுதேவராலும் தேவகியாலும் துவாரகா வில் வழிபடப்பட்டது என்ற பெருமையைத் தாங்கிநிற்கிறது. இதனால்தான் நீள்சதுர வடிவில் அமைந்திருக்கும் இவ்வாலயம் 'தக்ஷலா துவாரகா' என்றே கருதப்படுகிறது. இந்த ஆலயத்திலேயே அதிக அளவு திருமணங்கள் நடத்தப்படுவதாக அறநிலை யத் துறையினர் கணிப்பிட்டுள்ளனர். குழந்தைகளுக்கு சோறூட்ட இந்நாளில் குவிகின்றார்கள். இந்நிகழ்வானது குழந்தை களுக்கு ஒரு புனித நிலையைத் தோற்று விப்பதாகக் கருதப்படுகிறது. இந்நிகழ் வானது கின்னஸ் (Guinness world record) உலக நிகழ்வுகளில் குறிப்பிடப்படுகிறது.

33.5 மீற்றர் உயரத்திலான தங்கத்தால் செய்யப்பட்ட கொடித்கம்பமானது ஆலயத் திற்கு அழகூட்டுகிறது. 7 மீற்றர் உயரத்தி லான 13 அடுக்குகளில் நிர்மாணிக்கப்பட்ட தீபஸ்தம்பம் விளக்கேற்றப்படும் போது தோன்றும் அழகைக் கண்டு பக்தி பரவசம் பொங்கும் மக்கள் 'குருவாயூரப்பன்' என்று கோஷமெழுப்பி வழிபடும்போது புல்லரிக் கும். இந்த ஆலயத்தினுள்ளே இந்துக்கள் மட்டுமே அனுமதிக்கப்படுகிறார்கள். இது கட்டுப்பாடுகள் மிகவும் நிறைந்த ஆலயமா கும். குருவாயூரப்பனின் அழகையும் அருளையும் பெற நிச்சயம் ஒருமுறை சென்றே ஆகவேண்டும். புன்னத்தூர் கொட்டா குருவாயூரப்பன் ஆலயத்திலிருந்து 2கி.மீ. தூரத்தில் அமைந்துள்ளது. ஆலயத் திற்கு வழங்கப்படும் யானைகள் இங்குதான் வளர்க்கப்படுகின்றன. நிச்சயமாக இந்த இடத்தைப் பார்க்கத் தவறவே கூடாது. கேரளாவின் ஆலய பயணம் செய்பவர்கள் நிச்சயமாக பல நூறு ஆலயங்களின் தரி சனத்தைப் பெறும் பாக்கியம் பெற்றவர் களாவர்.



சபரிமலை ஐயப்பன் அருள் தரிசனத்தோடு தொடங்கிய இப்பயணக் கட்டுரை ஆன் மிகக் கட்டுரையாக அமைந்ததும் இறைவன் அருளே. சகலருக்கும் சகல சௌபாக்கியங் களும், சுபீட்சமும், அமைதியும், சமாதான மும் 2008ஆம் ஆண்டில் கிடைக்க ஆண்ட வன் அருளை வேண்டிநிற்கின்றோம்.

■ ■ ■

# CTR தகவல் பலகை

## ROOMS / BASEMENT RENT

**MORNINGSIDE & MILLER**
2 B/R Basement for Rent
Separate Entrance near All Facilities
Call: 416 283 1984

**MARKHAM & ELLESMERE**
3 B/R Banglow House
3 B/R Basements for Rent
Call: 416 433 6344

**MORNING SIDE & OLD FINCH**
2 BR Walk-out Basement for Rent
(Park, Cable, Laundry)
Call: 416 284 6226

**MCGOWAN & FINCH**
2 B/R Basement for Rent
(Large rooms – Separate Entrance)
Call: 416 412 0406

**MCGOWAN & MCNICOLL**
1 B/R Basement for Rent
$325.00
Call: 416 491 9364

**MARKHAM & MCGOWAN**
1 B/R Room for Rent
Separate Entrance
Call: 416 297 7770

**BRIMLEY & STEEL**
2 B/R Basement for Rent
Separate Entrance
Near All Facilities (T.T.C, No frills)
Call: 905 947 8018

**NEILSON & MORNING SIDE**
2 B/Room Basement for Rent
(Separate Entrance)
Call: 416 854 5403

**MCGOWAN & !4th LANE**
1 B/Room Basement for Rent
Call: 905 201 0067
Markham & brimoton
3 B/Room Basements for Rent
(Separate Entrance)
Call: 416 433 6344

**NEILLSON & FINCH**
2 B/Room Basements for Rent
2 W/R full washrooms
New Basement (Separate Entrance)
Call: 416 609 2226

**MARKHAM & ELLESMERE**
1 Room for Rent
10 Tuxedo Court
1 Car Park
Call: 416 430 0140

**BRIMLEY & ELLESMERE**
2 B/R Basement for Rent
1 Car Park, Sc.Centre, TTC
No Smoke
Call: 416 430 0035 / 416 917 8336

**O HON PARK & LAWRENCE**
2 B/Room Basement for Rent
Separate Entrance
Call: 416 701 0667

**WITBY**
New House 3B/Room, 2 W/Room for Rent
Call: 416 291 3997

**DAN FORTH & EGLIN TON**
2B/Room Walk out Basement for Rent
Call: 416 451 6895
2 Broom Basement for Rent
Separate Entrance
Call: 416 898 1469

**16th AVE & MARKHAM**
Wanted 1 Room for Rent
Call: 416 523 8142

**S COLF. & LAWRENCE**
2 R/Room Basement for Rent
Call: 416 439 4489 / 647 284 8494

**BRAMPTON**
2 B/Room basement for Rent
Separate Entrance
Call: 905 913 0857 / 416 566 5628

**BRIMLEY & STEEL**
2 B/Room Basements for Rent
Cree Cable – Separate Entrance
Call: 905 947 8018

**NEAR KENNEDY SUBWAY**
1 B/Room Basement for Rent
Call: 647 280 3719

**STEEL & WARDEN**
2 B/Room Basement for Rent
Separate Entrance
Call: 905 944 9982 / 416 887 5315

**KENNEDY & LAWRENCE**
Walk-out Basement for Rent from Feb.
Call: 416 994 9635

**NEILSON & FINCH**
2 B/Room + 3 B/Room Basements for Rent
Call: 416 335 0136

## HOUSE / CONDO FOR SALE

**MARKHAM & 9th LANE**
3 B/Room House for Sale
180Sq.feet,
3BD + Computer Room, 2Full W/R + ? W/R
New House (6th months Old)
($$$ Up grate)
Call – 905 554 2596

**COLOMBO**
2000 Sq. feet Building (2 Story) For Sale
Call: 1-514 389 2064

**MORNINGSIDE & SHEPPARD**
(1) 3 B/Room House for Sale
(Near Wal-Mart)
Finished Basement
(2) Convinces Store Self (For Sale)
Call: 905 479 6086 / 647 444 2209

## AUTO FOR SALE

**1997 NISSAN**
Quiz Van (7 Passenger) 105 km
Call: 416 876 6914

**93, 92 TOYOTA COROLLA**
Call: 905 471 7373 / 416 402 1124

**91 TOYOTA CAMRY**
270Km, Call: 905 294 2461

**94 MERCURY VAN**
Villagers $500.00
Call: 905 887 7845

**93 NISSAN VAN**
(Small Eng)
Call: 416 818 8905

**96 HONDA ACC EX**
full Loaded, Good Condition $300.00
Call: 416 695 4909 / 647 402 4909

CTR
கனடியத் தமிழ் வானொலி
**416.264.8798**

**92 HONDA ACCORD**
EX 279Km. Call: 416 298 5952

**96 HONDA ACE**
Ex – 279KmCall: 416 712 0801

**91 HONDA ACC**
Ex-R- 293KmCall: 416 293 3690

**95 PONTIAC MONTANA,**
91 Honda Civic, Call: 416 878 4453

**94 TOYOTA CAMRY**
260 Km. LE, Call: 905 947 8452

**97 TOYOTA COROLLA**
230Km, Gold, Call: 647 832 9934

**2003 HONDA CIVIC**
EX. 147 Km $8850.00,
Call: 416 274 5847

**2002 HON. ACC.**
Ex R,. Silver -285Km. Call: 905 554 0707

## OTHERS

**CLOTHS & FOOT WEAR**
for Sale
Imported from State
Call: 416 615 5555

**HELPER WANTED FOR SENIOR CITIZEN**
Call: 416 208 7361

**NEW MARKET**
Wanted Cleaners
$12.00
Call: 416 707 1265

**6 PICES DINING TABLE, SWING ME CHINE**
Call – 416 724 6311

**DZ DRIERS WANTED**
(O Haw9 for Truck Drivers)
Call: 416 854 7307

**AZ DRIVER FOR CALIFORNIA**
(Expert Needed)
Call: 416 821 8530

# குழந்தைகள் தொலைக்காட்சிக்கு முன் செலவுசெய்யும் நேரம் அதிகம்



மஞ்சுளா ராஜலிங்கம்

பெரும்பாலான குழந்தைகள் பள்ளிக்கூடம் போவதற்கு முன்னாலேயே தொலைக்காட்சிக்கு அடிமையாகி விடுகிறார்கள். சாதாரண நாட்களில், ஒரு குழந்தை பராமரிப்பு நிலையம் கூட 70 சதவிகித நேரத்தை தொலைக்காட்சி பார்ப்பதற்காக குழந்தைகளுக்கு ஒதுக்கி விடுகின்றன. ஒரு வருடத்தில், ஒரு குழந்தை, சராசரியாக 900 மணி நேரங்களை பள்ளிக்கூடத்திலும், 1023 மணித்தியாலங்களை தொலைக்காட்சியின் முன் உட்கார்வதிலும் செலவழிக்கின்றது.

அமெரிக்காவில் இயங்கும் AAP எனப்படும் American Academy of Pediatrics நிறுவனமானது மேற்கொண்ட ஆராய்ச்சியில், அமெரிக்காவில் வாழும் குழந்தைகள் சராசரி 4மணி நேரங்களை தொலைக்காட்சி பார்ப்பதில் செலவழிப்பதாகக் கண்டு பிடித்துள்ளன. ஆனால் AAP இன் கணிப்பின்படி, இரண்டு வயதிற்கு மேற்பட்ட குழந்தைகள் ஒரு நாளைக்கு, ஒன்று அல்லது இரண்டு மணித்தியாலங்களுக்கு மேல் நல்ல நிகழ்ச்சிகளாயிருந்தாலும், பார்ப்பது ஆரோக்கியமானதல்ல என்று வலியுறுத்துகின்றன. அதே வேளை ஒதுக்கப் பட்டுள்ள படிப்பின் வரையறுப்பின்படி, இரண்டு வயதிற்குக் குறைந்த குழந்தைகளுக்கு இறுவட்டு, தொலைக்காட்சி, படப்பிரதிகள், கணணிப் பாவனை, அல்லது கையடக்க இயக்கும் விளையாட்டுச் சாதனங்கள் (Video games), அதாவது திரை சம்பந்தப்பட்ட எந்த பொழுது போக்கு சாதனங்களுமே சலுகையளிக்கப் படக்கூடாது, ஏனெனில், இரண்டு வயதுக் குட்பட்ட காலகட்டத்தில் தான் மூளை சரியான வளர்ச்சியை நோக்கி சென்று கொண்டிருக்கும். அந்நேரங்களில், தொலைக்காட்சி பார்ப்பது போன்ற சம்பவங்கள், கற்கும் திறன், தன்னைத்தானே வெளிப்படுத்திக் கொள்ளும் தனித்துவம், பெற்றோருடனும், பிறருடனும் பழகுவதிலும், விளையாடுவதிலும் நேரத்தைச் செலவிடுதல் போன்றவற்றை மழுங்கடித்து விடும். இந்த மாதிரி நேரத்தைச் செலவிடுவதில் தான் வளரும் குழந்தைகளின் தனித்துவம், உடல்ரீதி, மனரீதியாக மற்றும் பொதுப்பார்வையில் வெளிப்படும் முக்கிய காலகட்டமாகும்.

தொலைக்காட்சி பார்ப்பது ஒருவிதத்தில் நல்ல விடயம்தான். பாலர்வகுப்புக் குழந்தைகள் எழுத்துத் திறனை தொலைக்காட்சி பார்ப்பதன் மூலம் வளர்த்துக் கொள்ளலாம். அதேபோல், பெரிய வகுப்புக்களில் படிக்கும் பிள்ளைகள், இயற்கையையும், அதன் சூழலில் வாழும் உயிரினங்களைப் பற்றியும் தாராளமாகக் கற்றறியலாம். இதற்கும் மேல் ஒருபடி போய் சொல்வதென்றால், பெற்றோர்கள் கூட தொலைக்காட்சியினைப் பார்ப்பதன் மூலம், அன்றன்றைக்குரிய செய்திகளை அறியலாம். நிச்சயமாய் தொலைக்காட்சி பார்ப்பதைப் பற்றி எந்த ஒரு எதிர்க்கருத்து இருப்பினும் கூட, தொலைக்காட்சி ஒரு விதத்தில் ஒரு சிறப்பான ஆசிரியர் மட்டுமின்றி, ஒரு நல்ல பொழுது போக்காளரும் கூட. சரி, இது ஒரு பக்கம் இருக்கட்டும். தொலைக்காட்சி பார்ப்பதிலுள்ள சில தீமைகளை சிறிது ஆராய்வோமா?

ஒரு நாளைப்போல், நாளுக்கு நாள் சராசரி 2மணித்தியாலங்களுக்கும் கூடுதலாக தொலைக்காட்சியையே முறைத்துக் கொண்டிருக்கும் சிறுகுழந்தைகள், சராசரி எடையை விடக் கூடுதல் எடையை விஞ்சி விடுகின்றன என ஆராய்ச்சிகள் தெரிவிக்கின்றன.

கடத்தல், கொலை போன்ற வன்முறைக் காட்சிகளை தினம் தொலைக்காட்சியில் பார்க்கும் குழந்தைகள் உலகம் மிகவும் பயங்கரமானது எனவும், தமக்கும் வாழ்க்கையில் இப்படி அசம்பாவிதம் எதுவும் நடந்துவிடும் எனவும், தமக்குள் பயத்தையும், கற்பனையையும் வளர்த்துக் கொள்கின்றன.



தொலைக்காட்சி பார்க்கும் குழந்தைகள் மனதில் இனத்துவேஷம், ஆண், பெண் பால் வித்தியாசங்கள் போன்றவையும் வித்தியாசமான விஸ்தீரணங்களில், கோணங்களில் மனத்தில் பதிந்து விடுகின்றன.

இந்த தொலைக்காட்சி நிகழ்ச்சிகள் குழந்தைகளுடன் சம்பந்தப் படுவது பற்றி பலவித கருத்துக்கள் பாகுபடுத்தப் படுகின்றன. குழந்தைகள் படிக்கும் பாடத்தினைக் கருத்தில் கொண்டு, கூடுதலான மணி நேரங்களைக் குழந்தைகள் தொலைக்காட்சி பார்க்க செலவிடுதவில் தப்பில்லை என்கின்றனர் ஒரு சாரார். மறுசாரார், தொலைக்காட்சி நிகழ்ச்சிகளைப் பார்ப்பதை அறவே கட்டுப்படுத்தி பார்க்காமலே விடல் தான் குழந்தைகள் வளர்ச்சிக்கு நலம் பயக்கும் என்கின்றனர். இதையெல்லாம் தாண்டி இன்னுமொரு சாரார், படிப்பின் தேவையைப் பொறுத்து குழந்தைகள் தொலைக்காட்சி பார்ப்பதில் பிரச்சனை எதுவும் இல்லை என்ற கூற்றை முன்வைக்கின்றனர். தொடர்ச்சியான பாவனையாக இல்லாமல், இருந்திருந்து எப்பொழுதேனும் தொலைக்காட்சியைத் திருகுவதில் தப்பில்லை என்கின்றது அவர்கள் வாதம். இதனால் தான் குழந்தைகள் தொலைக்காட்சி பார்க்கும் முறையை பெற்றோர் கட்டுப்படுத்த வேண்டும், வரையறுக்க வேண்டும். அப்பொழுது தான், அவர்கள் தங்கள் வயதுக்குத் தகுந்த, மற்றும் கல்வி சார்ந்த நிகழ்ச்சிகளைத்தான் பார்க்கின்றார்கள் என்ற நிம்மதி பெற்றோருக்கு ஏற்படும். மற்றும் தங்கள் நண்பர் குழாமுடன் விளையாடவும், ஏதேனும் ஒரு புத்தகத்தை வாசிக்கவும், உடற்பயிற்சி போன்றவற்றில் சிறிது நேரத்தைச் செலவளிக்கவும், குழந்தைகள் தாமாக நேரத்தை ஒதுக்கத் தலைப்படும்.

எவ்வளவு தடவை வன்முறைக் காட்சிகளை பிறந்த காலம் தொட்டு, ஒரு குழந்தை தொலைக்காட்சியில் அவதானிக்கின்றது என்பதற்கு ஒரு சிறிய கணக்கெடுப்பு ஒன்று அமெரிக்காவினால் நிறுவப்பட்டது. அதில் அவர்கள் அறிந்த தகவல் என்னவெனில், ஒரு சராசரி அமெரிக்கக் குழந்தை பிறந்திலிருந்து, 18 வயது பூர்த்தியாகும்வரை, சராசரி இரண்டு இலட்சம் தடவைகள் வரையிலான வன்முறைக்காட்சிகளைத் தொலைக்காட்சியில் பார்க்கின்றதாம். ஆச்சரியம், ஆனால் உண்மை அதுதான். சிலவேளைகளில் இம்முறையான வன்முறைக் காட்சிகள் குழந்தைகள் மனதில், வனமுறைச் செயல்களைச் செய்வதின் மூலம் தமக்குத் தேவையான காரியங்களைச் சாதித்துக் கொள்ளலாம், அதிகாரத்தால் பெற்றுக் கொள்ளாம் என்ற அசையா எண்ணத்தையும் ஆழமாக வேரூன்றி விடுகின்றது. இது மனதில் ஒரு பெரிய பாதிப்பையும், ஒரு சீரற்ற எண்ணத்தையும் குழந்தைகள் மனதில் தோற்றுவித்து விடும் சந்தர்ப்பங்கள் நிரம்பவே உள்ளது.

அத்துடன் சில திரைப்படங்களிலும், ஏன் தொடர்களிலும் கூட, குழந்தைகளுக்குப் பிடித்த நடிகர்கள் போன்றோர் தான் வன்முறையைத் தொடக்குவதாகவும், அல்லது வன்முறைக் காட்சிகளில் ஈடுபடுவதுபோல் காட்டப்படுவதுமுண்டு. தமக்குப் பிடித்த, அல்லது அவர் ஒரு பிரபலயமான நடிகர் என்ற காரணத்தினால், அவர் செய்யும் வன்முறைகள்கூட சரியே என்றஎண்ணம் குழந்தைகளுக்குள் பதிந்துவிடும். அதாவது, அவர் செய்தால் எல்லாம் சரியாகத் தான் இருக்கும் என்ற நினைப்பு. பெற்றோர் குழந்தைகளிடம் மற்றவர்களை அடிப்பது, கடிப்பது, உதைப்பது, போன்றவை தப்பான காரியங்கள் என்று எடுத்துரைத்தாலும் கூட, தொலைக்காட்சிச் செய்திகளோ, “good guys” எனப்படுபவர் இந்த வன்முறைக் காட்சிகளில் ஈடுபட்டால் தப்பில்லை என்ற கூற்றையே குழந்தைகள் மனதில் பதியச் செய்து விடுகின்றன. அத்துடன் தொலைக்காட்சி நிகழ்ச்சிகளில், கூடாதவன் அல்லது கெட்டவன் அவன் செயல்களுக்கு ஒருபோதும் தண்டிக்கப் படுவதாகவோ, அல்லது அவன்தான் ஒரு குற்றச்செயலுக்குப் பொறுப்பானவன் என்றோ இறுதியில் காட்டப்படுவதில்லை என்பதும் ஒரு அநியாய விவாதம்.

குழந்தைகள் மனதில் உள்வாங்கிக் கொள்ளும் வன்முறைக் காட்சிகளானது, அவர்கள் மனதில் அதிர்ச்சியையும், கலவரம், பயம் மற்றும் கொடூர மனப்போக்கையும் பதியச் செய்து விடுகின்றன. ஆராய்ச்சிக் கூற்றுக்களின்படி, 2வயதிலிருந்து 7வயதுக் குட்பட்ட குழந்தைகள் தான் பொதுவில் பயங்கர உருவகங்களைப் பார்த்துப் பயப்படுவது மட்டுமல்லாமல், அம்மாதிரி உருவங்களை மனதிலும் பூதாகரமாக இருத்திக் கொள்கின்றன. ஆனால் இந்த மாதிரி பயங்கரமான உருவங்கள் உண்மையில் உலகத்தில் இல்லை என்று யாரும் அவர்களுக்கு எடுத்துச் சொன்னாலும், குழந்தைகளின் பிஞ்சுமனதை அந்தக் கூற்றுக்கள் எவ்விதத்திலும் சமாதானப் படுத்துவதில்லை. ஏனெனில் குழந்தைகள் தானே, அவர்களுக்குள்ளே கள்ளமில்லா மனதில், உண்மைக்கும், கற்பனைக்கும் உள்ள வித்தியாசங்கள் பொதுவில் வெளிப்படுவதில்லை.

8வயதிலிருந்து 12வயதுக்குட்பட்ட பிள்ளைகள், வன்முறைக்காட்சிகள், இயற்கையில் ஏற்படும் அனர்த்தங்கள், குழந்தைக் கொடுமைகள் போன்றவைகள் திரையில் அல்லது கதைப்புத்தகங்களில் வந்தால், அல்லது செய்திகளில் காட்டப்பட்டால், அன்றில் உண்மைச் சம்பவங்களாக சித்திரிக்கப் பட்டிருந்தாலும் கூட, அவற்றைப் பார்த்து மனதில் தாமாக கற்பனைக் கோடுகளைக் கீறி மனதில் பயத்தை வளர்த்துக் கொள்கின்றன. இந்த வயதின் காலகட்டத்தில், அவர்களிடம் இதிலுள்ள சரி,பிழைகளை எடுத்துச் சொல்லி, மனதை மாற்றுவது அவ்வளவு ஒரு சிரமமான காரியமாக இருக்காது. என்ன சம்பவமாகத் தான் இருக்கட்டுமே, பிள்ளைகளை இம்மாதிரி நிகழ்ச்சிகளைத் தொலைக்காட்சியில் பார்க்காமல் அறவே தவிர்க்கச் செய்வது தான் புத்திசாலித்தனமான செயலாகும்.

## அசாத்திய, அசட்டுத்தனமான பழக்கவழக்கங்கள்

சில தொலைக்காட்சி நிகழ்ச்சிகளும், விளம்பரங்களும், சில அசட்டுத் தனமான, சரியென்று வாதிட, நினைக்கக்கூடிய சில செய்திகளைக் கொண்டு வருவதுண்டு. அதாவது, ஆண்,பெண் உறவு மற்றும் போதை வஸ்துக்கள் போன்றன பாவிப்பது போன்ற காட்சிகளைச் சித்தரிப்பது, ஒரு உற்சாகமான பொழுது போக்கும் சம்பவங்களென நம்பும்படி குழந்தைகள் மனதில் பதிந்துவிடும். அம்மாதிரி காரியங்களில் தாமும் ஈடுபடுவது தப்பில்லை என்று ரீதியில் நினைக்கத் தலைப்படுவார்கள். அத்துடன் இவ்வாறு தொலைக்காட்சிகளில் பார்க்கும், மது அருந்துதல், புகை பிடித்தல், போதை வஸ்துக்களைக் கையாளுதல் போன்ற காட்சிகளிலுள்ள நல்லது, கெட்டதுகளை பெற்றோரும், பிள்ளைகளுமாக ஒருங்கே அமர்ந்து, தாம் பெற்ற பிள்ளைகளிடமே விவாதித்தால் நிச்சயம் நல்ல பலனையும், மாற்றத்தையும் குழந்தைகளிடத்தே காணலாம் என்பதில் எவ்வித ஐயமுமில்லை.

■ ■ ■

# (மீ)தேன் வந்து பாயுது காதினிலே...

- மாமூலன் -

**ஈழத்தைச் சுற்றிலும் எரிபொருள் வளம் உள்ளது! உலகின் பொருளாதார அடுக்குளில் வர விருக்கும் மாற்றத்தின் முன்னோடியான புதிய எரிபொருள் தற்போது கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. இது ஈழத்தின் மற்றும் இந்தியத் துணைக் கண்டப் பகுதிகளில் மிக அதிகம் காணப்படுகிறது.**

ஈழத்தைச் சுற்றி எரிபொருள் வளமிருப்பது உறுதிப்பட்டிருக்கிறது. ஆனால் முன்னெல்லோரும் கதைத்ததுமாதிரி எண்ணை வளமல்ல அது. அதுவும் மன்னார் பாக்கு நீரிணைப் பகுதியில் மட்டுமே இருக்கவில்லை. ஈழத்தின் கடல் எல்லைகள் அனைத்திலும் கடற்கரையோரத்தில் நீக்கமற நிறைந்திருக்கிறது இந்த வளம்.

கொள்ளிவாய்ப் பிசாசுக் கதைகள் பலருக்கும் தெரிந்திருக்கும். அதற்கு என்ன காரணம் என்பது சிலருக்குத் தெரிந்திருக்கும். அந்தக் கொள்ளிவாய்ப் பேய் உருவாவதற்கு மிதேன் வாயு சேற்று நிலத்தில் உருவாகி காற்றில் கலக்கும் போது எரிந்து வெடிப்பதுதான் காரணம். மாட்டுச் சாணம் கிடந்து சிதையும் போதே இந்த வாயு உருவாகிவிடும்.

உலக வரலாற்றைப் புரட்டிப்போடப்போகிறது கடற்கரையில் கிடைக்கின்ற ஓர் பொருளாதார அமுதம். அது வாழ்வளிக்குமா சீரழிக்குமா? என்று குழம்பப்போகிறது உலகம்.

### ஒரு பின்னோட்டம்:

தெற்குச் சீனாவின் சென்சென் துறைமுகத்தில் கூடியிருந்த விஞ்ஞானிகள் அனைவரும் மகிழ்ச்சியில் திளைத்தனர். செங்சியொங் யாங் மற்றும் நெஞ்சியு வூ ஆகிய இருவரும் இந்தக் குழுவின் ஆய்வு நோக்கத்துக்கு தலைமை வகித்தனர். அவர்களைச் சீனாவின் வரலாறு வரலாற்று நாயகர்கள் என்று நினைவில் வைக்கப்போகின்றது.

அப்படி என்னதான் கண்டறியப்பட்டது அங்கே?

எதிர்வரும்காலத்தில் சீனாவின் உலக நிலையை மாற்றிப்போடவிருக்கும் ஓர் புதிய எரிபொருளின் கண்டுபிடிப்புத்தான் அது. கடலின் அடியில் ஏறத்தாள 3மைல் ஆழத்தில் இருந்து வெளிக்கொணரப்பட்ட சேற்றுக் கழிமண் பனிக்குழம்பி. அனால் எரிபொருள் திறனில் தற்போதைய நிலக்கரி மற்றும் எண்ணை போன்றவற்றையும் விட அதிக திறன் வாய்ந்தது.

சீன ஆய்வாளர்கள் கண்டுபிடித்த பளிங்கு வாயுவின் படிவம் போலவே இந்திய ஆய்வாளர்களும் 500அடி தடிமனான ஓர் படிவை ஆந்திரக் கடற் படுக்கையில் கண்டுபிடித்திருக்கிறார்கள். அந்தமான் தீவுப் பகுதியிலும் அரைமைல் தடிமனான படிவு ஒன்று கண்டுபிடிக்கப்பட்டிருக்கிறது.

### கொள்ளிவாய்ப்பேயின் மூலம்:

உண்மையில் இந்த எரிபொருள் - மீதேன் ஐதரேற்று - (Methane hydrate) 1970 இல் முதல் முதலில் எரிபொருளாகக் கண்டறியப்பட்டது. இது உறைநிலையில் கடலுக்கடியில் இருப்பது. ஆனால் அந்நிலையிலேயே எரியக்கூடியது.

பளிங்கு வாயு, குளிர்வாயு, ஐஸ் மீதேன் என்ற பல பிற பொதுப் பெயர்களால் அழைக்கப்படும் இதன் உண்மை வேதியியல் பெயர் மீதேன் ஐதரேற்று என்பதாகும்.

கொள்ளிவாய்ப்பேயின் காரணமும் இதுவே. உண்மையில் 'கொள்ளி வாய்ப்பேயா' அல்லது 'கொள்ளி வாயு' என்பதா என்றும் தமிழாய்வுக்கு ஒரு இடமுண்டு. சித்தர்-மரபில் வந்த பகுத்தறிவுடன் கூடிய தமிழர் அறிவியல் ஒன்றின் தொடர்ச்சி எமக்கு உள்ளதையும் ஒப்புநோக்கவேண்டும். இவ் வாயு திடீரென்று தீப்பற்றி காட்டில் எரி-



வதால் கொள்ளிவாயு என்ற காரணப் பெயரை எம் முன்னோர் இட்டிருப்பர் என்றே கருதுகிறேன்.

உறைபனிக் கலவையாக இது நிலக்கீழ் புவியடுக்குகளில் இவை உள்ளது. அதிக கார்பன் - கரியமில உள்ளீடு கொண்டது.




அதிகளவில் புவியில் பொதிந்திருக்கின்றது. இது கடலுக்கடியில் சாம்பல் கலந்த வெள்ளை நிறத்தில் சில வேளைகளில் கந்தகத்துடன் இரும்பு போன்றவற்றுடன் சேர்வதால் வெளிறிய மஞ்சள் நிறத்தில் வெளிப்படையாகவும் அரிதாகத் தென்படுகிறன்றது.

உறைநிலையில் நீரும் மிதேன் வாயுவும் சந்திக்கும் போது அங்கு உருவாகும் கலவைப் பனியில் மிதேன் வாயு பொதிந்து கிடக்கிறது. பின்னர் பலநூற்றாண்டுகள் பனியில் பொதிந்திருக்கும் அந்த வாயு நீரில் உள்ள ஐதரசனுடன் கலந்து மீதேன் ஐதரேற்றாக மாறுகிறது. நீரின் அடி ஆழத்தில் இருப்பதால் கிட்டும் அமுக்கமும் இதற்கு ஒரு காரணியாகிறது.

இந்தக் குளிர் மீதேன் பிற கோள்களில் உள்ள தட்வெப்ப நிலையில்தான் தோன்றும் என்று முன்பு அறிவியலாளர் நம்பினர். பின்னர்தான் 1970களில் இது கடலுக்கு அடியில் உள்ள சூழ்நிலையிலும் உருவாகும் என்று கண்டுபிடித்தனர். ஆனால் இவ்வளவு பரவாலாக உள்ளதும் எளிதாக எடுக்கக் கூடியதும் தற்போதைய - அண்மைய கண்டுபிடிப்புக்கள்தான்.

முறையான அழுத்தம் இருப்பின் இந்த குளிர் மீதேன் அல்லது மீதேன் ஐதரேற்று நிலையாக - பாதிப்படையாமல் 18 பாகை செல்சியசு வரையிலும் இருக்கும். அதாவது முறையான அமுக்கத்துடன் இதைக் கையில் வைத்திருக்கலாம். எரியாது. அமுக்கம் குறைந்தால் தானாக வளியுடன் சேர்ந்து எரியத் தொடங்கிவிடும்.

### புதிய எரிபொருள் மீதான புவி அரசியல்:

இது மேற்கு நாடுகளுக்கு ஒரு வகையில் விளையாட்டுப் பொருள் போன்றது. ஆனால் பொருளாதாரத்தில் மேற்கு நாடுகளை விரைந்து பின்தள்ளிக்கொண்டிருக்கும் சீனா, இந்தியா, தென்கொரியா, தாய்வான் போன்றவற்றிற்கு இந்த எரிபொருள் மூல ஆயுதம். இந்த வரிசையில் சேர்த்துக் கொள்ளக்கூடிய ஒரு நாடு இலங்கை. அதாவது தமிழரின் நிலப்பகுதி - ஈழம்.

இலங்கையில் உள்ள தமிழரின் நிலப்பகுதி ஓர் தனியலகாக எவ்வகையிலாவது ஆகும் நிலையில் அதன் பொருளாதார பலத்துக்கு முதுகுத்தண்டாக இந்தக் கண்டுபிடிப்பு - எரிபொருள் - அமையப்போகின்றது.

இலங்கையின் கடற்பரப்பில் பெரும்பகுதி ஒப்பீட்டளவில் ஈழத்திடம் உள்ளது. உலக அளவில் ஒப்பிட்டுப் பார்க்கையில் இந்தக் கடற்பகுதியில் நிறைந்துள்ளது மீதேன் ஐதரேற்று. (படத்தைப் 1ஐ பார்க்க).

ஒவ்வொரு நாட்டிற்கும் கடல் எல்லை 200 கடல்மைல் பரப்பளவிற்குச் சுற்றிப் படர்ந்திருக்கும். அந்தக் கடல் எல்லை முழுவதுமே ஈழத்திற்கு மீதேன் ஐதரேற்று எரிபொருள் நிறைந்துள்ளது. பிற நாடுகளுடன் ஒப்பிடுகையில் செறிந்துள்ளது எனலாம்.

கடலுக்கடியில் உறைந்துள்ள இந்த மீதேன் ஐதரேற்றுவைப் பயன்படுத்துவதில் யாரும் இதுவரை தீவிரம் காட்டவில்லை. பிரித்தெடுப்பு வழிமுறைகள் முனைப்பாகக் கண்டுபிடிக்கப்படவில்லை.

அமரெிக்கா, ஐரோப்பிய ஒன்றியம் போன்ற நாடுகளின் தந்திரம் ஒருபக்கம் இதற்குக்

67ம் பக்கம் பார்க்க...

66ம் பக்கத் தொடர்ச்சி...

காரணம். சிறிய நாடுகள் கூட இந்த

எரிபொருளை வளப்படுத்தினால் பொருளா தார நலம் பெற்றுத் தங்கள் கைப்பிடியில் இருந்து போய்விடுமோ என்ற பயம்.

சுற்றச் சூழல் பாதிப்பு நடந்துவிடும்என்ற பயம் மற்றாரு பக்கம் தடையாக இருந்து வருகின்றது. இந்தப் பயம் தேவையற்றது என்பது தற்போது பல வகைகளிலும் நிரூபிக்கப்பட்டு வருகின்றது.

யேர்மனியின் கடல்வள ஆய்வு மையத்-தினைச்சேர்ந்த கிளாஸ் வால்மான் என்பவர் சுற்றுச்சூழல் பாதிப்பைத் தடுக்கவும் அதே வேளை குளிர்மீதேன் வாயுவைப் பயன் படுத்தி எரிசக்தியைப் பெறவும் பின்வருமாறு வழி சொல்கிறார்.

தற்போதைய சுற்றுச்சுழல் பாதிப்பைத்தரும் வாயுவான காபனீரொட்சைட்டு வாயுவை குளிர் மீதேனுக்குள் செலுத்தினால் அது காபனீரொட்சைட்டை நாலு மடங்காக குறைத்துவிடும் தன்மை கொண்டது.

இந்த வழிமுறையை வலிந்து உலகில் முன்வைத்தால் யாரும் ஏற்றுக் கொள்ளப் போவதில்லை. இது நேரடியாக எளிதாக அந்த எரிபொருளை எடுக்காமல் தலையைச் சுற்றி மூக்கைத்தொடும் கதையாகும்.

ஆனால் அவரே பின்வருமாறு சொல்கிறார் ‘இந்தியாவும் சீனாவும் மேற்குலக நாடுகள் தங்கள் விரைவான மிதேன் பயன்பாட்டைத் தடுக்கின்றன என்று இதனால் அஞ்சக்கூடும்’.

1லிற்றர் குளிர் மீதேனில் 168லிற்றர் மீதேன் வாயு, அதாவது எரிபொருள் இருக்கும்.

400க்கு அருகே 15சுழிகளைப் போட்டுக் கொள்ளுங்கள். உலகில் இன்றிருக்கும் எரிபொருளைவிட இத்தனை மடங்கு அதிக மான அளவு மீதேன் ஐதரேற்று கடலில் பொதிந்துள்ளது.

அதாவது ஏறக்குறைய 4000 ஆண்டுக்கான உலகின் எரிபொருள் தேவை நிறைவடைந்து விடும்.

இந்த நிலையில் மற்றுமொரு கருத்தும் முன்னெழுகிறது. மனித குலம் மிகவும் குறைந்த தேவைகளுடன் வாழும் நிலை ஏற்படலாம். எரிபொருளுக்கான செலவு குறையும் போது மீதி அனைத்துக்குமான விலையும் குறையும் நிலைவருகிறதே! கனவு காணும் ஊத்தோபியாவை உருவாக்க ஒவ்-வொரு நாடும் முனையலாம்?

கிளின்ரன் ஆட்சியில் இருந்த காலத்தில் அமெரிக்காவில் நிறைவேற்றப்பட்ட சிறப்புச் சட்டம்(எண்2000) பல்கலைக்கழகங்களை யும் ஆய்வு நிறுவனங்களையும் இந்த குளிர் மீதேன் அல்லது மீதேன் ஐதேற்றுவை 2015 ஆவது ஆண்டில் எரிசக்தியாகப் பயன்படுத்த வழிவகை சொல்லுமாறு கேட்டுக்கொண்டது. அமெரிக்காவின் மேற்குக் கரையோரங்களில் கூட இது கிடைக்கிறது. ( கிளின்ரன் அரசு செய்த இதெல்லாம் தெரியாத அண்ணாச்சி புச் எண்ணைப் பிரச்சினையை மறைமுக மாக முன்வைத்து ஈராக்கின்மீது போர் தொடுத்தார். அந்தத்தேவை எதுவுமில்லா மல் செய்துவிடுகிறது குளிர் மீதேன். பாவம் இறந்துபோன அமெரிக்கச் சிப்பாய்கள்)

இதில் கொஞ்சம் ஈழத்தோடு சேர்த்து சுவை யூட்டக்கூடிய செய்தி என்னவென்றால் நோர்வேயைச் சுற்றிலும் இந்தக் குளிர்மீதேன் படிம் நிறையவே உள்ளது என்பதுதான். அதனையும் விட நோர்வேயின் பெர்கன் பல்கலைக் கழகம் இந்த குளிர் மீதேன் வாயு வைப் பயன்படுத்தும் வழிமுறைகளைப் பல காலம் தொடர்ந்து ஆய்ந்து வருவதும் குறிப்பிடத்தக்கது. அவர்கள் சுற்றுச் சூழலுக்கு மாசில்லாமல் இந்த எரிசகத்தியைப் பயன் படுத்தும் எளிதான வழியையும் கண்டறிந்து வைத்திருக்கிறார்கள்.

■ ■ ■

# உலகின் 'தலைசிறந்த' கொள்ளைக்கார ஜனாதிபதிகள்



- ரதன் -

## Carlyle Group (Ex President's Club), Bin Laden Group and Halliburton Group

இந்த நிறுவனத்தில் செப்ரெம்பர் 11ன் நிகழ்வின் போது பின் லாடனின் உறவினர்களின் சுமார் 2.4 மில்லியன் டொலர் ஆரம்ப முதலீடு இருந்ததாக குற்றஞ்சாட்டப்பட்டது. Carlyle Partners II Fundல் சுமார் 103 கோடி முதலீடு இருந்தது. இந்த அனைத்து முதலீடும் பின் லாடன் குடும்பத்துக்கே உரிய, பின்லாடன் நிறுவனத்துக்குரியதாக இருந்தது. இந்த நிறுவனம் போர் விமானம் தயாரிக்கும் 29 நிறுவனங்களை தங்கள் கைக்குள் வைத்திருந்தது. Carlyle Groupக்கு சொந்தமாக சுமார் 164 நிறுவனங்கள் உலகெங்கும் உள்ளன. இதன் மொத்தச் சொத்து 17,650 கோடி டொலர்களாகும். புஸ் இந்த நிறுவனத்தின் Board of Directors ஆக கடமையாற்றினார். இவர் இந்த நிறுவனத்திற்காக பேசிய பேச்சிற்காக ஒவ்வொரு பேச்சிற்கும் 80,000டொலரில் இருந்து 100,000டொலர் வரை கிடைத்தது.

இந்த நிறுவனம் அமெரிக்க இராணுவ ஆலோசகராக கடமையாற்றியுள்ளது.

ஆயெத்துலா கொமெய்னியை ஈரானிலிருந்து வெளியேற்றும் முயற்சிகளுக்கு ஆலோசகராக செயற்பட்டது. குவைத் சுமார் 100 கோடி டொலர்களை இந்த நிறுவனத்தில் முதலீடு செய்துள்ளது. அது மட்டுமல்ல ஈராக் கொடுக்க வேண்டிய 570 கோடி கடன் குவைத்துக்கு மாற்றப்பட்டது. இப்பொழுது இதனை குவைத் இந்த நிறுவனத்துக்கு வழங்கும். இது குளறுபடியாக உள்ளது. ஆம். பல திறனாய்வாளர்களும், தலையை பிய்த்துக் கொள்கின்றார்கள். ஆப்கான் போரின் பின்னர் சுமார் 320 கோடி வருமானத்தை இராணுவ ஆலோசனைக்காக மட்டும் பெற்றுள்ளது இந்த நிறுவனம்.

எண்ணெய்யை இரத்தமாக மாற்றும் மாய கொடூர வேலையில் முழு மூச்சாக ஈடுபட்டது. http://www.hereinreality.com/news/axis.html

## சில குறிப்புக்கள்

- Enron and Global Crossing தமது முதலா வது வியாபாரத்ததை தொடக்கி வைத்தனர்
- Arthur Andersen is Global Crossing's auditor (ஆதர் அண்டர்சன் மிக மோசடி மிகுந்த கணக்கு பரிசோதனை நிறுவனம் என நிரூபிக்கப்பட்டது.)
- Global Crossing ன் உதவித் தலைவர் அந்த நிறுவனம் முதலீட்டாளர்கன் பணத்தில் மோசடி செய்வதாக குற்றஞசாட்டடினார்
- Arthur Andersen kept the books for Qwest, too
- On January 7, 2002, Qwest தலைவர் Joseph P. Nacchio அமெரிக்க Federal Communications Commission's (FCC) Network Reliability ம் Interoperability Council (NRIC) தலைவராக நியமிக்கப்பட்டவர்.
- Qwest bought $300 million worth of Enron stock in December, as Enron was collapsing
- Carlyle has also invested in Global Crossing, Nextel and Nortel
- Until October 11, 2001, William E. Conway, Carlyle Group Founder and Director, was also Director of Global Crossing

## பின் லாடன் குறுாப்

மொகமட் பின் வாடனின் 51 பிள்ளைகளில் ஒருவாரக பிறந்த பின் லாடன், சவூதி அரச குடும்ப அனுசரனையுடன் 5 மில்லியன் டொலர் வருமானம் பெற்ற நிறுவனத்தை சுமார் 50 கோடிக்கு வளர்த்தார். 1950களில் ஆரம்பிக்கப்பட்ட இந்த நிறுவனம், பல ஹொட்டல்கள், பாரிய கட்டிடங்கள் போன்ற பலவற்றை கட்டியுள்ளது. தந்தை மொகமட் பின் லாடனின் முன்னோர்கள், தெற்கு யேமன் நாட்டில் இருந்து குடி பெயர்ந்தனர். 1979ல் மெக்கா நகரை நவீனமயமாக்கல் இந்த நிறுவனத்துக்குக் கிடைத்தது. அதனைத் தொடர்ந்து இவர்களது லாரிகள் நகருக்குள் சுதந்திரமாக வரத்தொடங்கின. அப்பொழுது ஆயுதங்களை சுதந்திரமாக தீவிரவாதிகள் கடத்தினர். 1988ல் 4300 அமெரிக்க இராணுவ வீரர்கள் தங்குவதற்காக ரியாத்துக்கு அருகில் கட்டிய கட்டிடத்தில் இருந்து அமெரிக்காவுக்கும், பின் லாடன் குறுாப்பிற்கும் தொடர்புகள் தொடங்கின. இந் நிறுவனம் சுமார் ஒரு மில்லியன் டொலர் Harvard Law Schoolக்கும் Harvard's Graduate School of Design க்கும் கொடுத்துள்ளது,
1979ல் ஜனாதிபதி புஷ்ஷின் முதலாவது வியாபாரமான Arbusto Energyல் பாத் என்ற புஸ்ஸின் நண்பர் 50,000 டொலர் முதலீடு செய்தார். இவர், பின் லாடன் நிறுவனத்தின் அமெரிக்க முகவராக செயல்பட்டவர். அமெரிக்க சரித்திரத்தில் நடைபெற்ற மிக மோசமான வங்கி மோசடி செய்த வங்கி Bank of Commerce and Credit International (BCCI). சுமார் 10மில்லியன் டொலர் மக்கள் பணத்தை கொள்ளையடித்தது. இந்த வங்கியுடன் பாத்துக்கும், பின் லாடன் நிறுவனத்துக்கும் தொடர்பு இருந்தது.




முன்னாள் அமெரிக்க ஜனாதிபதி ஜிம்மி காட்டருக்கு, பின் லாடனின் தம்பி, Bakr M. Bin Laden சுமார் ஒரு மில்லியன் டொலர் பணத்தை பின் லாடன் குறுாப்பினுாடாக வழங்கியமை உறுதிப்படுத்தப்பட்டுள்ளது.

1990ல் குவைத்தில் இருந்து, ஈராக்கையும், சதாமையும் வெளியேற்றுமாறு, பின்லாடன் குறுாப் புஸ்ஸின் தந்தையைக் கேட்டு பெரும் பணமும் வழங்கியது. அதே போல் ஆவணி 2001ல் யசீர் அரபாத் நியுயோாக் நகரில் U.N.ல் பேச வந்த பொழுது, அவரை வெளியேற்றுமாறு, தற்போதைய ஜனாதிபதி வேட்பாளரும், முன்னாள் நியுயோர்க் மேயருமான Giulianiஜ பின் லாடன் குறுாப் கேட்டு பணமும் வழங்கியது.

## Halliburton Group

Government Accounting Office சுமார் 58.7 கோடி டொலர் பெறுமதி மிக்க ஈராக் புனரமைக்கும் திட்டத்தை எந்த நிறுவனங்களது போட்டியுமின்றி வழங்கியது. முறைப்படி இதற்கான விளம்பரங்களும், விண்ணப்பங்களும் பெறவில்லை.

ஈராக்கில் உள்ள அமெரிக்க படைகளுக்கு உணவு, எண்ணெய், வீடு, போக்குவரத்து போன்றனவற்றை ஏற்பாடு செய்வதற்காக சுமார் 8 பில்லியன் டாலர்கள் ஒப்பந்தம் வழங்கப்பட்டது. இதனை சரியாக செய்யாததுடன், சுமார் 40 விகிதம் அதிகமாகவும் பெற்றுள்ளது. 42,000 உணவு பொதிகள் வழங்கியதாக அரசிடம் பணம் பெற்ற நிறுவனம், வெறும் 14,000 பொதிகளையே வழங்கியுள்ளது.

ஈராக்கில் உற்பத்தியாகும் சோடா (24 போத்தல்கள்) 45 டாலர்கள் ஒரு கேசிற்கு அறவிட்டுள்ளது. ஒரு சலவைப் பை கழுவுவதற்கு 100 டாலர்கள் அறவிட்டுள்ளது. ஆனால் அங்கு வேலை செய்யும் தொழிலாளிகளுக்கு வெறும் 50 சதங்களையே ஒரு மணிக்கு வழங்கியுள்ளது.

சுமார் 85,000 ரக்குகள் செயலிழந்துள்ளன. துருக்கி, பிலிப்பைன் தொழிலாளர்களுக்கு எச்சில் பண்டங்களை உணவாக வழங்கியுள்ளது.

ஈராக்கின் வட பகுதியில் இருந்து ஏற்றுமதியாகும் எண்ணெய்யின் அளவு பெருமளவு குறைந்துள்ளது. எண்ணெய்க் கிடங்குகள் அனுமதியற்ற இடங்களில் தோண்டியுள்ளனர். பிழையான முறையில் தோண்டியுள்ளார்கள். ஒரு நாளைக்கு எண்ணெய் ஏற்றுமதி 5 மில்லியன் டாலர்கள் இதனால் ஈராக்கிற்கு நட்டம். அப்படியிருந்தும் அமெரிக்கா தொடர்ச்சியாக இவர்களுக்கு பணத்தை வழங்கியுள்ளது.

Halliburton went from paying $302 million in company taxes in 1998 to getting an $85 million tax refund in 1999.
கத்திரீனா வால் பாதிப்படைந்த பகுதிகளை சுத்திகரிக்க கலிபேட்டன் வேலை அனுமதிப் பத்திரம் இல்லாதவர்களை வேலையில் அமர்த்தியுள்ளனர்.

69ம் பக்கம் பார்க்க...

## Binladen Group's Friends



**Osama Bin Laden**
Family Member

THE CARLYLE GROUP

**Carlyle Group**
Significant Investors



**Salem bin Laden**
CEO and president

HARKEN ENERGY CORPORATION

Made shady deals together. See details.



**Adnan Khashoggi**
Long-time business partners



**George H. W. Bush**
In the 1970's, Salem Bin Laden, the eldest of Osama Bin Laden's 55 brothers and sisters, invested heavily in George H. W. Bush's first business venture, Arbusto Energy.



**James Baker**
Binladen Group and Baker are partners in the Carlyle Group.

**Mark Lombardi**
Lombardi's drawings purport to document financial and political frauds by power brokers. His 1999 drawing, entitled George W. Bush, Harken Energy and Jackson Stephens, ca 1979-90, shows the proven co...

## Meet The Carlyle Group

### Former World Leaders and Washington Insiders Making Billions in the War on Terrorism

| Bush | Carlucci | Baker | Darman | Ramos | Major |
|---|---|---|---|---|---|
|  |  |  |  |  |  |
| Former US President and Vice President Former Director of the CIA | Former Secretary of Defense and Deputy Director of the CIA | Former Secretary of State and Sec. of Treasury | White House Budget Advisor Bush / Clinton Administrations | Former President of the Philippines | Former British Prime Minister |
| **Carlyle Senior Advisor** Retired 10/03 Shareholder | **Carlyle Chairman Emeritus** Retired 03/05 | **Carlyle Senior Counselor** Retired 2005 | **Carlyle Managing Director** | **Carlyle Asia Advisory Board** | **Carlyle Europe Chairman** |

### Carlyle Groupன் ஆலோசகர்களாகவும், அதிகாரிகளாகவும் பின்வரும் அரசியல் அதிகாரிகள் கடமையாற்றியுள்ளனர்.

| | |
|---|---|
| Frank Carlucci | Department of Health, Education and Welfare - 1970's<br>Deputy Director, CIA - 1978-81<br>Deputy Secretary of Defense -198182<br>National Security Director - 1987-89 |
| George Bush | CIA Director - 1976-77<br>Vice President of the United States - 1981-89<br>President of the United States - 1989-93 |
| James Baker | Chief of Staff - 1981-85<br>Secretary of the Treasury - 1985-89<br>Secretary of State - 1989-93 |
| Dick Darman | Former White House Budget Chief |
| William Kennard | Former Head, FCC |
| Arthur Levitt | Former Head, SEC |
| John Major | Former Prime Minister, Britain |

| | |
|---|---|
| Fidel Ramos | Former Philippine President |
| Afsaneh Beschloss | Treasurer & Chief Investment Officer of the World Bank |
| Anand Panyarachum | Former President, Thailand |
| Karl Otto Pohl | Former President, Bundesbank |
| Louis Vuitton | French Aerobus Company |
| Park Tae Joon | Former South Korean Prime Minister |
| Alwaleed Sin Talal bin Abdulaziz Alsaud | Saudi Arabian Prince |
| George Soros | New World Order/Bilderberg luminary & int'l financier |
| Fred Malek | George Bush Sr's campaign manager |
| Norman Pearlstine | Editor-in-chief of Time (1995-2005) |

# குளியல் அறை மறுசீரமைப்பு செய்தல்

- மகேன் சிங்கராஜா -

குளியல் அறை, சமையல் அறை ஆகியன எவ்வாறு பராமரிக்கப் பட்டுள்ளன என்பது ஒரு வீட்டின் சந்தைப் பெறுமானத்தை நிர்ணயிக்கும் காரணமாக அமைகின்றது என்பது அடிப்படை உண்மையாகும். எனவே ஒரு வீட்டை சீரமைப்பு (renovation) செய்யும்போது இவ்விரு பகுதிகளையும் பற்றிக் கூடிய கவனம் செலுத்த வேண்டும்.

ஒரு குளியல் அறையை புனர் நிர்மானம் செய்வதற்கு மிகக் குறைந்தது 4,000 டொலர்கள் தேவை. மிகவும் ஆடம்பரமான மாளிகைகளில் இந்த அறையை மீளத் திருத்தி அமைப்பதற்கு ஒரு இலட்சம் டொலர் களுக்கு அதிகமாக செலவு ஏற்படுகின்றது. எந்த வகைக் குளியல் அறையும் அடிப் படையான சில அமைப்புக்களைக் கொண்டி ருக்க வேண்டியது அவசியம். அதே வேளை சரியான திட்டமிடல், சிறந்த வடிவமைப்பு என்பன இந்த அறைக்கு மிக அழகான புறத்தோற்றத்தை ஏற்படுத்து வதாக அமையும்.

பொதுவாக குளியலறைத் தரை அல்லது சுவரில் அமைக்கப்பட்டுள்ள ஓடுகள் (Tiles), கழிவகற்றி, குளியல்த் தொட்டி (Bath Tub) நீர்சொரி கருவி (Shower) ஆகியன எவ்வாறு தோற்றம் அளிக்கின்றன என்பதன் அடிப்படையிலேயே இந்த அறை புனர் நிர்மாணம் செய்யப்பட வேண்டுமா இல்லையா என்று ஓர் வீட்டு உரிமையாளர் முடிவு செய்வது வழக்கம். அதே சமயம் சுவர்களில் சிராய்வு, சாயம் மங்கிக் காணப் படுதல் என்பனவும் அவதானிக்கப்படல் அவசியம். எந்த ஒரு குளியல் அறையிலும் அதன் ஆதாரத் தொகுதி அந்த அறையின் Plumping அமைப்பு முறையாகும். அதில் எந்தவித கசிதல் அல்லது வேறு பாரிய குறைபாடும் இல்லை என்பதனை முதலில் உறுதி செய்த பின்னரே அந்த அறையின் புறத் தோற்றம் தொடர்பான திருத்த வேலை களில் கவனம் செலுத்த வேண்டும்.

குளியல் அறை திருத்த வேலை தொடர் பாக அவதானிக்கப்பட வேண்டிய பிரதான விடயங்கள் கீழே குறிப்பிடப்படுகின்றன.

## தரைப் பகுதி (Flooring)



உங்களது குளியலறையின் தரையில் கல், களிஓடு (ceramic tile) அல்லது மாபிள் (porcelain) ஆகிய எந்தவித ஓடுகளையும் பதிக்கலாம். தக்கை (cork) ஈரலிப்பு எதிர்ப் புத் தன்மை உடையது என்ற காரணத்தி னால் சிலர் இவ்வகையான தரை அமைப்பை விரும்புகின்றனர். அதே சமயம் வழுவழுப் பான மேற்பரப்புக்கள் ஈரமாகும்போது வழுக்கும் தன்மை கொண்டவை என்பது கவனத்தில்க் கொள்ளப்பட வேண்டும்.

வழுக்கும் தன்மை குறைவுடையது என்ற காரணத்தில் Mosaic ஓடுகளைப் பதிக்கும் முறையும் தற்போது பிரபலமாகி வருகின் றது. அதே வேளை ஈரலிப்பான பகுதிகளுக்கு ஏற்றவை எனக் கருதப்படும் தேக்கு அல்லது மூங்கில் மரப்பலகைகளும் குளியலறைத் தரைக்கு பொருத்தமானவையாகும்.

## அசையாத சொத்துக்கள் (Fixture)

உங்கள் வீட்டை விற்பனைக்காக தயார்ப் படுத்தும்போது அல்லது உங்கள் வதிவி டத்தை அழகுபடுத்தும்போதே குளியல் அறையில் உள்ள கழிவகற்றி, குளியல்த் தொட்டி, முகம் கழுவும் தொட்டி (Sink) ஆகியவற்றை புதியனவாக மாற்றிடு செய்யும்போது அவை வெள்ளை நிறம் உடையதாக இருத்தல் சிறந்தது. நீர்ச் சுழற்சி வகையான (whir pool type) குளியல் தொட்டி (Bath tub) யை அமைக்க



விரும்பினால் வழமையான அமைப்புக் கொண்டதான அல்லது காற்று விசை (Air-Jet) அமைப்புடையதான ஏதாவது ஒரு வகையைத் தெரிவு செய்யலாம்.

## ஒளியமைப்பு (Lighting)

சமையல் அறைப்பகுதியைப் போன்று குளி-யல் அறையிலும் ஒளி அமைப்பு பொருத்த மானதாக அமைக்கப்பட வேண்டியது அவசி யம். குறிப்பாக முகம் கழுவும் தொட்டிக்கு மேலே அமைந்துள்ள மின் குமிழ்கள் முகத்திற்கு மேலே அமைந்துள்ள மின் குமிழ்கள் முகத்திற்கு ஒளி படச்செய்வ தற்கு ஏற்றதாக அமைக்கப்படவேண்டும்.

71ம் பக்கம் பார்க்க...

# குளியல் அறை மறுசீரமைப்பு...

70ம் பக்கத் தொடர்ச்சி...

## நீர்க்குழாய் தொகுதி (Plumbing)

இந்த நாட்டில் பனிக்காலத்தின்போது frost ஏற்படுவதைத் தவிர்ப்பதற்கு, குளியல் அறையில் உள்ள குழாய்கள் வெப்பக் கசிவுத் தடுப்பு உடையனவா என்பதனை




உறுதிப் படுத்துதல் அவசியம்.

## காற்றோட்டம் (Ventilation)

குளியல் அறையில் சிறந்த காற்றோட்டம் தேவைப்படுவதால் சில சமயங்களில் சுவரில் அல்லது Ceiling பகுதியில் மின் விசிறிகள் அமைக்கப்படுவது வழக்கம். ஆனால் சமீப காலங்களில் மின்விசிறி – மின்குமிழ்கள் என்பன இணைந்த அமைப்புக்கள் பொருத் தப்படுதலை அவதானிக்க முடிகின்றது.

## மின் இணைப்பு

மின்சார அதிர்ச்சியில் இருந்து பாதுகாப்ப தற்காக குளியலறைச் சுவர்களில GFCI எனப்படும் வெளியேறு துளைகள் அமைக் கப்படுகின்றன. தலைமயிரை உலர்த்தும் கருவி, முகச் சவரம் செய்யும் கருவி போன்றன மின் உபகரணங்களை அல்லது சிறிய மின்சாரக் கருவிகளை உபயோகிக் கும்போது அவை நீருடன் தொடுகை ஏற்படும் வாய்ப்பு உண்டு. அவ்வாறான வேளைகளில் மின்சார அதிர்ச்சி ஏற்படாமல் இருக்க GFCI வெளியேறு துளைகள் பாது காப்பு வழங்குகின்றன. எனவே இந்தவகை யான மின் அமைப்புகள் பொருத்தப்படு வதை நீங்கள் நிச்சயம் கருத்தில்க் கொள்ள வேண்டும்.

## களஞ்சியப் படுத்தல் (Storage)

முகம் கழுவதற்கான தொட்டியின் கீழே உள்ள பகுதியை சிறந்த முறையில் பயன்படுத்தி அவசியமான பொருட்களை சேகரித்து வைக்கலாம் இந்தப் பகுதியில் துவாய்கள், சவர்க்காரம், சம்பூ என்பன வற்றை ஒழுங்கு படுத்தலாம். உங்களது குளியல் அறையில் Closet அமைக்கப்பட்டி ருந்தால் மேற்குறிப்பிட்ட பொருட்களை அந்தப் பகுதியில் வெவ்வேறு தட்டுக்களில் மிக அழகாக அடுக்கி வைக்கலாம்.

## சமையலறை அமைப்பு திட்டமிடுதல் (Kitchen Planning)

சமையல் அறை எவ்வாறு அமைய வேண் டும் என்பதற்கு அடிப்படையான பருமன் அளவுகளும் பொது விதி முறைகளும் உள்ளன. எந்த ஒரு சமையல் அறையி லும் அடுப்பு, குளிர்சாதனப் பெட்டி, கழுவும் தொட்டி ஆகிய மூன்றும் முக்கோண அடிப்படையில் அமைதல் வேண்டும். என்பதே மிகவும் முக்கியமான விதியாகும். சமையல் அறையில் பிரதானமானதான இந்த மூன்று உபகரணங்களும் அங்கு பணிபுரிவர் எவரும் வட்டமான சழற்சிப் பாதையில் இலகுவாக அசையக் கூடியதாக அமைக்கப்பட வேண்டும். அத்துடன் உபகரணங்களுக்கிடையில் 30'' இடைவெளி அவசியம். குறிப்பிட்ட ஓர் உபகரணத்தை சமையலறையில் ஒரு மூலையில் வைக்க வேண்டிய தேவை ஏற்பட்டால், அந்த மூலைக்கும் உபகரணத்திற்கும் இடையில் குறைந்தது 9'' இடைவெளி தேவை.

எந்தவிதமான மீளத் திருத்தல் வேலை களை ஆரம்பிப்பதற்கும் சரியான வகையில் திட்டமிடல் அவசியம். நவீன மாற்றங்க ளுக்கு ஏற்றதான புதிய எண்ணங்களை நன்கு பயன்படுத்தினால் நீங்கள் வாழும் இல்லத்தைப் புதுப்பொலிவுடையதாக மாற்ற முடியும். அத்துடன் உங்கள் இல்லத்தை விற்பதற்கு முடிவு செய்யும்போது நீங்கள் எடுத்த முயற்சிக்கு ஏற்ப உங்களது இருப்பிடத்தின் சந்தைப் பெறுமானமும் அதிகரிக்கும்.

■ ■ ■



# வெப்பமாக்கியை பராமரிக்காமல் விட்டால் பாரிய விளைவுகளை ஏற்படுத்தும்

ரஞ்சன் குமரேசையா
- வீடு விற்பனைப் பிரதிநிதி -



**Ignoring furnace maintenance can be a serious risk to your family.**

கனேடிய கடும் குளிர் ஆரம்பித்து விட்டது. பேணஸ்சால் (Furnace) ஏற்படக்கூடிய வற்றை விளக்குவது இக் கட்டுரையின் பிரதான நோக்கமாக உள்ளது.

காசில் (Gas)அல்லது ஒயிலில் (Oil) இயங்கும் வெப்பமாக்கியை பராமரிக்காது விடல் அல்லது அவை தனது முழு வினைத்திறனில் (Top efficiency இயங்கா திருத்தல் தேக ஆரோக்கிய (health Hazard)பாதிப்பை உங்கள் முழுக் குடும் பத்துக்கும் ஏற்படுத்தலாம்.

பேணஸ் மாத்திரமல்ல. Gasல் வேலை செய்யும் நீர் வெப்பமாக்கி (water heater), Fire place கூட பாரிய விளைவுகளை ஏற்படுத்தலாம் சரியாக பேணப்பாடவிடின்.

### பராமரிப்பு என்பது என்ன?

பராமரிப்பு என்பது ஒரு சில இடங்களில் பில்ரரை மாற்றுதல் தூசு தட்டுதல், பேணசின் அருகில் இருக்கும் பொருட் களை அகற்றுதல் என்பதல்ல.

இதைவிட இது பேணசுடன் சம்பந்தப்பட்ட பைப் (duct) புகை போக்கி, Fire place என்பவற்றை உள்ளடக்கியதாகும்.

### இந்த பேணசுக்குள் என்ன நடைபெறுகின்றது?

இந்த பேணசுக்குள் Gasம் வளியும் (Air) சரியான கலவையில் பூரண எரிவுக்கு உட்படல் வேண்டும்.



அரைகுறையாக எரியப்பட்டால் இது carbon monoxide என்ற நச்சுத்தன்மை வாய்ந்த வாயுவை உற்பத்தி செய்யலாம். இந்த அரை குறைவான எரிவிற்கு கசிவு (leak) தடைப்படல் (Blockage) என்பன காரணமாக அமையலாம்.

உங்கள் எல்லோருக்கும் தெரியும் மூடிய கராஜ்க்குள் காரை ஸ்ராட்டில் விட்டு நீண்ட நேரம் கராஜ்க்குள் இருந்தால் என்ன விளைவு என்பது.

இக்கட்டுரையின் நோக்கம் வீட்டிற்குள் Carbon monoxideஐ எப்படி தவிர்ப்ப தென்பதாகும்.

### Carbon monoxide (கரியமில (மொனோ) வாயு என்றால் என்ன?

1) நிறமற்ற நச்சுத்தன்மையாக வாயு.

2) உடலின் இரத்தத்தில் ஒக்சிசனை காவும் தன்மையை குறைத்துவிடும் தன்மை கொண்டது.

### இந்த வாயுவினால் உடலில் ஏற்படும் அறிகுறிகள் என்ன?

1) தலைவலி (headache)
2) குமட்டல் (Nausea)
3) தலைசுற்றல் (Dizziness)
4) விரைவான இதயத துடிப்பு (Heart Palpitation) என்பனவாகும்.

### மக்கள் விடும் பிழை என்ன?

இந்த அறிகுறிகளை Flu என நினைத்து வீட்டை விட்டு வெளியே போகாமல் படுக்கைக்கு போவதாகும்.

ஒவ்வொரு வருடமும் வட அமெரிக்கா வில் 1500 மரணங்களும், 10,000க்கும் மேற்பட்ட மக்களுக்கு வைத்திய உதவி யும் இந்த வாயுவினால் ஏற்படுகின்றன.

### எப்போது பிரச்சனைகள் உருவாகும்?

நன்றாக அடைக்கப்பட்ட வீட்டில் தூய வளி சரியான எரிதலுக்கு (Proper Combustion)க்கு கிடைக்காதிருப்பது பிரச் சினைக்குரிய விடயமாகும்.

- Furnance roomக்குள் வேலை தளத்தை (work shop)ஐ உருவாக்குதல்.
- பேணஸ் ரூமை சுவரினால், கதவு களினால் அடைத்தல். இது போன்ற செயற்பாடுகளினால் காற்று ஓட்டத்தை மட்டுப்படுத்தி முழுமையடையாத வெப்ப மாக்குதலை உருவாக்கி அதனால் Co வாயுவை உருவாக்குதல்.

■ ■ ■


அன்பே!
இந்த படங்களைப் பார்
நாங்கள் கட்டாயமாக
இவர்களைத்தான்
அழைக்க வேண்டும்....
idigiteyes
Photography
613.290.5773
www.iDigitEyes.com
Weddings • Portfolio • Modeling • Executive • Parties • Glamour
digi Media Creations

# புதுவீடு வாங்குபவர்கள் கவனத்திற்கு

செல்வா செல்வத்துரை
- வீடு விற்பனை முகவர்



புதுவீடு வாங்குபவர்கள் கவனத்திற்கு J.D.Power & Associate ஆய்வுசெய்து பின்வரும் வீடுகட்டும் கட்டிட நிறுவனங் களை அவரவர் திறமையின் அடிப்படையில் வரிசைப்படுத்தியுள்ளனர்:

- Trubirte Communities
- Mattamy Homes
- Brookfield Homes
- Arista Homes
- Great Gulf Homes
- Green Park Homes
- Starlane Homes
- Acorn Homes
- Monarch Homes
- Paradise Homes

and

- Heathwood Homes

இந்த வரிசையில் ஏறத்தாழ 28 கட்டிட நிறுவனங்களை (Builders) வரிசைப்படுத்தி யுள்ளனர். மேலதிக விவரங்களை jdpower.com இணையத்தளத்தில் பார்வையிட லாம்.

J.D.Power நிறுவனமானது கடந்த 8 வருடங்களாக இந்த ஆய்வை நிகழ்த்தி வருகின்றனர். இந்த நிறுவனத்தினர் உயர் தொடர்மாடிக் கட்டிட நிறுவனத்தினரையும் சிறிய கட்டிட நிறுவனங்களையும் தமது ஆய்வில் சேர்த்துக் கொள்வதில்லை. இதில் ஆச்சரியம் என்னவென்றால் இவர்கள் ஆய் வில் தெரிவுசெய்யப்பட்டவர்களால் மூன்றில் ஒரு பங்குவீடுகளே ரொறொன்ரோ பெரும் பாகத்தில் கட்டப்பட்டுள்ளது. மிகுதி மூன்றில் இரண்டு பகுதி வீடுகளும் ஆய்வில் புறக்கணிக்கப்பட்டவர்களால் கட்டப்பட்டது. இந்த புறக்கணிக்கப்பட்ட கட்டிட நிறுவனங் களில் சிலர் தெரிவு செய்யப்பட்டவர்களை விட மிகவும் நன்றாக கட்டுபவர்களாகக்கூட இருக்கலாம். ஆகையினால் இந்த ஆய்வு ஒரு கருத்துக் கணிப்பே தவிர, இதை அடிப்படையாக வைத்து வீடு வாங்குபவர் கள் தமது முடிவைத் தீர்மானிக்கத் தேவையில்லை என்பதையும் வலியுறுத்த விரும்புகிறேன்.

மற்றும் புதுவீடு வாங்குதல் என்பது நம் மவர்க்கு ஒரு புதுமையான அனுபவம். சிலர் புதுவீடு வாங்குவதால் தமக்கு எந்தவிதமான பிரச்சினைகளும் வாராது என எண்ணி, யாருடைய ஆலோசனைகளையும் பெறாது வாங்குகிறார்கள் என அறிந்து நான் மிகவும் கவலைப்படுகிறேன்.

பலர் புதுவீடு வாங்கும்போது (Agreement of purchase sale) ஒப்பந்தப் பத்திரத் தைக்கூட தமது சட்டத்தரணியிடம் காண் பித்து அதன் உள்ளடக்கத்தை ஆராயாமல் விடுகிறார்கள். இது மிகவும் ஒரு பாரதூர மான விளைவுகளை ஏற்படுத்தும் என்பது எனது அபிப்பிராயம். ஆகையினால் ஒரு சட்டத்தரணியிடம் இந்த பத்திரத்தைக் காட்டி ஆலோசனை பெறவும்.

சிலர், புதுவீடு வாங்கும்போது வீடுவிற்பனை முகவர்களை அணுகி ஆலோசனை கேட்ப தில்லை. ஏனெனில், அவர்கள் தவறான ஒரு அபிப்பிராயம் ஒன்றை வைத்திருக்கி றார்கள். அதாவது, பழைய விடுகள்வாங் கத்தான் (Re sale homes) வீடு விற்பனைப் பிரதிநிதிகள் தேவை என்று. ஆனால், அது தவறு. நீங்கள் நல்ல அனுபவம் வாய்ந்த ஒரு முகவரை உங்களுடன் அழைத்துச் செல்லுதல் ஒரு நல்ல விடயமாகும். இந்த நாட்டில் நீங்கள் பெரிய முதலீடுகள் எது செய்வதானாலும் உங்களுக்கு நம்பிக்கை யுள்ள ஒரு அனுபவம் வாய்ந்தவருடன் (அத்துறையில்) தொடர்புகொண்டு செயல் படுதல் நன்று.



புதுவீடு வாங்கும்போது மிகவும் முக்கிய மாக கவனிக்கப்பட வேண்டிய விடயங்கள் சிலவற்றை இங்கு குறிப்பிட விரும்புகிறேன்.

- எங்கு வீடு கட்டப்படப் போகிறது என்பது முக்கியம். (Location) சில சமயங்களில் விற்பனை நிலையம் ஒரு இடமாகவும், வீடு கட்டுமிடம் ஒரு இடமாகவும் இருக் கும். ஆகையால் அதை அறிந்து கொள் ளுதல் முக்கியம். அத்துடன் வீடு கட்டும் இடம் எப்படி, அங்கு என்ன வரப்போகி றது என்பதை அறிந்து கொள்ளுதல் முக்கியமான விடயமாகும்.
- கட்டிட வரைபடத்தையும் (Floor plan) அதன் பரிமாணத்தையும் அறிந்துகொள் ளுதல் முக்கியமாகும். சில Floor plans உங்களுக்கு உங்கள் தேவைக்கு, மற்றும் மீள் விற்பனைக்கு உகந்ததாக இருக் காது. சில சமயங்களில் நீங்கள் அந்த வீட்டைத் திருப்பி விற்பதற்கு கரைச்சல் படலாம்.
- Mortgage – Builder தரும் வங்கித் தகவல்கள் சில சமயங்களில் மிகச் சிறந்ததாக இருக்காது. ஆகையால், அதை வேறு இடங்களில் விசாரித்து செய்யவும்.
- வீட்டிற்குத் தேவையான up grading செய்யும்போது மிகவும் கவனமாக இருக் கவும். சில விடயங்கள் நீங்கள் கட்டாய மாக Builder மூலமாக செய்ய வேண்டும். சிலவற்றை நீங்கள் போய் சில வருடங்க ளுக்குப் பின்பும் செய்துகொள்ளலாம்.

■ ■ ■

# CALL ME @ 416-873-5780 I CAN ARRANGE



| MORTGAGE RATES | |
|---|---|
| Variable | Prime - 0.90% |
| Fixed | Call me |

## MORTGAGE NEEDS

- Pre-Approvel, First Mortgage, Second Mortgage
- Buying a Second and a Third Home,
- New Immigrants, Self-Employed, 0% Down Payment Mortgage
- Re-Finance (To pay off outstanding debts or Personal needs)
- Equity line of Credit (If you have Equity in your Home)
- Renew your Mortgage with lower interest rate

## PERSONAL NEEDS

- Line of Credit, Loan, Credit Card
- Secured Credit Card ( To Re-Estabilish your Credit)
- No Credit History, I can arrange a Credit card to start your Credit

## BUSINESS NEEDS

- Mortgage for the Commercial Properties
- Money to start the Business, Buy the Existing Business
- Money to buy the Inventory, Improvements (lease Hold)
- Line of Credit, Credit Card



ViaFinancial Services Inc.

**Kethes Sivasubramaniyam**
Mortgage Consultant

**Cell : 416.873.5780**

**Our Office :** 5200 Finch Ave. E, Suite 304, Scarborough, ON. M1S 4Z5

# வருமானவரிச்சேவையில் பலவருடம் அனுபவம் வாய்ந்தவர்களினால் நம்பிக்கையான சேவை

**KETVAR**

**TAX & ACCOUNTING**

304-5200 Finch Ave.E, (Middlefield & Finch)
Toronto. ON M1S 4Z5
**Tel : 416-548-8005** Fax : 416-548-8006
Email : ketvar@gmail.com

- ❑ **Personal Tax**
- ❑ **Small Business Tax**
- ❑ **E-File Services**
- ❑ **Arrange RRSP**
- ❑ **Maximum Refund**
- ❑ **Tax Serving Advice**



# ஆயுட்காப்புறுதி



சிறீதரன் துரைராஜா
- ஆயுட் காப்புறுதி முகவர் -

ஆயுட்காப்புறுதி நிறுவனங்கள் ஒருவருக்கு மரணம் ஏற்பட்டவுடன் காப்புறுதிக்கான தொகையை தருவார்களா? அல்லது ஆயுட் காப்புறுதி நிறுவனம் Bankrupt ஆகிவிட்டால் என்ன செய்வது? அல்லது சிறிய காப்புறுதி நிறுவனங்கள் காணாமல் போய் விட்டால் என்ன செய்ய முடியும்? இப்படிப்பட்ட பலவிதமான கேள்விகள் மக்களிடையே இருக்கின்றது. இன்னும் சிலர் இப்படிப்பட்ட அச்சத்தால் காப்புறுதி செய்வதற்கு முன்வருவதில்லை.

ஆயுட்காப்புறுதி நிறுவனங்கள் அனைத்தையும் பாதுகாப்பதற்காகவும் காப்புறுதி செய்துள்ள மக்களை பாதிக்கப்படாமல் பாதுகாப்பதற்காகவும் COMPCORP அல்லது ASSURISஎன அழைக்கப்படும் நிறுவனம் இருக்கின்றது. இந்த நிறுவனம் COMP-CORP என முன்பு அழைக்கப்பட்டது. தற்போது ASSURIS என அழைக்கப்படுகின்றது. COMPCORP- Canadian Life And Health Insurance Compensation Corporation. அதாவது நீங்கள் காப்புறுதி பெறும் நிறுவனம் ஒரு COMPCORP அல்லது ASSURIS அங்கத்துவ நிறுவனமாக இருந்தால், உங்கள் காப்புறுதித் திட்டம் பாதுகாப்பானது. காப்புறுதி நிறுவனம் Bankrupt ஆகிப் போனால் அல்லது மூடிவிட்டு காணாமல் போய்விட்டால் COMPCORP அல்லது ASSURIS நிறுவனம் உங்கள் காப்புறுதித் தொகைக்கு பொறுப்பாக இருப்பார்கள்.

ஆயுட்காப்புறுதி $200,000 வரையும் சேமிப்புத் திட்டங்கள் $60,000 வரையும் இவர்கள் பாதுகாப்பார்கள். எனவே காப்புறுதி பெற்றுக் கொள்ளும் போது உங்கள் காப்புறுதி நிறுவனம் ASSURIS அல்லது COMPCORP இல் அங்கத்தவரா என்பதை அவதானிக்க வேண்டும். அண்மைக்காலங்களில் ஏராளமான நிறுவனங்கள் ஆயுட்காப்புறுதி விற்பனையில் ஈடுபட்டுள்ளதால் இந்த நிறுவனங்கள் யாவும் ASSURIS அல்லது COMP-CORP அங்கத்தவரா என்பதை அறிந்து கொள்ளுங்கள். அத்துடன் கனடாவில் காப்புறுதி விற்பனை செய்யும் முகவர்கள் எல்லோரும் ஒரு காப்புறுதி முகவருக்கான அனுமதிப் பத்திரம் வைத்திருக்க வேண்டும். இது இங்கே (ONTARIO PROVINCE) ஒன்ராறியோ அரசினால் வழங்கப்படுகின்றது. இந்த அனுமதிப் பத்திரம் கிட்டத்தட்ட உங்கள் சாரதி அனுமதிப்பத்திரம் (Driver's License) போன்று செயல்படும்.



AGENT'S LICENCE NO: Financial Services Commission of Ontario
LIFE INSURANCE AGENT
AGENT'S NAME HERE
LIFE INSURANCE AGENT STATUS
until April 11, 2008
unless this licence is lawfully suspended or revoked before that date
April 12, 2006 — Chief Executive Officer and Superintendent of Financial Services

PERMIS D'AGENT NO: Commission des services financiers de l'Ontario
AGENT D'ASSURANCE-VIE
AGENT'S NAME HERE
STATUT D'AGENT D'ASSURANCE-VIE
jusqu'au 11 avril 2008
sauf en cas de suspension ou d'annulation légale du permis avant cette date
le 12 avril 2006 — La directrice générale et surintendante des services financiers

காப்புறுதி முகவர்களுக்கான அனுமதிப்பத்திரம் ஒவ்வொரு இரண்டு வருடங்களுக்கு ஒருமுறை புதுப்பிக்கப்பட வேண்டும். அத்துடன் காப்புறுதி முகவர்கள் இந்த அனுமதிப் பத்திரத்தைப் பெறுவதற்கு முன்னர் LLQP எனப்படும் ஒரு பரீட்சையில் சித்தியடைந்திருப்பார்கள். (LLQP- LIFE LICENCE QUALIFICATION PROGRAM) அதன் பின்பு ஒவ்வொரு வருடமும் ஒரு குறிப்பிட்ட நேரம் காப்புறுதித் துறையில் தரமுயர்த்துவதற்காக கல்வி கற்க வேண்டும். இது CE CREDITS எனக் கூறப்படும். காப்புறுதி முகவர் ஒருவரிடம் காப்புறுதி பெற்றுக் கொள்வதற்கு முன்பு அவரிடம் சரியான காப்புறுதி அனுமதிப்பத்திரம் இருக்கிறதா என்பதை கேட்பதில் தவறில்லை. காரணம் காப்புறுதி அனுமதிப்பத்திரம் இல்லாமல் காப்புறுதி வழங்க முடியாது.

காப்புறுதி முகவர்களையும் வாடிக்கையாளர்களையும் பாதுகாப்பதற்காக ஒரு காப்புறுதித் திட்டமும் உள்ளது. அதாவது காப்புறுதி முகவர்கள் இந்த காப்புறுதி இல்லாமல் காப்புறுதி விற்பனை செய்ய முடியாது. இந்த திட்டத்தை (Error & Omissions Liability Insurance) என அழைப்பார்கள்.

எனவே இந்தக் காப்புறுதித் திட்டம் ஒரு காப்புறுதி முகவர் ஏதாவது தப்பு செய்து அல்லது தவறு செய்ததால் ஏற்படும் பாதிப்புகளிலிருந்து பாதுகாக்கும். அதாவது ஒருவருக்கு காப்புறுதி நிறுவனம் காப்புறுதி முகவர் விட்ட தவறினால் பணம் கொடுக்க முடியாத கட்டத்தில் இந்த (Error & Omissions) திட்டம் 2 மில்லியன் டொலர் வரை பாதுகாப்புத் தரும். எனவே காப்புறுதி பெறும் போது காப்புறுதி அனுமதிப் பத்திரம் உள்ள ஒருவரிடம் இருந்து காப்புறுதி செய்வதுடன் அந்த முகவரிடம் அதற்கான அனுமதிப் பத்திரம் சரியாக இருக்கின்றதா என்பதை பரிசோதித்துக் கொள்ளுங்கள்.

காப்புறுதித் திட்டம் என்பது காப்புறுதி நிறுவனத்திற்கும் உங்களுக்கும் உள்ள ஒரு ஒப்பந்தமாகும். இந்த ஒப்பந்தமானது நீங்கள் ஒரு குறிப்பிட்ட பணத்தை (Premium) மாதாந்தம் அல்லது வருடாந்தம் செலுத்த வேண்டும். அதற்கு பதிலாக காப்புறுதி நிறுவனம் உங்களுக்கு மரணம் ஏற்பட்டவுடன் நீங்கள் பலன் பெறுபவராக குறிப்பிட்டவருக்கு காப்புறுதியின் தொகையை வழங்குவார்கள். உங்கள் குடும்பத்தவருக்கு (Beneficiary) கிடைக்கும் காப்புறுதிப் பணத்திற்கு அரசவரி எதுவும் செலுத்த வேண்டியதில்லை (Tax Free). அத்துடன் கடன்காரர்களுக்கு திருப்பிக் கொடுக்க வேண்டியதும் இல்லை. அதாவது இறந்தவரின் கடன் அட்டைகள், வங்கிக் கடன்கள் போன்றவை காப்புறுதிப் பணம் கிடைத்தவரிடம் இருந்து அறவிட முடியாது. Insurance death benefits are tax free and creditor – proof.

■ ■ ■

# நான்கு காலங்களுக்கும் ஏற்றவாறு வீட்டைப் பராமரித்தல்



தரன் ரட்ணம்
- வீட்டுப் பரிசோதகர் -

எமது சமுதாயத்தில் தமது தேவைகளுக்கு ஏற்றவாறு வீடுகளை வாங்குவதும் விற்பதுவும் ஒரு சாதாரண நிகழ்வுகளாகிவிட்டன. ஆனால் வாங்கிய வீட்டை எங்களில் எத்தனை பேர் ஒழுங்காகப் பராமரிக்கின்றோம்?. ஒரு வீட்டைப் பராமரிப்பது என்றால் கூட்டுதல் துடைத்தல் மட்டுமே அல்ல. கனடாவைப் பொறுத்தவரை நான்கு காலங்களுக்கும் ஏற்றவாறு வீட்டைப் பராமரித்தல் வேண்டும். காலம் தவறாது வீட்டைப் பரிசோதித்து அதற்கேற்றவாறு வீட்டைப்பராமரிப்பது உங்களது மிகப்பெரிய முதலீட்டைப் பாதுகாக்கும் ஒரு நல்ல செயல் - முறையாகும். அத்துடன் வீட்டை விற்கும் பொழுது நல்ல விலைக்கும் விற்கலாம். கால அட்டவணைப்படி ஒவ்வொரு காலத்திற்குமான பராமரிப்பைச் செய்வதனால் பொதுவாக ஏற்படும் அல்லது அதிக செலவு மிக்க பழுதுகளை அவை ஏற்படும் முன்பே தடுக்கலாம். தேவை ஏற்படின் பழுதடைந்த பகுதிகள் என நீங்கள் கருதும் பகுதிகளைப் படமெடுத்து அவற்றை உரியவர்களிடம்காட்டி அவற்றிற்குரிய திருத்த வேலைகளைச் செய்யலாம்.

இக்கட்டுரையின் மூலம்
1. உங்களது மிகப்பெரிய முதலீட்டைப் பாதுகாப்பது எப்படி!
2. நீங்கள் வாழும் வீட்டை எவ்வாறு பாதுகாப்பாகவும் சுகாதாரமானதாகவும் பேணுவது! என்பவற்றை நீங்கள் அறிந்து கொள்ளலாம்.

## காலங்களுக்கு ஏற்ற வீட்டுப் பராமரிப்பு

பெரும்பாலான வீட்டுப்பராமரிப்பானது காலங்களுக்கு ஏற்றவாறு செய்யப்படுகின்றது. இலையுதிர் காலப்பகுதியில் குளிர் காலப்பகுதிக்கு உங்கள் வீட்டைத் தயார் பண்ணலாம். குளிர் காலப்பகுதியானது வீட்டைப் பெரும் தாக்கத்திற்கு உள்ளாக்கும் ஒரு காலப்பகுதியாகும் எனவே குளிர் காலப்பகுதியில் கட்டாயமாக முறையான பராமரிப்பைச் செய்தல் வேண்டும். அதாவது வீட்டின் பகுதிகளைப் பரிசோதித்து ஏதேனும் பிழைகள் காணப்படின் அவற்றை உடனடியாகத் திருத்துதல் வேண்டும். இளவேனிற் காலப்பகுதியில் குளிர் காலத்தில் ஏற்பட்ட பழுதுகளைத் திருத்துவதோடு வெப்ப காலத்திற்கு வீட்டைத் தயார் பண்ணுதல் வேண்டும். கோடை காலத்தில் வீட்டின் உள் வெளிப்பகுதிகளை பராமரிப்பதோடு வீட்டின் புகைபோக்கி கூரைகளைப் பரிசோதித்தல் வேண்டும்.

பெரும்பாலான வீட்டுப்பராமரிப்பானது காலத்திற்குக் காலம் செய்தாலும் சில பராமரிப்புக்களை அடிக்கடி செய்தல் வேண்டும். அவையாவன:

> “ **குளிர்காலப் பகுதியானது வீட்டைப் பெரும் தாக்கத்திற்கு உள்ளாக்கும் ஒரு காலப்பகுதியாகும் எனவே குளிர் காலப்பகுதியில் கட்டாயமாக முறையானபராமரிப்பை செய்தல் வேண்டும். வீட்டின் பகுதிகளைப் பரிசோதித்து ஏதேனும் பிழைகள் காணப்படின் அவற்றை உடனடியாகத் திருத்துதல் வேண்டும்.** ”

- உள், வெளிப்பகுதிகளுக்கான காற்றோட்டப் பகுதிகள் பனி குப்பைகளால் தடைப்பட்டுள்ளனவா என்பதைப் பார்த்து அவற்றை அகற்றி விடுதல் வேண்டும்.
- Range hood filters களை ஒவ்வொரு மாதமும் பரிசோதிப்பதுடன் சுத்தப்படுத்தவும் வேண்டும்.
- உங்கள் வீட்டில் காணப்படும் Ground fault circuit interrupters (இது ஒரு வகையான Plug ஆகும். பொதுவாக குசினி, கராஜ், வீட்டின் வெளிப்பகுதிகள், washroomகளில் காணப்படும்.) ஒவ்வொரு மாதமும் பரிசோதித்தல் வேண்டும்.

குறிப்பு: 6’ இற்குள் நீர் படும் இடங்களில் கட்டாயமாக GFCI Plug களைப் பொருத்துதல் பாதுகாப்பானதாகும்.

- உங்கள் வீட்டில் சிறு பிள்ளைகள் இருந்தால் வீட்டில் உள்ள Electrical outlets எல்லாம் பாதுகாப்பானதாக உள்ளனவா என்பதை அடிக்கடி பரிசோதித்தல் வேண்டும்.
- படிக்கட்டுகளின் கைப்பிடிகள் அசைகின்றனவா என்பதை அடிக்கடி பரிசோதித்தல் வேண்டும்.

இனி ஒவ்வொரு காலங்களுக்குமான வீட்டுப்பராமரிப்புக்கான கால அட்டவணைகளைப் பார்ப்போம்.

### இலையுதிர்காலம்

- எரியூட்டி (furnace) அல்லது வெப்பமூட்டும் தொகுதி (Heating system)என்பன வாயு எரியூட்டி எனின் இரு வருடத்திற்கு ஒரு முறையும் எண்ணெய் எரியூட்டிஎனின் ஒரு வருடத்திற்கு ஒரு முறையும் ஒரு தேர்ச்சிபெற்ற ஸ்தாபனத்தினைக் கொண்டு பழுது பார்த்தல் வேண்டும்
- furnace humidifier damper இனைத் திறந்து humidifier இனைத் துப்பரவு செய்தல் வேண்டும்
- எரியூட்டியின் விசிறியின் நாடா அசைகின்றதா அல்லது சத்தம் ஏற்படுத்துகின்றதா எனப் பரிசோதிக்க வேண்டும். விசிறியின் blades இலுள்ள அழுக்குகளை சுத்தப்படுத்துதல் வேண்டும்.

குறிப்பு: மோட்டருக்கான மின்னிணைப்பை முதலில் நிறுத்த வேண்டும்.

- வெப்பமூட்டும் காலப்பகுதியில் furnace air filter இனை ஒவ்வொரு மாதமும் பரிசோதித்து சுத்தப்படுத்துவதுடன் தேவை ஏற்படின் அதனை மாற்றலாம்.
- அசுத்தக் காற்றை வெளியேற்றி சுத்தமான காற்றை உள்வாங்கும் பகுதிகளான (ventilation system) வெப்பத்தைப் புகுத்தும் சாதனம் (recovery ventilator), வடிகட்டி(filters) என்பவற்றை இருமாதத்திற்க ஒரு முறை பரிசோதித்தல் வேண்டும்.
- Gas furnace pilot light இனைப் போட்டு விடவும்.
- Electric baseboard heaters இலிருந்து அழுக்குகளை vacuum cleaner இனால் சுத்தப்படுத்தவும்.
- எரியூட்டியிலிருந்து வெளிப்படும் சூடாக்கப்பட்ட காற்று அறைகளைச் சென்றடையும். குளிர்காற்று மீள்வழி துவாரங்களை மூடும் கம்பித்தடுப்புகளை அகற்றி காற்றுக்குழாய்களின் (duct)உள் பகுதிகளை vacuum clearner இனால் சுத்தப்படுத்தவும்.
- கோடை காலத்தில் வெப்பத்தை புகுத்தும் சாதனம் (Heat recovery ventilator) மூடப்பட்டு இருப்பின் அதன் உட்பகுதி வடிகட்டி என்பவற்றை சுத்தப்படுத்த வேண்டும். அத்துடன் எரியூட்டியிலிருந்து கழிவு நீராவி வெறியேறும் பிளாஸ்டிக் குழாயைப் பரிசோதிக்க. (இது HRV இன் அடிப்பாகத்திலிருந்து வெளியேறும்).
- தூக்கிச் செல்லக்கூடிய ஈரப்பதனிகள் இருப்பின் அவற்றைவச் சுத்தப்படுத்துக.
- கழிவு நீர்க்கிணற்றிலிருந்து கழிவு நீரினை வெளியேற்றும் பம்பி சரியாக இயங்குகின்றதா எனப் பரிசோதிக்க.(கழிவு நீர்க்கிணறு சில வீடுகளில் மட்டும் காணப்படும்.)
- உட்பகுதியில் உள்ள யன்னலின் சட்டத்திலுள்ள திரைகளை அகற்றி வெப்பப்படுத்தும் தொகுதியினால் வெளியேற்றப்படும் வளியினை படச்செய்வதனால் யன்னல் கண்ணாடியில் நீராவி படிவதைத் தடுக்கலாம்.
- தேவை ஏற்படின் கதவுகளிலுள்ள weatherstripping இனை மாற்றலாம்.
- வீட்டின் வெளிப்பகுதி யன்னல்கள், கதவுகள், skylight என்பவற்றை இறுக்கமாக மூடி விடுக.
- வெளிப்பகுதியுள்ள குளிரூட்டியின் பகுதியினை மூடி விடுக.
- வீட்டைச் சுற்றியுள்ள தரைப்பகுதியானது அத்திவாரத்தில் இருந்து வெளிப்பகுதி நோக்கி சரிவாக உள்ளதா என்பதை சரிபார்க்க. இதனால் வீட்டின் நிலக்கீழ் அறையுனுள் நீர் செல்வதைத்தடுக்கலாம்.
- வெளியே நீட்டிக்கொண்டிருக்கும் கூரைப் பகுதியில் இணைக்கப்பட்டிருக்கும் நீர் வடிகால், கூரைப்பகுதி இலுள்ள குப்பைகளைச் சுத்தப்படுத்த வேண்டும். கூரையிலிருந்து வழிந்தோடும் நீர் வெளியேறும் குழாய்கள் சரியாக உள்ளனவா எனப் பார்த்தல் வேண்டும்.
- புகைபோக்கியானது (chimney) பறவைகளின்கூடு போன்றவற்றினால் தடைப்பட்டுள்ளதா என்பதைப் பார்த்தல் வேண்டும்.
- வெளியில் பாவிக்கும் நீர் பாய்ச்சும் குழாய்களிலுள்ள நீரை அகற்றி அவற்றை மூடப்பட்ட இடத்தில் வைக்கவும்.
- வீட்டின் வெளிப்பகுதியிலுள்ள நீர் பாய்ச்சும் குழாய்களுக்கான வால்வினை மூடி விடுக.
- வெளிப்பகுதியிலுள்ள தளபாடங்களை பாதுகாப்பான இடங்களில் வைக்கவும். தோட்டப்பகுதியையும் சிறிய மரங்களையும் குளிர்காலத்திற்கு ஏற்றவாறு தயார்ப் படுத்துக.

### குளிர்காலம்:

- எரியூட்டியின் வடிகட்டியினை ஒவ்வொரு

57ம் பக்கம் பார்க்க...

**உங்களிடம் (நீங்கள் எடுத்த) அழகான புகைப்படங்கள் இருக்கின்றனவா?**
**அவற்றை நாங்கள் பிரசுரிக்க விரும்புகிறோம்.**
புகைப்படம் எடுத்தவரின் பெயர், விலாசம், தொலைபேசி இலக்கம், மின்னஞ்சல், புகைப்படம், எடுக்கப்பட்ட காட்சி அல்லது எடுக்கப்பட்டவருடைய விபரங்கள் என்பவற்றுடன் நீங்கள் எடுத்த புகைப்படத்தையும் அனுப்பிவையுங்கள். அவை இந்தப் பகுதியில் பிரசுரமாகும்.

**இம் மாத புகைப்படக் கலைஞர்**
**ராகுலன் சிறிதரன்**



லண்டனில் வசிக்கும் இவர் வரைகலை, பத்திரிகை, கணினி-தொழில்நுட்பம், புகைப்படம் ஆகிய துறைகளில் ஆர்வம் காட்டி வருகிறார்.



